உ

முருகா

# வடநாட்டு -
# - யாத்திரை

வெ. லெ. வெங்கடாசலம் செட்டியார்
அரியக்குடி.
1. 4. 1956.



**கிருபானந்தவாரி**

ஜய—புரட்டாசி 25 முதல்
,, மார்கழி 25 முடிய

**1955**

வெ. செ. வெங்கடாசலம் செட்டியார்.

# திருத்தல அட்டவணை

உ

முருகா

# முன்னுரை

"மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்கின்ற தாயுமானர் திருவாக்கின்படி, புண்ணிய தலங்களுக்குச் சென்று, புனித நீரில் முழுகி அங்குள்ள மூர்த்திகளைக் கண்டு தொழுவதால் சஞ்சித வினைகள் தொலையும். புத்தி தெளிவும் சித்த சாந்தியும் உண்டாகும்.

யாத்திரை புரிவதனல் பல்வேறு மலைகள், நதிகள், வளநகர்கள், வனங்கள் முதலிய அரிய காட்சிகளைக் காணும்போது அவைகளைப் படைத்த இறைவனுடைய பெருமை நன்கு சிந்தித்து வந்திக்க எண்ணமுண்டாகும்.

உலகம் காரியப்பாடுடையது. காரியம் கர்த்தனின்றி நிகழாது. அழகிய குடத்தைக் காணும்போது அதனைச் செய்தோனை நினைவு கூர்வது மதியுடைமையாகும். அது போல் உலகில் உள்ள நானுவகையான விசித்திரப் பொருள்களைக் காணும்போதெல்லாம் இறைவனுடைய நினைவு நல்லார்க்கு வாரா தொழியாது. எனவே யாத்திரையின் பயன் கடவுள் நினைவு முன்னையினும் பன்மடங்கு அதிகப்படுவதேயாகும். வெறுங் காட்சி மாத்திரமாக யாத்திரை புரிவது மாட்சியாகாது.

இனி யாத்திரையால் பல்வேறு மக்களுடன் பழகி அறிவு வளர்ச்சி யடையும். பல்வேறு மொழியறிவும் உண்டாகும்.

மற்றும் யாத்திரையைத் தொடங்குவதனல், பிறந்த வீடு, ஊர், தொடர்ந்த உறவினர் முதலியவர்களைப் பிரிவது பற்றைக் குறைப்பதற்கு ஒரு சாதனமுமாகும்.

நாம் பிறந்ததுமுதல் யாத்திரை செய்துகொண்டுதான் இருக்கின்றோம். அந்த யாத்திரைக்கு "மரணயாத்திரை"

என்று பெயர். அந்த யாத்திரை நமன் உள்ள தென் திசையை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றது. அதை அகற்றி கைலை நாதர் எழுந்தருளியுள்ள முத்தியாத்திரை புரிதல்வேண்டும். அதுவடக்கேநோக்கிச்செல்லவேண்டும். வடக்கு நோக்கிச் செல்வது என்றால் புகைவண்டியில் ஏறி வடக்குப் போவது என்று பொருளன்று. நமது மனம் மொழி செயல் ஆகியவைகள் இறைவனை நாடிச் செல்லவேண்டும். இறை யுணர்ச்சி யில்லாதார் சில சமயத்தில் வடக்கு நோக்கிச் சென்றாலும் உண்மையில் அவர்கள் தெற்கு நோக்கியே செல்லுகின்றனர்.

வடக்கிலிருந்து ஒரு நீள வண்டி தெற்கு நோக்கிப் போகின்றது. அவ்வண்டியின் தென் கோடியிலிருந்த சிற்றெறும்பு வடதிசையை நோக்கி ஊர்ந்து போகின்றது. எறும்பின் பிரயாணம் வடக்கு நோக்கிச் சென்றாலும் வண்டி தெற்கு நோக்கி வேகமாகச் செல்வதனால் அதன் பிரயாணம் தென்திசைப் பிரயாணமாகவேயாகும். அது போல் நாம் இருக்கின்றோம். ஆகவே நமது நினைவு தெய்வ நினைவாகவும், பேச்சு தெய்வத்தைக் குறித்ததாக வும், செயல் தெய்வச் செயலாகவும் அமையவேண்டும். இவைகட்கு அதிகம் துணைபுரிவது யாத்திரை யென உணர்க.

நாம் ஜபதபம் ,தியானம் பாராயணம் முதலியன செய்து வடக்கு நோக்கிச் செய்யும் பிரயாணம் எறும்பு ஊர்வது போன்ற அளவில் அதிமந்தமாக இருக்கின்றது. மற்றைய உலகியல் விவகாரங்களாகிய தெற்கு நோக்கிய பிரயாணம் விமான வேகத்தில் செய்கின்றோம். "சாமாறே விரைகின்றேன்" என்கின்றார் மணிவாசகர். ஆகவே இனியாவது நமது வடதிசை நோக்கிய பிரயாணத்தைச் சிறிது வேகமாகச் செய்ய முயலுதல் வேணடும்.

பற்பல நாடும் பற்பல நகரமும் பற்பல கோயிலும் சென்று சென்று இறைவனை உள்ளன்புடன் கள்ளமின்றி வணங்கினால் அப்பரமன் அந்த அடியார் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு நீங்காது உறைவான்.

நாடும் நகரமும் நன்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமா னென்று
பாடுமின்; பாடிப் பணிமின்; பணிந்தபின்
கூடி நெஞ்சத்துக் கோயில் கொள்வானே.

என்பது திருமூலர் திருமந்திரம்.

"மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்ற சிவஞானபோதச் சூத்திரப்படி சிவஞானங்கைவந்த சிவஞானிகளும் வாசனுமலம் தாக்காதிருக்கும்பொருட்டு திருத்தலயாத்திரை புரிதல் இன்றியமையாததாகும்.

"இறைவன் அங்கிங்கெனுதபடி எங்கும் ப்ரகாசமாய் நீக்கமற நிறைந்திருக்கின்றபடியால் இருந்த இடத்தில் இருந்தபடியே நினைத்தால் போதும்; திருத்தலந்தோறும் சுற்றியலைவது வீண்" என்று சிலர் பேசுவர்.

இறைவனைப் பன்முறையுந் தெரிசித்த திருஞான சம்பந்தர் முதலிய சமய குரவர்கள் நால்வர்களும், அருண கிரிநாதரும் தலங்கள் தோறுஞ் சென்று இறைவனை ஆரா அன்புடன் வழிபட்டார்கள் எனில், நம்மனோர்க்குத் திருத் தலயாத்திரை எத்துணை அவசியம் என்பதை நன்கு உணர்க.

இனி எங்குமிருக்கினும் தேவர்களால் முனிவர்களால் ஞானிகளால் நிறுவிப் பூசித்த மூர்த்தியில் விசேடமாக இறைவன் விளங்கித் தோன்றுகின்றான். பால் பசுவின் உடல் முழுவதும் பரவியிருப்பினும், அதன் மடிமூலம் வெளிப்படுவது போல், இறைவன் உலகமெங்கும் பரவி

யிருப்பினும், திருத்தலத்துள்ள திருமூர்த்திகளிலிருந்து வெளிப்பட்டுத் திருவருள்புரிவார் என உணர்க.

அண்மையில் வாழ்ந்த உண்மை ஞானியாகிய பாம்பன் சுவாமிகளும் கூட தலங்கள்தோறும் வழிபட்டார் எனவும், சிறப்பாகக் காசியாத்திரை புரிந்தார் எனவும் அவருடைய வரலாற்றினால் அறிகின்றோம்.

கங்கை நர்மதை முதலிய புண்ணிய நதிகளின் புனித நீர் உயிர்க்கு உறுதி செய்வதோடு உடம்புக்கும் உறுதி தருகின்றது. எல்லாம் ஒரு தண்ணீர்தான்; எங்கும் ஒரு மண்தான்; எங்கும் ஒரு கல் தான் என்று எண்ணக் கூடாது. இமயமலை எங்குமில்லாத ஒரு ஒப்பற்ற மலை; தெய்வீகம் பொருந்திய திருமலை. அதனால் கண்ணகி வடிவம் செய்ய எண்ணிய செங்குட்டுவன் என்ற தமிழ் மன்னன் இமயமலையிலிருந்து கல் கொணர்ந்தான் என்ற செய்தியை உற்று நோக்குக.

தேவகோட்டையில் நகர தனவணிகர்கள் தமதூரில் சேக்கிழார் திருவுருவம் புரிந்தபோது சேக்கிழார் அவதரித்த குன்றத்தூர் திருமலையிலிருந்து சிலை கொணர்ந்தனர் என்ற நற்செய்கை நனியுவகை தருகின்றது.

ஆகவே தீர்த்தயாத்திரை சிறந்ததெனஉணர்க. தெய்வ சிந்தனையின்றிச் செய்வது நலமன்று. தெய்வசிந்தனை யில்லாத பட்டினி, விரதம், யாத்திரை, தீர்த்தம் முதலியன நற்பயன் நல்கா. இதனைத் திருமூலர் தெரிவிக்கின்றார்.

நன்று நோற்கிலென்? பட்டினி யாகிலென்?
குன்றம் ஏறி இருந்தவஞ் செய்யிலென்?
சென்று நீரில் குளித்துத் திரியிலென்?
என்றும் ஈசன் என்பார்க்கன்றி யில்லையே.

கங்கை யாடிலென்? காவிரி யாடிலென்?
கொங்கு தண் குமரித்துறை யாடிலென்?
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்?
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே.

ஆதலினல் சிவசிந்தையுடன் திருத்தலந்தோறும் சென்று நன்னீராடி மூர்த்திகளைத் தெரிசிப்பார் இம்மை மறுமையென்ற இகபர நலங்களை எளிதிற் பெறுவர்.

இது கருதி எமது தந்தையார் சிவத்திரு. மல்லைய தாஸர் அவர்களும், தாயார் கனகவல்லியம்மையாரும், இருபது ஆண்டுகளுக்குமுன் காசியாத்திரை சென்று வந்தார்கள். பலஆண்டுகளாக அடியேனுக்கும் அடியார் குழாத்துடன் வடநாட்டுயாத்திரை புரியவேண்டும் என்று சாலவும் விருப்பமிருந்தது. வடலூர் சத்தியஞான சபைத் திருப்பணி முதலிய பொதுப் பணிகளில் ஈடுபட்டிருந்தபடி யால் அந்த விருப்பம் விரைவில் நிறைவேற முடியவில்லை. அன்றியும் காசியாத்திரையால் எனது வாழ்வில் ஒரு சிறந்த மாற்றமும் அமைய வேண்டும் என்று கருதியிருந் தேன். அதற்குரிய காலத்தை எதிர்பார்த்தேன்.

திருவருள் இப்போது கூட்டிவைத்தது. ஆங்காங்கு கண்ட அரிய காட்சிகளையும் வழிவகைகளையும் எழுதி நூல் வடிவாக வெளியிடவேண்டும் என்று எனது நண்பர் கள் பலரும் வற்புறுத்திக் கூறினர்கள். அதனல் இதனை வெளியிடலானேன்.

எமது யாத்திரையை வகுத்துத் தந்த எனது நண்பர் சென்னை திரு. C. S. தாமோதரமுதயாரவர்கட்கும்,(டூரிஸ்டு கார்) தனிப்பிரயாணவண்டி கிடைக்க பலவகையிலும் முன் னின்றுதவிய திரு.மு. ஷண்முகம்அவர்கட்கும், இந்த யாத் திரைக்கு உறுதுணையாயிருந்து உணவு முதலிய எல்லா வசதிகளையும் காலமறிந்து இடமறிந்து அமைத்துத் தந்த **சென்னை பாரத் ட்ராவல் சர்வீஸ்** அவர்கட்கும் எமதுஅன்புகலந்த நன்றி உரியதாகுக. எங்கும்நிறைந்த இறைவனுடைய திரு வருள் எல்லோர்க்கும் எல்லாநலன்களையும் வழங்குவதாக.

அன்பன்,

**கிருபானந்தவாரி.**

உ

முருகா

# வடநாட்டு யாத்திரை

[ஜய புரட்டாசி 25உ (11—10—54) முதல்
மார்கழி 25உ (9—1—55) முடிய]

## யாத்திரையாளர் மேற்கொள்ளும் முறை

(1) முதலாவதாக வீடு, நிலம், உறவு, பொன், பொருள் முதலியவைகள் மீதுள்ள அழுத்தமான பற்றைக் குறைத்துக்கொள்ளவேண்டும்.

(2) பிறருடன் சேர்ந்து யாத்திரை புரிவோர் பொறுமையும் சகிப்புத் தன்மையும் வெகுளாமையும் கைக்கொள்ளவேண்டும்.

(3) குளிர்ந்த நீரில் குளிப்பதைப் பழகிக் கொள்ளுதலும், சிறிதாவது நடக்கப்பழகிக்கொள்ளுதலும் அவசியமாகும்.

(4) வெய்யில், காற்று, குளிர், பசி, தாகம், நெருக்கம் இவைகளைத் தாங்கிக்கொள்ளவேண்டும். கூடுமானவரை சாமான்களைக் குறைத்துக்கொள்ளவேண்டும். முக்கியமாகத் தனது சாமான்களைத் தானே எடுத்துக்கொள்ளும் அளவில் அமைத்துக் கொள்வது நல்லது. அதனுல் கூலிகளுடன் போரிடும் துன்பம் வராது.

(5) ஒரு வேளை உணவு உண்டு, ஒரு வேளை சிறிய அளவில் சிற்றுண்டி உண்பது நல்லது. இதனுல் உடல் நலம் குன்ருது. மருத்துவர் உதவி தேடவேண்டி நேராது. வழி நெடுக விற்கும் பண்டங்களை வாங்கி யுண்ணக்கூடாது.

*அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்கு மாறு.*

என்ற திருக்குறளை மறவாமல் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

(6) புகைவண்டிக் கால அட்டவணை, இந்தியப்படம், காலத்தை நன்கு காட்டும் கடியாரம் இவைகள் இருத்தல் வேண்டும். தண்ணீர் பாத்திரம் இருக்கவேண்டும். படுக்கையிலேயே உடுக்கும் உடைகளை ஒழுங்காகத் தலை வைக்கும் பக்கம் வைத்துவிட்டால் அதுவே தலையணை யாகிவிடும். எனவே படுக்கையை எடுத்துக்கொண்டு திருவுசொம்பை எடுத்துக்கொண்டு தானே பிறர் உதவியின்றிச் செல்லவேண்டும். வடக்கே செல்லச் செல்ல குளிர் அதிகம் ஆதலின் உல்லன் போர்வை உல்லன் குல்லாய் வைத்துக்கொள்ளவேண்டும்.

(7) பலர் சேர்ந்து கூட்டாகச் 'செல்வதானால் ஒரு ஸ்டவ் இருப்பது நல்லது. டார்ச் விளக்கு, சிறு கயிறு, பூட்டு சாவி, சீதளத்தை மாற்றுங் கஸ்தூரி கோரோசனை மாத்திரைகள் முதலியவைகளை வைத்துக்கொள்ள வேண்டும். கயிறு, கொடி கட்டி வேட்டி யுலர்த்தவும், சில இடங்களில் தண்ணீர் இறைக்கவும் ஆகும். சாம்பார் பொடி, புளி இவைகளை ஒரு அளவுக்கு வைத்துக் கொள்ளுவதும் நல்லதுதான். வடக்கே புளி அகப்படுவதில்லை.

(8) பணத்தை அரைப் பையில் போட்டு இடையில் கட்டிக்கொள்ளவேண்டும். அதைப் பிறர் அறியா வண்ணம் சொக்காயால் மறைத்துக்கொள்ளவேண்டும். சிறிது சில்லரை மட்டும் வெளியே வைத்துக்கொள்ளவும்.

(9) யாத்திரை மனம் ஒத்த அன்பர்கள் நான்குபேர், கூடுமானால் எட்டுபேருடன் செய்வது நலம். அதிகக் கூட்டத்தைக் கூட்டிக்கொண்டு செல்வது துன்பம்.

வடக்கே ஒவ்வொரு தலங்களிலும் புகைவண்டி நிலயத்திற்கு அருகில் தருமசாலைகள் இருக்கின்றன. அது ஒரு பெரிய அநுகூலம்.

உடன் வருபவர்கள்பால் குற்றங் காணினும் அதனைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். யாத்திரை செய்யும்போது, பசி, தாகம், நடந்த அயர்ச்சி, வண்டியில் இடமின்மையால் வரும் துயர் இவைகளால் சிறிது சினம் மூள நேரும். அப்பொழுது சாந்தமென்ற நீரால் அச் சினத் தீயை அவித்து ஆறுதலாக இருக்கவேண்டும்.

சிறப்பாக நடந்து போகும்போதும், புகைவண்டி முதலிய வாகனங்களில் போகும்போதும் ஒருமைப்பட்ட மனதுடன் மூலமந்திரத்தை மனத்தால் நினைத்து ஜெபம் புரிதல் மிகமிகச் சிறப்புடையது. இதுதான் யாத்திரையின் உயிர். இதனல் எவ்வகைத் துன்பமும் நேராது. வழியில் வரும் இடையூறுகளையும் திருவருள் துணையால் வென்றுவிடலாம். கருணைக்கடலாகிய இறைவன் சென்ற சென்ற இடங்களிலெல்லாம் தோன்றாத் துணையாக நின்று அருள்புரிவான்.

## முன்னேற்பாடு

நியதியாகப் பல ஆண்டுகளாக அடியேன் ஒருநாள் கூடத் தவறாமல் செய்துவரும் பூஜைக்குத் தடைவரக் கூடாது என்றும், யாத்திரை இடரின்றி இனிதாக அமையவேண்டும், அதற்குரிய வழிவகைகள் என்ன என்றும் பலகாலும் சிந்தித்தேன்.

புகைவண்டி இலாகாத் தலைவர்கட்கு எழுதி (டூரிஸ்டு கார்) தனிப்பிரயாண ரெயில்பெட்டியைமூன்று திங்களுக்கு ஏற்பாடு செய்துகொண்டேன். வெய்யிற் காலமாகிய பங்குனி சித்திரை வைகாசி ஆனி மாதங்களும், கொடும் பனிக் காலமாகிய மார்கழி தை மாதங்களும் கூடா

என அநுபவசாலிகள் கூற அறிந்துகொண்டேன். ஆடியில் புறப்பட எண்ணினேன். நான் குறிப்பிட்ட புகை வண்டிப் பெட்டி கிடைக்காமையால் புரட்டாசியில் புறப்பட வேண்டியதாயிற்று.

யாத்திரைக்கென்று சிலகாலமாக உழைப்பின் மூலம் வந்த பொருளைத் தொகுத்துவைத்துக் கொண்டேன். பிறவிக்கு ஏதுவாகும் என்று கருதியும், என் உளக்கருத்துக்கு மாறுபட்டதென்று கருதியும் மதுரையில் திருப்புகழ் சபையினரும், தஞ்சையில் ராஜராஜ சமய சங்கத்தினரும் தரவந்த பொன் முடிப்புக்களை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டேன்.

கூடுமானவரை வடக்கேயுள்ள முக்கியத் தலங்கள் யாவையும் தெரிசிக்கவேண்டும் என்று கருதி மூன்று மாத காலம் அதற்கென்று ஒதுக்கிக்கொண்டேன்.

மேலும் யாத்திரை இனிது நடைபெறும் பொருட்டு சென்னை பாரத் ட்ராவல் சர்வீஸ் அன்பர்களை உடன் வந்து நடத்தித்தருமாறு அமைத்துக்கொண்டேன்.

புகைவண்டி தனிப் பிரயாணப் பெட்டி முப்பத்தெட்டு பேர் பிரயாணம் புரியக் கூடியது. படுக்கவும், இருக்கவும், குளிக்கவும், சமையல் செய்யவும் வசதியுள்ள பெட்டி. ஆட்டுரல் முதல் சகல அனுகூலங்களும் உள்ளது. சுருக்கமாகச் சொன்னால் ஒரு வீடு அசைந்து வருவது போன்றது. மிகவும் சுகமானது. விசிறி, இரவில் நீல நிற விளக்கு முதலியவை அப்பெட்டியில் இருப்பதேயன்றி மிகவும் அழகாக மெத்தை தைத்த ஆசனங்கள் அமைந்திருந்தன.

என்னுடன் பல நண்பர்கள் வந்து யாத்திரை புரிய விரும்பினார்கள். அவர்களுள் மிகவும் முக்கியமானவர்களை மட்டும் அழைத்துக்கொண்டேன்.

அடியேனுடைய குடும்பத்தில் 11 பேரும், நண்பர்கள் 30 பேரும் ஆக 41 பேர் ஆயத்தமானோம்.

வழிகாட்டி ஒருவர், புகைவண்டி ஏற்பாட்டுக்கு ஒருவர், சமையலுக்கு இருவர், பாத்திரங்களை யலம்ப ஒருவர், காவலுக்கு ஒருவர் ஆக அறுவர். பம்பாயில் வந்து கலந்த நண்பர் ஒருவர்; ஆக 48 பேர்கள் கூடினோம்.

போர்வைகள், உணவுத் தட்டுக்கள், படுக்கைகள், உடைகள், உல்லன் துண்டுகள் முதலியவைகளை சென்னையில் வாங்கித் தயாரித்துக் கொண்டோம். நஞ்சன்கூடு மருந்து ஏஜண்டு, பக்தமணி திரு. முத்துசாமி ஐயரவர்கள் சில சிறந்த மருந்துகளைக் கொணர்ந்து "வழிக்கு இவை உதவியாக இருக்கட்டும்" என்று தந்தனர்.

## யாத்திரையாளர்

| | | |
|---|---|---|
| 1 | கிருபானந்தவாரி | காங்கேய நல்லூர் |
| 2 | மறைஞான சிவம் | |
| 3 | கனகவல்லியம்மை | |
| 4 | அமிர்தலட்சுமி | |
| 5 | சுந்தரம்மாள் | |
| 6 | ச. ப. நடராஜ முதலியார் | |
| 7 | த. மு. அரங்கசுவாமி முதலியார் | |
| 8 | உமாமகேஸ்வரி யம்மை | |
| 9 | V. சிவகுரு முதலியார் | |
| 10 | சுரும்பார்குழலி | |
| 11 | கோடிலிங்கம் | |
| 12 | வ. பி. திருமூலசுந்தரம் செட்டியார் | நெல்லை |
| 13 | தி. சொர்ணத்தம்மாள் | |
| 14 | வீ. சங்கரன் பிள்ளை | |
| 15 | N. பழநிசாமி பிள்ளை | மதுரை |
| 16 | ப. பேச்சியம்மாள் | |
| 17 | ஏ. ரா. ம. பேச்சியம்மாள் | |
| 18 | மு. செல்லம்மாள் w/o ஜெ. மு. சாமி | |

| | | |
|---|---|---|
| 19 | L. A பரமன் செட்டியார் இந்தியன் பாங்க் காஷியர் | திருச்சிராப் பள்ளி |
| 20 | ரெ. சிவஞானம் பிள்ளை | பாச்சூர் |
| 21 | அழகம்மாள் | |
| 22 | தேவகுஞ்சரி | |
| 23 | அ. ரெங்கசாமி பிள்ளை | சுனைப்புகழ் நல்லூர். |
| 24 | ரெ. புஷ்பவேணி அம்மாள் | |
| 25 | S. M. நாகரத்தினம் பிள்ளை | |
| 26 | M. ஞானம்பாள் அம்மாள் | |
| 27 | P. S. பழநியப்பன் | பூவாளூர் |
| 28 | மா. வேல்சாமி பிள்ளை | தஞ்சை |
| 29 | N. ராமசாமி முதலியார் | மேல்பட்டாம்பாக்கம் |
| 30 | R. ராமசாமி ரெட்டியார் | |
| 31 | S. சீதாராம ரெட்டியார் | வெள்ளப்பாக்கம் |
| 32 | ப. வை. அண்ணாமலை முதலியார், | செ-பாளையம் |
| 33 | V. ராமச்சந்திர ரெட்டியார், | கரையாம்புத்தூர் |
| 34 | V. அர்த்தநாரி முதலியார் | ஈரோடு |
| 35 | அ. காவேரி அம்மாள் | |
| 36 | அ. மாரிமுத்து முதலியார் | |
| 37 | ப. ரெங்கம்மாள் | |
| 38 | மா. சின்னம்மை | சேலம் |
| 39 | P. பூமிலிங்கம் செட்டியார் | சென்னை |
| 40 | T. K. நடேசன் செட்டியார் | |
| 41 | N. பார்வதி அம்மாள் | |
| 42 | பா. மு. மாரிமுத்து முதலியார் | துறையூர் |
| 43 | T. V. சுப்பராவ், | புகைவண்டி அமைப்பாளர் |
| 44 | C. K. பரமேஸ்வர சர்மா | வழிகாட்டி |
| 45 | N. ராமசாமி ஐயர் | தஞ்சாவூர் சமயற்காரர்கள் |
| 46 | V. கிருஷ்ணையர் | |
| 47 | ராமசாமி | பாதுகாவலர் |
| 48 | சிட்டிபாபு | |

## சென்னையிலிருந்து புறப்பாடு

என்னுடன் யாத்திரை புரியும் அடியார்கள் அனைவரும் இரண்டு நாள்களுக்கு முன்னதாகவே சென்னை வந்து சேர்ந்தார்கள். சென்னையில் உள்ள திருமயிலை,

திருவான்மியூர், திருவொற்றியூர், கந்தசுவாமி கோவில், திருவல்லிக்கேணி முதலிய தலங்களைத் தெரிசித்தார்கள்.

ஜய—புரட்டாசி 25 (11—10—54) திங்கட்கிழமை.

எனது உழுவலன்பர். உயர்திரு நவாப் இராசமாணிக்கம் பிள்ளையவர்கள் என்னை வழியனுப்பும்பொருட்டு சூடம் சாம்பிராணி ஊதுவத்தி முதலிய சாதனங்களுடன் வந்தனர். அவருடைய காரில் பெட்டி மூட்டை படுக்கை முதலியவைகளைச் சென்ட்ரல் புகைவண்டி நிலையத்திற்கு அனுப்பிவிட்டேன்.

சென்னை அருணகிரிநாத பக்தஜனசபை அமைப்பாளரும் அமைச்சரும் தருமகுணசீலரும் ஆகிய உயர்திரு. N. V. சுப்ரமண்யஞ் செட்டியார் தமது திருப்புகழ் சபையுடன் வந்தனர். மாலை 3 மணிக்கு சிந்தாதிரிப்பேட்டையிலிருந்து திரு. வேதாசலஞ் செட்டியார் முதலிய அன்பர்களுடன் புறப்பட்டோம்.

"வழிபடுமவர் இடர்கடி கணபதி" என்பது திருஞானசம்பந்தருடைய தேவாரம். சென்னை சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பூந்தோட்டத்தில் இடர் தீர்த்த விநாயகர் என்று ஒரு பிள்ளையார் கோவில் உண்டு. வரதமான கோயில். அங்கு சென்று, அவருக்குப் பன்னீர் அபிஷேகம் புரிந்து, தேங்காய்கள் சூறையிட்டு, ஆராதனை செய்து, "கைத்தல நிறைகனி" என்ற பிள்ளையார் திருப்புகழைப் பாடி, "ஐந்துகரத்து ஆனைமுகக் கடவுளே! எங்கள் யாத்திரையை இனிது முடித்துக் கொடுத்தருள்" என்று வேண்டி அங்கிருந்து திருப்புகழ் பஜனை செய்து கொண்டே புறப்பட்டோம்.

சென்ட்ரல் புகைவண்டி நிலையத்தை யடைந்தோம். அப்பொழுது மணி 4. என்னை வழியனுப்பத் திரளான அன்பர்கள் அங்குவந்து கூடிநின்றார்கள். நூற்றுக்

கணக்கான அன்பர்கள் தங்கள் அன்பை ரோஜாமாலை மூலமாகக் காட்டினார்கள். ஒருவருக்குப் பின் ஒருவராக அன்பர்கள் சூட்டிய மாலைகள் பன்முறை களைந்துவைத்து சிறு மலர்க்குன்றாகக் குவிந்தது. அவர்கள் காட்டிய அன்பு மலைபோல் வளர்ந்தது.

இந்துமத தருமபரிபாலன சபைத்தலைவரும், உயர் சைவத் திருவாளரும், எனது நண்பராகிய உயர்திரு. **T. K. சங்கரவடிவேலு பிள்ளை** அவர்கள், யாண்டும் சைவம் பரவவேண்டும் என்று தவம்புரியும் உயர் திரு. **S. சச்சிதாநந்தம் பிள்ளை**யவர்கள் திருவொற்றியூர், அப்பர் மடாலயத் தலைவரும், மஹாதேஜோமண்டல அதிபரும் ஆகிய அத்தியாச்சிரமி ஸ்ரீலஸ்ரீ. **பாலசுந்தர சுவாமிகள்** அவர்கள், அறுவை வாணிபம் **கருப்பண முதலியார் ஸ்டோர்ஸ்** திரு. **மாரிமுத்து முதலியார்**, வர்ணவியாபாரம் **உ. ப. இரத்தினவேல் முதலியார், குப்புசாமி முதலியார், பாலசுப்ரமண்ய முதலியார், முத்துக் குமாரசுவாமி செட்டியார், புனிதவேல் முதலியார்,** சந்தி. **சி. சம்புலிங்க முதலியார்,** காஞ்சி **S. R. ஆதிநாராயண முதலியார்,** குடந்தை முன்னைநாள் நகராண்மைக் கழகத் தலைவர். **M. C. S. ரத்தினசபாபதி செட்டியார், சுந்தரம் பிள்ளை,** மதுரை **ஜே. மு. குருநமசிவாயம்,** பேபர் ஸ்டோர் **ப. உ. ஆ. சி. நடராஜ நாடார்,** உறையூர் **ஜே. மு. பாலசுப்ரமண்யம்,** ஜெயங்கொண்ட சோழபுரம். **மணிச் செட்டியார்,** ஈரோடு ரயில்வே கண்ட்ராக்டர் **K. V. சுப்பிரமணிய முதலியார், சே. ர. குமாரசுவாமி** B. A., படப்பை **த. கோ. பொன்னுசாமி முதலியார்,** வண்ணாரப்பேட்டை தரும **பூஷணி வள்ளியம்மையார்,** சென்னை கார்ப்பரேஷன் முன்னைநாள் உதவி மேயர் சிந்தாதிரிப்பேட்டை **லக்ஷ்மணசாமி முதலியார்,** வேலூர் ஷண்முகனடியார் சங்கத் தலைவர் திரு. **ஷண்முக முதலியார்,** திரு. **வரதா ரெட்டியார்,** ஆயுர்வேத மருத்துவர் திரு. **பட்டாபி,** பெரம்பூர். **அரங்கநாதன்,** பெரம்பூர் **மு. ஷண்முகம், V. R. பீதாம்பரம், பாண்டுரங்கம், ஜெயராமன், த. தண்டபாணி,**

காந்திய அன்பர் மு. பெருமாள், தஞ்சை திரு. சிவசங்கரபட், நராண துரைக்கண்ணன் (ஜீவா), V. C. D. சர்மா, தேவாரம் C. சங்கரலிங்கம் பிள்ளை, தேவாரம் காஞ்சி. ஆ. விநாயக முதலியார், தேவாரம் A. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார், குயப்பேட்டை C. முத்துசாமிபிள்ளை, முத்துநாடார், மாணிக்கம்பிள்ளை, இன்னும் பல அன்பர்கள் வந்து எத்தனையோ விதமாகத் தங்கள் அன்பைக் காட்டி உபசரித்தார்கள்.

எல்லோரும் மாலையிட்டு முடிந்தபின்னை என்னையே விழுங்குமாறு மிகப் பெரியதான ஒரு பூமாலையை அன்பர் நவாப் இராஜமாணிக்கம் பிள்ளை யவர்கள் சூட்டி 'சாமியே சரணம் ஐயப்பா' என்று ஓலமிட்டனர். "யானாகிய என்னை விழுங்கி வெறுந் தானாய் நிலை நின்றது தற்பரமே" என்ற அநுபூதியை அது நினைவூட்டியது. என் கைப் பையி லிருந்த திருநீறு முழுவதும் காலியாகிவிட்டது.

"வருசிவனடியவர் ஹரஹர எனமுறை
வழங்கு கடல்போல் முழங்க ஒருபால்"

என்று அருணகிரிநாதர் கொலுவகுப்பில் கூறியாங்கு "நமப்பார்வதீ பதயே! ஹரஹர மஹாதேவா!" என்ற ஒலி மண்ணை அசைத்து விண்ணைப் பிளந்தது. எல்லோரும் நிறைந்த அன்புடன் வாழ்த்தியும் வணங்கியும் கண்களில் அன்பு நீர் பொழிய நின்று வழியனுப்பிய காட்சி என்றென்றும் மறக்கமுடியாது.

மாலை 5-25 மணிக்கு எங்கள் S. RY. C. T. T. 283 நெ. காரேஜ் இணைத்த புகைவண்டி புறப்பட்டது. அறு கோணம் வரும்வரை பல அன்பர்கள் ஒவ்வொரு நிலையத் திலும் வந்து திருநீறு பெற்று மகிழ்ந்தார்கள்.

இரவு 8-40 மணிக்குத் திருத்தணியை யடைந்தோம். அங்கு வளைகுளம் திருப்புகழ் சபையார் பெருங் கூட்ட மாக வந்து வரவேற்று உபசரித்தார்கள். அவர்கள் அன்பு வெள்ளத்தில் நீந்தினோம். அன்றிரவு வண்டியில் இருந்து கூட்டு வழிபாடு செய்தோம்.

## திருத்தணி

ஜய—புரட்டாசி 26 (12—10—54)

காலையில் பாண்டவ தீர்த்தத்தில் முழுகி நித்திய வழிபாட்டை முடித்துக்கொண்டு, திருப்புகழ் பாடிக் கொண்டே கோஷ்டியுடன் மலையேறி தணிகாசலபதியைக் கண்ணாரக் கண்டு, வாயார வாழ்த்தி, கையாரத் தொழுது, தலையார வணங்கினோம். அக்கோயில் அதிபர் மின்னல் தருமகுணசீலர்கள் பட்டு. **செங்கழுநீர்** முதலியார், அவர் தம்பி பட்டு. **முருகேச** முதலியார் என்பார்கள் அங்கு மாலை சூட்டி மிகவும் உபசரித்தார்கள். கோயில் வழிபாடு முடிந்த பின் மண்டபத்தில் அனைவரும் அமர்ந்தனர். அங்கு **'காசி யாத்திரையின் தத்துவம்'** என்பதுபற்றி அடியேன் ஒரு விரிவுரை நிகழ்த்தினேன்.

### விரிவுரைச் சுருக்கம்

"இறைவனைக் குறித்துச் செய்யும் ஆராதனை அர்ச்சனை ஜபம் தவம் தியானம் முதலியவையே நம்மை முத்தியுலகம் சேர்க்கும் நல்ல யாத்திரையாகும்.

"காசியில் இறந்தால் முத்தி" என்பதன் கருத்து, உடம்பிலுள்ள உயிர் பிரிவது என்பது அல்ல. ஆயிரம் கொலை புரிந்த ஒரு தீயவன் காசியில் சென்று கழுத்தில் கயிறு பூட்டி மாள்வானாயின் அவன் முத்தி யடைய மாட்டான் அல்லவா?

திருவாரூர் - மூலாதாரம்; திருவானைக்கா - சுவாதிஷ்டானம்; திருவண்ணாமலை - மணிபூரகம்; சிதம்பரம்- அநாகதம்; திருக்காளத்தி – விசுத்தி; காசி - ஆக்ஞை.

ஆக்ஞா என்ற புருவ நடுவில் நாட்டத்தை நிறுத்தி முப்பத்தாறு தத்துவங்களினின்றும் கழன்று அப்பாலுக் கப்பாலாகிய அதீத நிலையில் நிற்பதுவே காசி யடைந்த தாகும். அந்நிலையே காசியைக் கண்டு இறந்ததாகும்.

திருவளர் ஆரூர் மூலம் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூழ் அண்ணு மலைமணி பூரம் நீவிர்
இருவருங் கண்ட மன்றம் இதயமாம் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமே காசி.

—திருவிளையாடல்.

"கருவிகள் நாலொன்பதும் வேற தாகக்
கண்டகன்ற அதீத நிலை காசியாகும்"

—சிவஞானதீபம்.

எனவே காசியிலே சென்று எனது யான் என்பவைகளை அறுத்து கருவி கரணங்களினின்றுங் கழன்று தன்னந் தனி நிலையில் நிற்கவேண்டும்; தன்னை மறக்க வேண்டும்.

"நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந்தேன் இறந்தே விட்ட திவ்வுடம்பே"

—கந்தரலங்காரம்.

"உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலை யாரவாரமற
உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவர் அநுபூதி யானதுவும்."

—திருவகுப்பு.

இந்த நிலையை வெளி முகத்தில் அறிவிப்பது காசியாகும். இதுதான் காசியாத்திரையின் ஜீவன். இந்த நிலையை நாம் பெறுவதற்கு முயலுதல் வேண்டும். இத்தகைய குறிக்கோளுடன் இந்த யாத்திரை தொடங்கியுளது. முருகவேள் முழுமுதற் கருணை முன்னின்று இனிது முடித்துத் தரும்."

வழிப்பட்டார் வினைகளைத் தணிப்பதனால் அத்தலம் **தணிகை** எனப் பேர் பெற்றது.

வளைகுளம் திருப்புகழ் சபையார் காலை யுணவு தந்தும், வழிக்கு அவல் முதலியன தந்தும் உபசரித்தார்கள்,

பகல் 12 மணிக்கு மீண்டும் எங்கள் வண்டி புறப்பட்டது. ரேணிகுண்டா வழியே மாலை 4 மணிக்குத் திருக்காளத்தி சேர்ந்தோம்.

## திருக்காளத்தி

புகைவண்டி நிலயத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலையில் பொன்முகலிக்கரையில் திருக்காளத்தி விளங்குகின்றது.

காங்கேயநல்லூர் முருகன் கோயில் தருமகர்த்தர் திரு. K. S. **பாலசுப்ரமண்ய முதலியார்** திருத்தணியில் வந்து மிகவும் அன்புடன் உபசரித்து திருவேங்கடம்வரை உடனிருந்து உதவினர். வண்டியில் பலரும், நடந்து சிலருமாகச் சென்றோம். பொன்முகலியில் மாலை அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு திருக்கோயிலுக்குச் சென்றோம்.

கண்ணப்ப நாயனர் வழிபட்ட அருமையான தலம் திருக்காளத்தி; தென்கயிலாயம். நக்கீரர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பி ஆரூரர் முதலிய ஆன்றோர்கள் பலர் வழிபட்டுப் பாடிய தலம். அங்குள்ள சிவலிங்கம் தீண்டாத் திருமேனி.

சிவலிங்கத்தில் அடிப்பகுதியில் சிலந்தி வடிவமும், இடையில் இரு யானைக்கொம்புகளின் வடிவமும், அதற்கு மேல் கண்ணப்பர் அப்பிய திருக்கண்ணும், முடியில் ஐந்தலை நாகவடிவமும் காணப்படுகின்றன. இவைகள் ஒன்றுபட்ட வடிவமே சிவலிங்கமாகக் காட்சியளிக்கின்றது. சிவலிங்கம் உயரமான வடிவம்.

பச்சை கற்பூரம் கலந்த தண்ணீரை வலம்புரி சங்கில் வார்த்து ஆதிசைவர் திருமேனியைத் தீண்டாமல் அபிஷேகம் புரிகின்றனர். மூர்த்தியைக் காண உள்ளம் உருகுகின்றது; சிவலிங்கத்தின் வலப்பக்கத்தில்

கண்ணப்பர் மிகவும் அழகாகவும் கம்பீரமாகவும் நிற்கின்றனர். அங்கு ஒரு விளக்கில் இரு திரியிட்டு இரு சுடர்கள் எரிகின்றன. வாயுத்தலம் என்ற குறிப்பினுல் ஒரு சுடர் மட்டும் அசைந்துகொண்டே எரிகின்றது.

சுற்றுப் பிரகாரத்தில் பெரிய முருகக் கடவுள் திருவுருவம் அழகாக இருக்கின்றது. திருக்கோயில் மிகப் பெரியதாக, தேவகோட்டை நகர தனவணிகர் புதுக்கியிருக்கின்றனர். நதிக்கரையில் திருக்கோயில் மிக அழகாக அமைந்துள்ளது.

அபிஷேக சமயத்திலேதான் சிவலிங்கத்தைத் தெரிசிக்க இயலும். ஏனைய காலத்தில் சிவலிங்கத்திற்கு முன் ஒரு லிங்கவுருவந் தீட்டிய ஒரு திரை விட்டுளது. சுவாமி மேற்கே நோக்கியுள்ளனர். அம்பிகை ஞானப் பூங்கோதை கிழக்கே நோக்கியுள்ளனர். அம்பிகை மிக அழகிய வடிவம். அங்கு பூசை புரியும் சிவஸ்ரீ. சுப்ரமணிய சிவாச்சாரியார் அர்ச்சனை செய்து திருநீறு குங்குமப் பிரசாதம் வழங்கினுர். மாலை 7 மணிக்குள் கோயில் வழிபாட்டை முடித்துக்கொண்டு திரும்பினேம். மீளவும் புகைவண்டியில் இரவு 8-30 மணிக்குப் புறப்பட்டு இரவு 11-12 மணிக்கு திருவேங்கடமலை சேர்ந்தோம். புகைவண்டி நிலையத்திற்கு மிக அண்மையில் கோயிலாருடைய அறச்சாலை கடல்போல் பரந்து விசாலமாக இருக்கின்றது. ஒரு ஊர்போல் இருக்கின்றது. அதில் சென்று தங்கினேம்.

## திருவேங்கடம்

### ஜய—புரட்டாசி 27 (13—10—54)

கடம் – பாவம்; வேம் - வேகவைப்பது; பாவத்தை வேகவைக்குந் தன்மையுடையது வேங்கடமலை. இது முருகவேளும் திருமாலும் எழுந்தருளியுள்ள தலம். கால

மாறுபாட்டால் முருகவேள் திருவுருவம் மறைந்துளது. முருகவேள் அம்பிகையின் இளங் குழவியாயிருந்தபோது சிறு முனிவுகொண்டு திருக்கயிலாய மலையிலிருந்து ஒரு குகை வழியாக வந்து திருவேங்கடத்திருந்தனர். குமாரக் கடவுள் சூரசங்காரத்தின் பொருட்டு தென்திசை நோக்கி வரும்போது முன் தான் வந்து தங்கியிருந்த அத் திருமலையைப் பார்த்தருளினர் என்று கந்தபுராண வழி நடைப் படலத்தில் ஒரு கவி வருகின்றது.

அண்ட மன்னுயி ரீன்றவளுடன் முனிவாகி
தொண்டகங் கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே ஓர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் திருவேங்கடத்திற்கு உண்டு. திருமாலைக் குறித்து ஆழ்வார்கள் பாடிய பாடல்களும் உள.

மிகவும் அருமையான மலை. வருவாய் நிரம்ப வரக் கூடிய தலம். கோயிலார்கள் அடிவாரத்திலும் மலைமீதும் எண்ணிலாத சத்திரங்கள் புதுக்கி தண்ணீர்க் குழாய் முதல் எல்லா வசதிகளையும் அமைத்து, வந்து தங்கும் யாத்ரிகர்கட்குச் சமையல் செய்ய ஏனங்கள் இலவசமாக வழங்கி உதவுகின்றார்கள். பொதுவாக அந்த அறச் சாலைகள் தூய்மையாக இருக்கின்றன. தங்குபவர்கட்கு ஒருவகையான இடர்களும் கிடையாது.

எங்களூர் முருகன் கோயில் அறக்காவலர் திரு K. S. பாலசுப்ரமண்ய முதலியார் கோயிலாருடைய மோடார்பஸ் மலைக்குப்போக ஏற்பாடு செய்துகொடுத்தார். அதிகாலை எழுந்து எல்லோரும் நீராடி, நீருடி வழிபாடு செய்தோம். காலை 7-15 மணிக்கு பஸ்ஸில் புறப்பட்டு திருமலைமீது

சென்றோம். சென்றவுடன் திருவருளால் எளிதாக மலை மீதுள்ள பெருமானுடைய தெரிசனை நன்கு கிடைத்தது. அமைதியாகவும் நெருக்கடியின்றியும் திருவேங்கட நாதனைச் சேவித்தோம்.

பகல் 2 மணிக்கு அடிவாரம் வந்து சேர்ந்தோம்.

மாலை 6 மணிக்கு ஒரு தனி பஸ் அமைத்துத் திருச்சானூர் சென்றோம். அங்குள்ள அலர்மேலம்மையைத் தெரிசித்தோம். அலர்மேல்மங்கை கோயிலுக்கு அருகில் வேணுகோபாலர் சந்நிதியுளது. "எனது திருவடியே எல்லாத் தீர்த்தமும்" என்று கண்ணபிரான் பலராமருக்குக் காட்டிய பாவனையில் அம்மூர்த்தியுளது. இரவு 8 மணிக்கு மேல் குதிரை வண்டிகளை ஏற்பாடு செய்துகொண்டு திருப்பதி வந்து சேர்ந்தோம். திருப்பதிக்கும் திருச்சானூருக்கும் 3 கல் தொலை.

## ஜய-புரட்டாசி 28 (14—10—54)

திருவேங்கட மலைச்சாரலில் உள்ள கபில தீர்த்தத்திற்குச் சென்று காலையில் யாவரும் முழுகினோம். அத் தீர்த்தக் கரையில் **கபிலேச்சுரர்** என்ற சிவாலயத்தை வணங்கி வழிபட்டோம். அன்று திருக்கார்த்திகை. ஆதலினால் அச் சிவாலயத்துள்ள முருகப் பெருமானையே பழநியம்பதிப் பரமனாக நினைத்துத் தொழுதோம். பின்னர் அறச்சாலை வந்து நித்திய வழிபாடு செய்தோம்.

மாலை 6 மணி முதல் 7–30 மணிவரை இராமலிங்கர் தமிழ் மாணவர் கழகத்தில் "தமிழ்" என்னும் பொருள் பற்றி அடியேன் விரிவுரை செய்தேன்.

பின்னர் கோதண்டராமர் கோயில், கோவிந்தராஜப் பெருமாள், ஆண்டாள், ராஜலட்சுமி முதலிய மூர்த்திகளைத் தெரிசித்தோம்.

ஜய - புரட்டாசி 29 (15—10—54)

காலை எழுந்து நீராடி வழிபாடு செய்து, காலை 9மணிக்குப் புகைவண்டியில் ஏறி 9-30 மணிக்கு ரேணிகுண்டா வந்தோம்.

பகல் 2-22 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டோம். புகைவண்டி சென்றுகொண்டிருக்கும்போதே மாலையில் எல்லோரும் கூட்டு வழிபாடு செய்தோம். விடியற்காலை 4-17 மணிக்குக் குண்டக்கல் சேர்ந்தோம்.

ஜய - புரட்டாசி 30 (16—10—54)

குண்டக்கல்லில் எனது நண்பர்கள் வந்து நீராடவும் வழிபாடு செய்யவும் அனுகூலம் புரிந்தார்கள். அங்கு அவர்கள் செய்த உதவி மிகவும் பாராட்டுதற்குரியது.

நான்மணிக்கடிகையில் ஒரு பாடல் இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

கற்புடைய மனைவி யில்லாதிருத்தல் வீட்டிற்குப்பாழ்; நல்ல நண்பர்கள் இல்லாதிருத்தல் சென்ற இடத்திற்குப் பாழ்; பெரியோர்கள் இல்லாதிருத்தல் சபைக்குப் பாழ்; கற்ற நூலறிவு இல்லாதிருத்தல்எடுத்த பிறவிக்குப்பாழ்.

மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை; தான்செல்லுந்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை;—இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை; தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு.

## கிட்கிந்தை (ஹம்பி)

குண்டக்கல்லிலிருந்து கிஷ்கிந்தை போகும்பொருட்டுப் புறப்பட்டோம். அது சிறிய இருப்புப் பாதை யாதலினால் எங்கள் வண்டியை குண்டக்கல்லில் விடுத்துவிட்டு, வேறு சிறிய புகைவண்டியில் நாங்கள் அனைவரும் ஏறி காலை 9 மணிக்குப் புறப்பட்டோம். இடையில் **பல்லாரி** வந்

தது. அங்கு திரு. V. S. குமாரசுவாமி முதலியார் என்பார் வந்து சிற்றுணவும் பாலுந் தந்து மிக்க அன்புடன் உபசரித்தனர்.

பகல் 12-30 மணிக்கு ஹாஸ்பெட் சேர்ந்தோம். அங்கிருந்து கிட்கிந்தை 7 கல். நாங்கள் போகவர ஒரு பஸ் அமைத்துக்கொண்டு மாலை 2-15 மணிக்கு கிட்கிந்தை சேர்ந்தோம்.

அங்கு விஜயநகர சமஸ்தானம் இருந்து கால வேறுபாட்டாலும் பகைவருடைய அநீதியாலும் பெரிய பெரிய கோயில்களும் கட்டிடங்களும் அழிந்து கிடக்கின்றன. அவைகளைப் பார்க்கின்றபோது மனம் பரிதாபம் அடைகின்றது.

**துங்கபத்ராநதி** ஓடுகின்றது. பெரிய வனத்திற்கு இடையே அந்த நதி பளிங்குபோல் தூய்மையான தண்ணீருடையதாக வளைந்து வளைந்து செல்லுகின்றது. குளிப்பதற்கு இனியதாக இருக்கின்றது.

பெரிய வடிவில் ஒரு பிள்ளையார் கோவில் உளது. வாலி பூசித்த சிவாலயம் மிகப் பெரியதாகக் கோபுரம் திருமதில் முதலியவைகளுடன் அக் கோயில் ஒன்று மட்டும் நல்ல நிலையில் விளங்குகின்றது. சுவாமியின் திருநாமம் **விருபாட்சர்.** கோயிலுக்கு விரூபாட்சம் என்று பேர். கோயிலுக்குக் கிழக்கே ஒரு பர்லாங்கு தொலையில் துங்கபத்ரா நதியில் சக்ரதீர்த்தம் என்ற துறையில் நீராடினேம். அதன் கரையில் ஸ்ரீராமர் திருக்கோயில் உளது.

அப்பொழுது பெருமழை வந்துவிட்டது. அம்மழையில் அத்தனைபேரும் நனைந்துவிட்டோம். கடுங் குளிராலும் வருந்தினேம். அங்கிருந்து 2 பர்லாங்கு தொலையில் ஒரு பெரிய இடிந்த கோயில் உளது. அதற்குப் போகும் வழியிலும் பல இடிந்த கோயில்கள் காணப்பட்டன. அந்த கோயிலுக்கு மழையில் நனைந்து சென்றேம்.

அக் கோயிலில் கல் தேரும், அழகிய சித்திர வேலைப்பாடு கள் நிறைந்த மண்டபங்களும் இருந்தன. அதைப் பார்த்துவிட்டு மீண்டும் மழையில் நனைந்த வண்ண மாகவே துங்கபத்ரா நதி ஓரமாக வழுக்குத் தரையில் மிக வும் இடர்ப்பட்டு விரூபாட்சம் என்ற கோயிலுக்கு வந்தோம்.

அங்கிருந்து பார்த்தால் மதங்கமலை தெரிகின்றது. இம்மலையில்தான் ஸ்ரீராமர் சுக்ரீவனைச் சந்தித்து அருள் புரிந்தது. வாலிக்கு அஞ்சி ஓடிய துந்துபி ஒளிந்த குகை யும் சபரிஆஸ்ரமமும் அங்கிருந்து 4, 5 கல் சென்று பார்க்க வேண்டும் என்று கூறினர்கள்.

நாங்கள் விரூபாட்சம் கோயிலில் சிவபெருமானை வழிபட்டுத் திரும்பினேம். எங்களுடன் வந்த ஒரு பெரிய வர் நாங்கள் வழிபட்டுத் திரும்பச் சிறிது காலதாமதம் ஆனபடியால் வேறு பஸ்ஸில் ஏறி ஹாஸ்பெட் சென்ற னர். அதை நாங்கள் அறியாமல் ஒரு மணி நேரம்வரை இரவில் இருளில் விளக்கு வைத்துத் தேடித்தேடி அயர்ச்சி யடைந்து வருந்திய மனதுடன் பஸ்ஸில் புறப் பட்டு இரவு 8 மணிக்கு ஹாஸ்பெட் சென்றேம். அங்கே நாங்கள் தங்கியது கோட்டா நஞ்சப்ப செட்டியார் தரும சாலை. அது புகைவண்டி நிலயத்திற்கு 1 கல் தொலையில் உளது.

பின்னர் உடனடியாக அதே பஸ்ஸில் 3 கல் தொலை யில் உள்ள துங்கபத்ரா அணை சென்று பார்த்தோம். எண்ணிலாத விளக்குகளுடன் கண்ணுக்கு விருந்தாக அது காட்சியளித்தது. அதைப் பார்த்துவிட்டு மீண்டும் ஹாஸ்பெட் வந்து புகைவண்டி நிலயத்தில் தங்கியிருந்து விடியற்காலை 4 மணிக்குப் புகைவண்டி யேறி காலை 7-30 மணிக்கு குண்டக்கல் சேர்ந்தோம்.

ஜய—ஐப்பசி 1உ (17—10—54)

ஐப்பசி முதல் தேதி காலை துலாஸ்நானம் குண்டக்கல் புகைவண்டி நிலையத்தில்தான் செய்ய நேர்ந்தது. அங்குள்ள நண்பர்கள் நீராடவும் வழிபாடு செய்யவும் உதவி செய்தார்கள்.

காலை 9 மணிக்கு மீளவும் எங்கள் வண்டியில் ஏறி பண்டரிபுரத்தை நாடிப் புறப்பட்டோம். துக்கபத்ரா நதியையும், ரெய்ச்சூர் சந்திப்பையும், கிருஷ்ண நதியையுங் கடந்து சென்றோம்.

மாலை 6-30 மணிக்கு வண்டியிலேயே கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 9 மணிக்கு **குருதுவாடி** சந்திப்பை யடைந்தோம்.

ஜய—ஐப்பசி 2உ (18—10—54)

## பண்டரிபுரம்

அதிகாலை எழுந்து 6-40 மணிக்குச் சிறிய இருப்புப் பாதை புகைவண்டியில் ஏறி, காலை 8-20 மணிக்குப் **பண்டரிபுரம்** சேர்ந்தோம். புகைவண்டி நிலையத்திலிருந்து ஊர் 1 கல் தொலைக்குள்ளாக இருக்கின்றது. வழியில் உள்ள காட்கே பகராஜ் தருமசாலையில் தங்கினோம்.

**பீமநதி** என்று ஒருநதி அங்கு ஓடுகின்றது. அந்நதி பண்டரிபுரத்தைச் சந்திரனைப்போல் வளைந்து போவதனால் அந்த இடத்தில் **சந்திரபாகா** என்று பேர் பெறுகின்றது. அந்நதியில் துக்காராமர் சமாதிக் கோயில், புண்டரீகன் என்ற பக்தனுடைய சமாதிக் கோயில் முதலியன அழகாக விளங்குகின்றன.

சந்திரபாகையில் நீராடி வழிபாடு செய்தோம். மாலை படகில் ஏறி நதியிலே சென்று பண்டரிபுரத்திற்குக் கிழக்கே **கோபாலபுரம்** என்ற ஊருக்குச் சென்றோம். செல்

லும் வழியில் நாரதர் கோயிலும் விஷ்ணுபாதமும் நதியின் நடுவில் இருக்கின்றன. கோபாலபுரத்தில் சக்குபாய் சமாதிக் கோயிலும், பாண்டுரங்கர் சக்குபாய்க்குக் காட்சி தந்த திருவுருவங்களும் திகழ்கின்றன. பூமிக்குள் சிறு குகை மாதிரியுள்ள கோயிலில் சென்று அவைகளைத் தெரிசிக்கவேணும். சக்குபாய் வரலாற்றின் சின்னங்களாக தயிர் கடைந்த மாதிரியும், திருவை திரித்த மாதிரியும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மீண்டும் பண்டரிபுரம் வந்து, நதியில் அநுஷ்டானம் புரிந்துகொண்டு பண்டரி நாதரைத் தெரிசித்தோம்.

பாண்டுரங்கர் அழகாகக் காட்சி தருகின்றார். மூர்த்தியை நன்கு அலங்கரித்து வைத்திருக்கின்றனர். பக்தர்கள் பெருமானுக்கு முன்னுள்ள மண்டபத்தில் சதா கீர்த்தனங்களைப் பாடி நர்த்தனஞ் செய்கின்றார்கள். பண்டரிபுரத்தில் எங்கு பார்த்தாலும் ஆங்காங்குள்ள மடங்களில் சங்கீர்த்தன பஜனை ஓசையும், மிருதங்கம், தாள ஓசையும் மிகவும் இனிமையாகக் கேட்கப்படுகின்றன.

கோயிலில் எல்லோரும் தடையின்றிச் சென்று பெருமானைத் தழுவிக்கொள்ளலாம். அடியார் தங்கள் தலையைப் பாண்டுரங்கர் திருவடியில் வைத்து அன்பு செய்கின்றார்கள். வெள்ளிப் படிகளும் சலவைக் கல் பதித்த மண்டபமும் அழகாக இருக்கின்றன.

பரமபக்தராகிய நாமதேவ் சுவாமிகள் பாண்டுரங்கனை வழிபட்டு அவருடன் பேசி மகிழும் பெரும்பேறு பெற்றவர். முடிவில் அவர்முன் பாண்டுரங்கர் தோன்றி, "உனக்கு என்னவரம் வேண்டும்" என்றார். நாமதேவர், "ஐயனே! அடியேன் எப்போதும் உனது திருவடியிலேயே இருக்கவேண்டும்; உன்னைச் சேவிக்க வருகின்ற அடியார்களின் திருவடித்துகள் என் சென்னிமீது எப்போதும்

படவேண்டும்" என்று கேட்டனர். ஆண்டவரும் அந்த வரத்தை அருளினர்.

அவருடைய ஆன்மா ஆண்டவன் திருவடியில் கலந்தது. பெருமான் அசரீரியாகக் கட்டளையிட்டவாறு நாமதேவருடைய திருமேனியைக் கோயிலின் கிழக்குக் கோபுர வாசலில் அடக்கம் புரிந்தனர். அவ் வாயிலுக்கு நாமதேவர் வாயில் என்றும், முதற்படியின்கீழ் அவருடைய திருமேனியடங்கியதால் அப் படிக்கும் நாமதேவர் படியென்றும் பெயர்கள் ஏற்பட்டன.

இப்போது அப் படியின்மீது நாமதேவர் திருவுருவம் பித்தளையால் செய்து மலர் புனைந்திருக்கின்றார்கள். அங்கே செல்லுகின்ற அடியார்கள் அதைக் காலால் மிதிக்காமல் மேல்படியில் கால் வைத்துச் செல்லுவார்கள். உள்ளே யுள்ளது முத்திமண்டபம். சிவப்பு நிறமுள்ள பெரிய விநாயகர் வடிவமும், கோயிலுக்குள் பல சிறிய வடிவமுள்ள விநாயகர் திருவுருவங்களும் இருக்கின்றன.

பாண்டுரங்கர் சந்நிதிக்குத் தெற்குப் பிரகாரத்தில் **தாட்டி** என்ற மரம் இருக்கின்றது. அதன் அருகில் சாளக்கிராமத்தால் செய்த வேங்கடாசலபதியின் திருவுருவம் இருக்கின்றது.

பண்டரிபுரத்தின் அருகில் **மங்கலவேடே** என்றவூரில் **கானுபாத்ரா** என்ற பேருள்ள அழகிய பெண்மணி பாண்டுரங்கரை வழிபட்டு அன்பு செலுத்தி வந்தாள். அப் பக்கத்தில் ஆண்டுவந்த முகம்மதிய அரசன் அவள் அழகில் மயங்கித் தன் சேவகர்களை அனுப்பி அவளை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அந்த உத்தமி சேவகர்களை நோக்கி கடைசி முறையாக எம்பெருமானைச் சேவித்து வருகின்றேன் என்று கூறி உள்ளே போய் பாண்டுரங்கர் திருவடியில் வீழ்ந்து ஆவி துறந்துவிட்டாள். அவ

ளுடைய உடம்பைப் புதைத்த இடத்தில் இம்மரம் முளைத்தது. அதனால் அவ் வாயிலுக்குக் கானுபாத்ரா வாயில் என்கின்றனர்.

வடக்குப் பிரகாரத்தில் உருக்குமணிசந்நிதி இருக்கின்றது. விஸ்வநாதர்விசாலாட்சி சந்நிதிகளும் இருக்கின்றன.

கோயிலுக்கு மேற்கே சிறிது தூரத்திலே தனியே ஒரு சிவாலயம் இருக்கின்றது. சுவாமியின் திருப்பேர் **மல்லிகார்ச்சுனர்.** நாமதேவர் அங்கு சென்று பாடிக்கொண்டிருந்தனர். அவரை அங்குள்ளவர் விரட்டியதனால் அவர் கோயிலுக்குப் பின்புறம் போய் பாடினார். சிவபெருமான் அவர் பாடலைக் கேட்கும்பொருட்டு மேற்கே திரும்பிவிட்டார். அதனால் இக்கோயில் மேற்கே பார்த்த வண்ணமாக அமைந்துளது என்பது வரலாறு.

ஊரில் இன்னும் பல கோயில்களும் தருமசாலைகளும் இருக்கின்றன. நல்ல குங்குமங்கள் இங்கு செய்து பெருவாரியாக விற்பனை செய்கின்றார்கள். கடைவீதிகளில் இந்த சுகந்த மணம் வீசுகின்றது. தம்பூரா நயமாக விற்பனை செய்கின்றார்கள்.

## பண்டரிநாதர் வரலாறு

**ஜானுதேவர்** என்பவர் **சத்யா** தேவிவுடன் இனிது வாழ்ந்தனர். அவருக்கு நெடுங்காலம் குழந்தையில்லை. அவர் செய்த தவங் காரணமாக ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்குப் **புண்டரீகன்** எனப் பேர் சூட்டினர். புண்டரீகன் இளமையில் தான்தோன்றியாய்த் திரிந்தான். தாய் தந்தையரை அடித்தும் உதைத்தும் இடர்ப்படுத்தினான். திருமணம் ஆனபிறகு மனைவியைக் குலதெய்வமாக நினைத்து அவள் சொற்படி கேட்டு, தாய் தந்தையர்க்கு அன்னமும் ஆடையுந் தராது விரட்டியடித்தனன்.

இவன் ஒரு சமயம் மனைவியுடன் யாத்திரை செய்த போது குக்குட முனிவர் தவச்சாலையில் தங்கினான். அங்கு அதிகாலையில் அழுக்குடைய உடம்புடனும் உடையுடனும் சில அழகிய பெண்மணிகள் வந்து அத் தவச்சாலையைக் கூட்டி மெழுகிக் கோலம் போட்டு, முனிவரைத் தொழுது, தூய மேனியும் தூய ஆடையும் பெற்றுப் போவதைப் புண்டரீகன் கண்டான். அவர்களைப்பார்த்து 'நீவிர்யாவர்? இங்குவந்தபோது அழுக்குடம்பு ஆடையுடன் வந்த நீங்கள் இப்போது அதிக அழகும் ஆடையும் பெற்றுப் போகின்றீர்களே? காரணம் யாது?' என்று வினவினான். அப் பெண்மணிகள், "புண்டரீகா! நாங்கள் கங்கை யமுனை கோதாவரி என்ற புண்ணிய நதிகளின் அதிதேவதைகள். பலர் எங்களிடம் வந்து தங்கள் பாவத்தைப் போக்குகின்றார்கள். அப் பாவத்தை நாங்கள் இம் முனிவர் பெருமானிடம் வந்து பணிவிடைபுரிந்து போக்குகின்றோம்; இவர் பெருந்தவ முனிவர்" என்று கூறி மறைந்து விட்டார்கள்.

புண்டரீகன் அம் மாதவரைச் சென்று வணங்கினான். முனிவர், "ஏ மூடனே! தாய் தந்தையரைக்காட்டிலும் சிறந்த தெய்வம் இல்லை. நான் என் தந்தை தாயைக் கடவுளாக நினைத்து வழிபடுகின்றேன். இதைத் தவிர வேறு எனக்குப் பூசையில்லை. அதனால் இந்த மகிமை யேற்பட்டுளது. நீ உன் தாய் தந்தையரைப் புறக்கணிக் காதே. "தந்தை தாய்ப்பேண்", "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்", "ஈன்றாளின் என்ன கடவுளும் இல்" என்று உபதேசித்தருளினார்.

அதைக் கேட்ட புண்டரீகன் மனந் திருந்தி தன் இருப் பிடம் வந்து வயது சென்ற தாய் தந்தையரைக் கடவுளாக நினைத்து அளவுக்கு மீறிய அன்புடன் உண்டி உணவாதி தந்து வழிபட்டு வந்தான்.

அவன் அன்பைக் காணும்பொருட்டு நாராயணர் அங்கு வந்தனர். புண்டரீகன் ஒரு செங்கல்லை எடுத்து நாராயணர் முன் இட்டு, "ஐயனே! இதன்மேல் நில்லும். நான் தாய்தந்தையரை வழிபடாமல் பிற கருமம் புரியேன்" என்று கூறிவிட்டு, தாய்தந்தையரை எழுப்பினான். ஆசனங்களில் இருத்தினான். மனைவியுந் தானுமாகக் கண்களில் அன்பு நீர் சிந்த நன்னீராட்டினான். ஒற்றுடை சாத்தினான். ஆடை அணிகள் பூட்டினான். தூபதீபங்கள் காட்டினான். சந்தன திலகந் தீட்டினான். அமுத மன்ன நல்லுணவு ஊட்டினான். வெற்றிலைப் பாக்கு நீட்டினான். சுருதி கூட்டினான். துதிசெய்து அன்பு காட்டினான். அவர்களைப் பஞ்ச சயனத்தில் கண் துயிலவைத்த பின்னர், நாராயணரிடம் வந்து தொழுது நின்றான்.

நாராயணர், "அன்பா! உன்னுடைய இந்த மாதா பிதா பக்தியைக் கண்டு மகிழ்ந்தோம். உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்" என்றார். புண்டரீகர், "ஆராவமுதான நாராயணா! தேவரீர் இவ்விடமே யிருந்து அருள் புரியவேண்டும்" என்றான். அவ்வண்ணமே திருமால் அச் செங்கல்லின் மீது நின்று காட்சி யளிப்பாராயினார். இதனால் அவருக்குப் "புண்டரீக வரதர்", "விடோபா" என்ற திருநாமங்கள் ஏற்பட்டன.

வீட்–செங்கல்; உபா – நிற்றல். (மகாராஷ்ட்ர மொழி) செங்கல்லில் நின்றபடியால் விடோபா, விட்டலராயர்.

இந்த வண்ணம் அண்டரும் போற்றும் பண்டரிநாதர் புண்டரீகனுக்காக வந்து, மண்டலத்தோரும் காண காட்சி தருகின்றார்.

புண்டரீகர் காலமுடிவில் இறைவனடி சேர்ந்த பின்னர் அவர் திருமேனியைச் சந்திரபாகா நதியில் அடக்கம் புரிந்து ஆலயம் அழகாகப் புதுக்கியுள்ளார்கள்.

பாண்டுரங்கன் சிரசில் ஒரு அழகிய சிவலிங்கம் இருக்கின்றது.

இவ்வூரில் உள்ள ஒரு பெருஞ் செல்வச் சீமானுக்கு நெடுநாள்களாகக் குழந்தையில்லை. பாண்டுரங்கரை வழி பட்டு வந்தான். குழந்தை பிறந்தால் தங்க அரைஞாண் செய்து சாத்துவதாகப் பிரார்த்தனை செய்துகொண்டான். ஆண்டவன் அருளால் ஒரு ஆண்மகவு பிறந்தது.

அத் தனவந்தன் பெரு மகிழ்ச்சியுற்றான். தான் செய்துகொண்ட வேண்டுகோளின்படி தங்க அரை ஞாண் செய்யும்பொருட்டு நரஹரி சோனர் என்ற சிறந்த பொன் வேலைக்காரரை யடுத்தான். அவர் சிறந்த சிவ னடியார். "நான் பாண்டுரங்கரைப் பார்த்ததே யில்லை. அளவு பிடித்துக் கொடுத்தால் செய்வேன்" என்றார். அதுபடியே அவர் அளவு எடுத்துத் தந்தார். அரை ஞாண் செய்து முடித்தபின் பாண்டுரங்கருக்கு அணிந் தால் ஒரு சாண் அளவு குறைந்திருந்தது. ஒருசாண் அளவு கூட்டி வேறு செய்தார். அதை அணிந்தால் ஒரு சாண் மீளவும் குறைந்தது. மறுபடியும் ஒரு சாண் கூட் டிச் செய்தார். இப்போது அதிக நீளமாகி விட்டது. குறைத்தால் கூடியும், கூட்டினால் குறைவாகவுமாகவே இருந்தது. பலகாலும் செய்வதும் அழிப்பதுமாக இடர்ப் பட்டார். முடிவில் 'நீரே வந்து அளவு எடுத்துக்கொள் ளும்' என்றார் தனவந்தர். நரஹரிசோனர், "நான் சிவ மூர்த்தியை யன்றி வேறு ஒரு மூர்த்தியையுங் கண்ணால் கூடக் காணமாட்டேன்" என்றார். தனவந்தர் வேண்டு கோளின்படி கண்களை ஒரு துணியால் கட்டிக்கொண்டு வந்து அளவெடுக்கலாயினர். அப்போது அவர் கையால் தடவிப் பார்த்தபோது பாண்டுரங்கர் திருமேனியில் மான், மழு, சந்திரன், நாகாபரணம் முதலிய அடையாளங் கள் காணப்பட்டன.

"ஐயனே நான் வணங்கும் சிவமூர்த்தமாகக் காணப் படுகின்றதே" என்று அலறினர். கண்களை அவிழ்த்துப் பார்த்தார். பழைய பாண்டுரங்கனுகவே இருந்தது. மறு படியும் கண்களை மூடிக்கொண்டார். அப்போது பாண்டு ரங்கன், "அன்பனே! வருந்தற்க. நான் உனக்கு வேறு அல்ல. நீ வணங்கும் சிவபெருமான் இதோபார் என் முடியில் இருக்கின்றூர். அதனுல் என்னை வணங்கினுல் அது சிவ வணக்கமே யாகும்" என்று கூறியருளினர். நரஹரிசோனுர் கண் திறந்து பார்க்க பாண்டுரங்கன் சிர சிலே சிவலிங்கம் இருக்கக் கண்டு அற்புத மடைந்து அஞ் சலி செய்தார். அரைஞாணும் செய்துப் பூட்டினுர். அந்த அரைஞாண் இன்றும் பாண்டுரங்கர் இடையில் விளங்கு கின்றது.

தலையாலே பலி தேருந் தலைவனுகிய சிவமூர்த்தியை இன்றும் பாண்டுரங்கர் தலையாலே சுமந்த வண்ணம் காட்சி யளிக்கின்றூர்.

நாங்கள் அக் காட்சியைக் கண்டு மகிழ்ச்சி யுற்ருேம்; வணங்கினுேம்.

ஜய ஐப்பசி—3 (19—10—54)

அதிகாலை 4 மணிக்கு எழுந்து பாண்டுரங்கர் கோயில் போய் விசுவரூபதெரிசனை செய்தோம். அந்த நேரத்தில் ஆயிரக் கணக்கான அடியார்கள் கூடி பஜனை புரிந்து கொண்டிருந்தார்கள். பலர் பாடுவதும் ஆடுவதுமாகப் பக்தி செய்தார்கள். அக்காட்சியும் மிக்க பரவசத்தைத் தருகின்றது.

பின்னர் எங்கள் நித்திய வழிபாட்டைச் செய்து கோயிலுக்குப் போய் மீண்டும் ஒருமுறை பாண்டுரங்க ரைச் சேவித்தோம்.

பலர் அந்த ஊரில் தங்கள் வீட்டில் செய்யும் ரொட்டிகளைக் கொணர்ந்து பாண்டுரங்கருக்கு நிவேதித்துக் கொண்டு போகின்றார்கள். மலர்மாலைகள் நயமாகக் கிடைக்கின்றன. நாங்கள் மலர்மாலைகள் வாங்கி நாங்களே சுவாமிக்குச் சாத்தி வணங்கிப் புறப்பட்டோம்.

அன்று மாலை அநுஷ்டானம் செய்துகொண்டு 6–20 மணி ரயிலில் ஏறி 7–30 மணிக்குக் குருதுவாடி சேர்ந்தோம்.

மீண்டும் எங்கள் வண்டியில் ஏறி இரவு 12–30 மணிக்குப் புறப்பட்டோம்.

## ஸிருதி—சாயிபாபா மந்திர்

ஜய—ஐப்பசி 4 (20—10—54)

காலை 6 மணிக்கு டோன்ட் என்ற சந்திப்பை அடைந்தோம். புகைவண்டி நிலையத்திலேயே நீராடி வழிபாடு செய்தோம்.

அங்கிருந்து பகல் 12-10 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. எங்கள் திருக்கூட்டத்துள் ஒருவராகிய திருவல்லிக்கேணி திரு. T. K. **நடேசன் செட்டியார்** என்பவர் ஏதோ காரியமாக வெளியே கடைவீதிக்குச் சென்றவர் குறித்த காலத்தில் எங்கள் வண்டியில் வந்து சேரத் தவறிவிட்டனர். அதனால் நாங்கள் மனம் வருந்தினோம்.

**கோப்பர்கான்** என்ற புகைவண்டி நிலையத்திற்கு மாலை 5–30 மணிக்கு வந்து சேர்ந்தோம். அநுஷ்டானம் செய்து கொண்டோம். அங்கிருந்து **ஸிருதீ** (சாயிபாபா மந்திர்) என்றஇடத்திற்கு 12கல். கவர்ன்மெண்ட்பஸ்ஸில் உடனே புறப்பட்டுச் சுமார் இரவு 7 மணிக்குச் சாயிபாபாவின் சமாதிக் கோயிலுக்குச் சென்றோம். வழியில் கோதாவரி நதியைக் கடந்தோம். ஆள் ஒன்றுக்கு பஸ் கட்டணம் 0-9-0.

சாயிபாபாவின் கோயில் நன்ருகப் புதுக்கி யிருக்கின்றனர். பலர் வந்து தங்க இட வசதிகள் அமைத்திருக்கின்ருர்கள். அவருடைய திருவுருவம் நேரில் பேசுவதுபோல் அமைந்திருக்கின்றது. ஒரு புறத்தில் அவர் உபயோகித்த பாதுகை ஆடை முதலியவைகளைக் கண்ணுடி அறையில் வைத்திருக்கிருர்கள்.

கோயிலுக்கு அருகில் அவர் தங்கி யிருந்த மடாலயத்தில் அவருடைய படமும் அவர் யாசித்து வைத்த கோதுமையும் வைத்திருக்கின்ருர்கள். அவர் மூட்டிய அக்கினியை அணைய விடாமல் வைத்திருக்கின்ருர்கள்

கோயிலுக்கு மேல்புறத்தில் வேப்பமரத்தின்கீழ் ஒரு பளிங்கு மண்டபமும், அதில் சிவலிங்கமும், திருநந்தி தேவரும் அமைந்துள்ளன. அவ்வேம்பின் இலை கசப்பு இன்றி வில்வ இலைபோல் துவர்ப்பு உடையதாக இருக்கின்றது. அங்கு பல சந்நியாசிகள் இருக்கின்றனர். அவர்களுக்கு இலவசமாக உணவு வழங்குகின்றனர்.

அங்கிருந்து இரவு 8 மணிக்கு ஆள் ஒன்றுக்கு பஸ் கட்டணம் 0-12-0 கொடுத்து தனி பஸ் அமைத்துக் கொண்டு கோப்பர்கான் புகைவண்டி நிலையத்துக்கு வந்து சேர்ந்தோம்.

இரவு 12-40 மணிக்கு மீளவும் எங்கள் வண்டி புறப்பட்டது. திருநடேசன் செட்டியார் அவ்விடம் வந்து எங்களுடன் கலந்து கொண்டனர். இரவு 1-50 மணிக்கு மண்மாட் சந்திப்பை அடைந்தோம்.

## எல்லோரா குகை, குஸ்ருணேஸ்வரம்

ஜய—ஐப்பசி 5 (21—10—54)

கால தாமதமாக வண்டி மண்மாடுக்கு வந்தபடியால் ஒளரங்காபாத் போகும் வண்டியின் தொடர்பு விட்டுவிட்

டது. அதனல் காலே மண்மாட் என்ற நிலேயத்திலேயே நீராடி வழிபாடு செய்தோம். பகல் 11–30 மணிக்குப் புறப் பட்டோம். அது சிறிய இருப்புப்பாதை. அதனல் எங்கள் வண்டி மண்மாட்டில் நின்றுவிட்டது. வேறு சிறிய வண்டியில் ஏறி மாலே 3 மணிங்கு **ஔரங்காபாத்**துக்குச் சென்றோம். புகைவண்டி நிலேயத்திற்கு எதிரிலேயே ஒருதருமசாலே யிருக்கிறது, அதில் சாமான்களே வைத்து போகவர ஒரு பஸ் அமைத்துக்கொண்டு **எல்லோரா** குகைக்கோயிலுக்கு 4 மணிக்குச் சென்றோம். ஔரங்கா பாத்திலிருந்து எல்லோரா 14 கல். பஸ் மலேமீது ஏறி வளேந்து வளேந்து சென்று எல்லோராவை யடைந்தது. வழிநெடுக வானளாவிய மரங்கள்; இயற்கை வளம் நன்ருக இருக்கின்றது.

எல்லோராவில் மலேயைக் குடைந்து கோயில்களேயும் திருவுருவங்களேயும் அமைத்திருக்கின்றனர். பதினருவது குகை **கயிலாயநாதர் கோயில்.** ஆ! ஆ! அதன் அரிய வேலேப் பாடுகளும், சித்திரவினோதங்களும், சொல்லுக்கும் எழுத் துக்கும் அடங்கா. நினேக்கவும் முடியாத அளவில் அது விளங்குகின்றது. ஒரு பெரிய மலேயைக் குடைந்து அதற் குள் கெம்பீரமான கோயிலேயும் மூன்று நான்கு அடுக்கு மாடிகளேயும், பிரகாரங்கள் முழுவதும் சிவலீலேகளேயும் விஷ்ணு லீலேகளேயும் தெய்வீகமாகச் செதுக்கி யிருக்கின்றனர். நடுவில் ஒரு பெரிய மாடிமீது சிவலிங்கம் விளங்குகின்றது. தூண்களும் போதியல்களும் நுட்பமான கொடி செடிகளும் செதுக்கப்பட்டு பார்க்கப் பார்க்க அதிசயத்தை விளேவிக்கின்றன. பழங்காலத்தில் இருந்த பெரியவர்களின் ஆற்றல் இதன்மூலம் நன்கு வெளியாகின்றது. அவர்களுடைய அதிநுட்பமான அறி வும், அன்பும், கலேப் பண்பும், திறமையும் அளவிட முடி யாதவை. அதைப் பார்த்த உடனே உணர்ச்சி நின்று

விட்டது. ஒரே வியப்புதான். எங்களுக்குப் போதுமான நேரம் இன்மையால் அவசரமாகப் பார்க்க நேர்ந்தது. இந்த அதிசயமும் அருமையும் நிறைந்த குகைக் கோயிலை யும் பற்பல விசித்திரத் திருவுருவங்களையும், மதவெறி கொண்ட பிற மதத்தினர் சின்னபின்னங்கள் செய்திருக் கின்றார்கள். அதைக்காண மனம் அளவற்ற வேதனை அடைந்தது.

மொத்தம் 34 குகைக் கோயில்கள் இருக்கின்றன. அதில் பாதி புத்தருடைய கோயில்கள். 10-வது குகை பார்க்கப் பார்க்க மகிழ்ச்சியைத் தருகின்றது. ஒரு அரசனுடைய சபா மண்டபம்போல் அதை அமைத்திருக் கின்றனர், பழங்காலத்தில் உள்ள சிற்பக் கலைக்கு இது கருவூலமாக விளங்குகின்றது. சுருக்கமாகச் சொல்வ தாயின் எல்லோரா குகைக் கோயில்களைக் கண்டவுடன் அதிசயத்தின் சிகரத்தை யடைந்தோம்.

அங்கிருந்து ஒரு கல் தொலையில் **குஸ்ருணேஸ்வரம்** என்ற திருக்கோயிலுக்குச் சென்றோம். இது 12 **ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று.** அவசியம் தெரிசிக்கத் தகுந்தது. தெரிசித்தவர்க ளுடைய வினைகளை விலக்கக்கூடிய மகிமை வாய்ந்தது.

குஸ்ருணம் – குங்குமப்பூ. (மஹாராஷ்ட்ர மொழி). உமையம்மையார் குங்குமத்தினால் சிவலிங்கத்தைச்செய்து வழிபட்டதனால் இப்பேர் பெற்றது. சிவலிங்கம் சிவந்த நிறமாக விளங்குகின்றது. சுவாமி சற்று பள்ளத்தில் இருக்கின்றார். அதன் அருகில் அர்ச்சகர் அமர்ந்து வேத மந்திரங்களைப் பாராயணஞ் செய்கின்றார். அந்த மூர்த்தி யின் அழகு கண்ணுக்கு அடங்காதது. அச் சிவ மூர்த் தியைப் பார்த்தவுடன் எங்களுக்கு ஒரு பெரிய அமைதி யும் சாந்தியும் உண்டாயின. சுவாமிக்குமேல் தாராபாத்ரம்

உளது. சதா சுவாமியின் மீது நீர் ஒழுகிக்கொண்டே யிருக்கின்றது. அந்தக் கோயிலின் சிகரங்களும் மண்டபங்களும் சிறியதாக இருப்பினும், தேக்குமரத்தால்கூடச் செய்ய முடியாத உன்னதமான சித்திர வேலைப்பாடுகளுடன் அவை அமைந்துள்ளன. கல்லில் அத்தனை விசித்திர வேலைகளைப் பண்டைக் காலத்துள்ளவர்கள் எவ்வாறு தான் செய்தார்களோ? அவர்களுடைய அன்புக்கு அளவு ஏது?

இந்த அழகான கோயிலையும், அருமையான சிவ மூர்த்தியையும் நாங்கள் கண்குளிரக் கண்டு வழிபாடு செய்தோம். ஜோதிர் லிங்க தெரிசனம் எளிதில் கிடைக்கக் கூடியதன்று. முற்பிறப்பில் செய்த பெருந்தவப் பெருக்கிஞலேயே கைகூடும். "தவமும் தவமுடையார்க்காகும்" என்கின்ருர் திருவள்ளுவர். "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே" என்ற தேவாரம் நினைவுக்கு வருகின்றது. நல்வினைப் பயனுல் இத் திருக்கோயிலையும் சிவமூர்த்தியையும் கண்டு களிப்புற்ருேம். நெஞ்சார நினைத்து, அங்கு "வான்முகில் வழாது பெய்க" என்ற பாடலை ஓதினும். "மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்" என்ற கடைசி அடியை மூன்று முறை கூறினேம். **ஹரஹர மஹாதேவா** என்று மும்முறை முழக்கம் புரிந்தோம். சிவலிங்கத் திருமேனியை எங்கள் கரத்தால் தொட்டு கண்களில் ஒத்திக்கொண்டோம். மும்முறை வலம் வந்தோம். இந்த வாய்ப்பு அரியதொரு வாய்ப்பு. பின்னர் பஸ்ஸில் ஏறி இரவு 8 மணி அளவில் ஔரங்காபாத் வந்து சேர்ந்தோம். அங்கு தருமசாலையில் தங்கினேம். அன்றிரவு கடுங்குளிரால் நடுநடுங்கித் துன்பமுற்ருேம். எங்கள் போர்வை அப் பனியை—குளிரைத் தடுக்கும் ஆற்றலின்றித் தோல்வி யடைந்தது.

ஜய—ஐப்பசி 6 (22—10—54)

## அஜந்தா

அதிகாலையில் எழுந்து நீராடி வழிபாடு செய்தோம். காலை 8 மணிக்குப் பஸ்ஸில் புறப்பட்டோம். ஔரங்காபாத்திலிருந்து 65 கல் தொலை அஜந்தா. வழி நெடுக மலை மீதுதான் பஸ் போகின்றது. மலைமீது ஔரங்கஜீப் முதலிய முகம்மதிய மன்னர்களின் கோட்டை, இடிந்த மாடிகள் முதலியன காணப்படுகின்றன. காலை 10-45 மணிக்கு அஜந்தாவை யடைந்தோம்.

அஜந்தாவில் 35 குகைகள் இருக்கின்றன. இங்கு குகைகளில் உள்ள வர்ண சித்திரங்கள் மிகவும் அருமையானவை. 2000 ஆண்டுகளுக்கு முன் அக் காலத்தில் அதி உன்னத நிலையிலிருந்த புத்த மன்னர்களால் அமைத்தவை. மிகப் பெரியதாக சில குகைகளும், சிறியதாகச் சில குகைகளும், வர்ண சித்திரங்களுடன் சில குகைகளும் இருக்கின்றன. பழங் காலத்தில் நம் முன்னோர்களின் கலைத் திறனுக்கு இதுவும் ஒரு எடுத்துக் காட்டாக இருக்கின்றது. அக்காலத்தில் வைத்த வர்ணங்கள் இன்னும் பல பகுதிகள் அழியாதிருக்கின்றன.

நுண்ணிய அறிவுடன் கண்டு மகிழக் கூடியவை. வரிசையாக உள்ள குகைக் கோயில்களின் அருகில் அழகாக நதி ஓடிக்கொண்டிருக்கின்றது. அதன் அருகில் வளமையான மரங்களும் மலையும் இயற்கைத் தேவியின் அணிகலங்களாக விளங்குகின்றன.

பகல் அங்குள்ள ஆற்றங்கரையில் நாங்கள் கொண்டுபோயிருந்த கட்டமுதையுண்டு பகல் 1-45 மணிக்குப் பஸ்ஸில் ஏறி மாலை 4-45 மணிக்கு ஔரங்காபாத் வந்து சேர்ந்தோம்.

இரவு 9-10 மணிக்குப் புகைவண்டி வந்தது. அதில் அளவற்ற கூட்டம். ஏறுகின்றவர்களும் எண்ணற்றவர்கள்.

நாங்கள் எவ்வாறு வண்டியில் ஏறுவது என்று திகைப்பு அடைந்தோம். பின்னர் மிக இடர்ப்பட்டு ஆலையிலிட்ட கரும்புபோல் நொந்து வண்டியில் ஏறினோம். மொழியறியாத மனிதர்கள் பழியறியாமல் வண்டியில் பிரயாணஞ் செய்கின்றார்கள். இரவு 1-50 மணிக்கு மண் மாடு போய், எங்கள் வண்டியில் ஏறி சுகமடைந்தோம். விடியற்காலை 3-55 மணிக்கு வண்டி புறப்பட்டது. விடியற்காலை 5-40 மணிக்கு **நாசிக்ரோடு** சேர்ந்தோம். தஞ்சை. எனது நண்பர் அட்வகேட் திரு. **பாலசுப்பிரமண்ய** ஐயருடைய மருகர் வந்து மாலையிட்டு என்னைக் கண்டு மகிழ்ந்தார். அவர்கள் இருக்கும் தேவலாலிக்கு வந்து விரிவுரை செய்யவேண்டும் என்று வேண்டினர். “அவ் வண்ணமே செய்வேன்” என்று இசைந்தேன்.

ஜய-ஐப்பசி 7 (23—10—54)

## நாசிக்—பஞ்சவடி

பஸ்ஸில் ஏறி நாசிக் ஊருக்குள் சென்றோம். புகை வண்டி நிலையத்திற்கும் ஊருக்கும் நான்கு கல். ஊரில் காட்கே மகராஜ் தருமசாலையில் தங்கினோம். பஸ் கட்டணம் 0—4—0; முனிசிபாலிடி வரி 0—4—0. இங்கு தரும சாலையில் வாடகை தந்து தங்கினோம்.

புவியினுக் கணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்.

என்று கம்பநாடர் பாடியுள்ள கோதாவரி நதியில் ராம குண்டம் என்ற இடத்தில் நீராடிப் புனித மடைந்தோம். நித்திய வழிபாடுகளை முடித்தோம். மாலை கடைவீதிகளைப் பார்த்து கோதாவரி பாலத்தின் அருகில் உள்ள சுந்தரநாராயணர் கோயிலைத் தெரிசித்தோம்.

ஜய—ஐயப்பசி 8 (24—10—54)

காலை கோதாவரியில் முழுகி வந்தனை வழிபாடு புரிந்தோம். போகவர வண்டிகளை அமைத்துக்கொண்டு (ஆள் 1க்கு 10 அணு வீதம்) நதியைக் கடந்து ஸ்ரீராமர் கோயில் சென்றோம். அக்கோயில் கருங்கல்லினால் நல்ல வேலைப்பாடுடன் கூடியது. வெள்ளித் தகடுகளுடன் கூடிய கதவு. அங்கு ராமச்சந்திரமூர்த்தியைத் தெரிசித்துவிட்டு, அதை அடுத்துள்ள சீதை குகை, பர்ணசாலை, தபோவனம் முதலியவைகளைப் பார்த்தோம். தபோவனத்தில்தான் மாரீசன் பொன்மானாக வந்தான் என்பதற்குரிய சின்னங்கள் வைத்துக் காட்டுகின்றார்கள்.

கபிலநதி வந்து கோதாவரியுடன் கலக்கும் (சங்கமம்) இடம்அங்குளது. அந்த இடம் மிகவும் மனோகரமாக இருக்கின்றது. அங்கு சூர்ப்பநகையின் உருவம் கல்லில்செதுக்கியுள்ளார்கள். ஒருபுறம் இலக்குமணர் சூர்ப்பநகையின் நாசியைக் கொய்வது போன்ற உருவம் உளது.

பகல் 2 மணிக்குத் தருமசாலை வந்து சேர்ந்தோம். மாலை 6 மணிக்குக் காரில் தேவலாலி போய் 7-15 மணி முதல் 8-45 மணி முடிய "முருகன் பெருமை" என்பது பற்றி விரிவுரை செய்தேன். அங்குள்ள தமிழ் மக்களுக்கு அது செவிக்கு விருந்தாகப் பெரு மகிழ்ச்சியைத் தந்தது. இரவு 9மணிக்கு மீண்டும் தருமசாலை வந்தோம்.

ஜய—ஐப்பசி 9உ (25—10—54)

## திரியம்பகம்

தீபாவளி நாளாகிய அன்று அதிகாலை எழுந்து கோதாவரியில் முழுகி வழிபாடு புரிந்தோம். காலை 8 மணிக்கு திரியம்பகம் போவதற்காக (ஆள் 1க்கு போகவர 1—4—0 கட்டணம் தந்து) பஸ்ஸில் புறப்பட்டு, காலை 10 மணிக்குத் திரியம்பகம் சேர்ந்தோம். திரியம்பகத்தில்

முனிசிபாலிடி வரி 0—6—0 தந்தோம். நாசிக்கிலிருந்து திரியம்பகம் 18 கல்.

திரியம்பகம் போனவுடன் கோதாவரி உற்பத்தியைக் காணும்பொருட்டு 721 படியுள்ள பெருமலை மீது ஏறிச் சென்றோம். மலைமீது ஒரு நந்திவாயிலிருந்து சிறு துளிகள் விழுகின்றன. அது ஒரு இடத்தில் தேங்கி மலைக்குள் சென்று, பிறகு நதியாகி ஓடுகின்றது. நாங்கள் புனிதமான அங்கு சென்று முழுகி மகிழ்ச்சி யடைந்தோம்.

அங்கே ஒருபுறம் **கௌதமர்** ஆசிரமக் குகையும் அதில் சிவலிங்கங்களும் இருக்கின்றன.

மற்றொருபுறம் **கோரக்** நாதர் குகையுளது. அதிலும் சிவலிங்கம் உளது. இவைகளை யெல்லாம் நாங்கள் தெரிசித்துவிட்டுப் புறப்பட்டோம். மலையை விட்டு இறங்கும் போது ராமகுண்டம் லட்சுமணகுண்டம் என்ற தீர்த்தங்களும் இருக்கின்றன. கீழே இறங்கியபின் **கோடி தீர்த்தம்** என்ற அருமையான திருக்குளத்தில் மூன்றாவது முறையாக நீராடினோம். அதனைச் சுற்றிப் பல சிவலிங்கங்கள் இருக்கின்றன. அக் குளத்தின் மேல் திசையில் பள்ளிகொண்ட பெருமாளுடைய அழகிய சிறு உருவம் உளது. அப் பெருமானுடைய திருவடியில் நீர் ஊறுகின்றது. அது துளசி மணம் கமழ்கின்றது.

திரியம்பகருடைய திருக்கோயிலுக்குச் சென்றோம். அது 12 ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று. மிகவும் மகிமை வாய்ந்தது. அக்கோயில் அழகான கருங்கற்களால் நன்கு புதுக்கியுள்ளது. அக்கோயிலின் முன் மண்டபத்தின் மீதுள்ள மேல் தளவரிசை முழுவதும் பல சிவலிங்க வடிவமுள்ள கற்களால் அமைந்துள்ளது. விசாலமான பிரகாரம்.

உள்ளே சிவலிங்கம் ஆழத்தில் உளது. அதில் மூன்று சிறு ரோஜா மொட்டு போன்ற உருவங்கள் இருக்

கின்றன. மும்மூர்த்தி சொரூபமான அச்சிவலிங்கத்தின் அடியில் சதா நீர் எடுக்க எடுக்க சிறிய அளவில் ஊறிக் கொண்டே யிருக்கின்றது. ஏழு நதிகளில் ஒன்றாகிய கோதாவரியும், மிகச் சிறந்த புண்ணியத் தலமாகிய திரியம்பகமும் தீபாவளி யன்று முழுகவும் தெரிசிக்கவும் கிடைத்தன. திரியம்பகரைத் தெரிசித்த பின் மீண்டும் பஸ் ஏறி மாலை நாசிக் வந்து சேர்ந்தோம்.

ஜய—ஐப்பசி 10 (26—10—54)

அமாவாசையாகிய இன்று காலை கோதாவரியில் நீராடினோம். கோதாவரியில் இன்று தண்ணீர் குறைந்திருந்தது. நித்திய வழிபாடு முடிந்தபின் கோதாவரிக்கு வட கரையிலுள்ள சிவாலயத்தைத் தெரிசித்தோம்.

## பம்பாய்

பிற்பகல் 3 மணிக்குப் பஸ்ஸில் புறப்பட்டு நாசிக் ரோடு புகைவண்டி நிலையத்தை யடைந்தோம். மாலை 7 மணிக்குக் கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 10-19 மணிக்கு வண்டி புறப்பட்டது. விடியற்காலை 4-30 மணிக்கு பம்பாய் சேர்ந்து, தாதர் என்ற இடத்தில் இறங்கினோம். அங்கு சுப்ரமண்ய சமாஜ அன்பர்கள் வந்து வரவேற்று உபசரித்தார்கள். பம்பாய் மாதுங்காவில் ஒரு பள்ளிக்கூடத்தில் தங்கினோம். திரு. T. V. **லட்சுமண ஐயர்** தமது மாளிகையில் சமையல் செய்ய இடந் தந்து உதவினர்.

ஜய—ஐப்பசி 11 (27—10—54)

இன்று கந்தர் சஷ்டி விரதம் ஆரம்பமாயிற்று. சுப்ரமண்ய சமாஜ அமைச்சர், திரு **வெங்கட்ராமையரும்** ஏனைய நண்பர்களும் வந்து வேண்டிய அனுகூலங்கள் புரிந்தார்கள். சிறப்பாக நண்பர் திரு P. **சொக்கலிங்கம் பிள்ளை** அவர்கள் கந்தர் சஷ்டி சிறப்பு வழிபாட்டிற்கு நாள்தோறும்

பால், மலர், இளநீர் முதலிய எல்லாச் சாதனங்களையும் காலந் தவறாது அன்புகூர்ந்து தந்து அளவற்ற அன்பு செய்தனர். அது என்றென்றும் மறக்கமுடியாதது.

வழக்கம்போல் வழிபாடு தொடங்கி இனிது நடைபெற்றது. அன்று இரவு 8 மணிக்கு சுப்ரமண்ய சமாஜத்தில் **அருணகிரிநாதர் அவதார** விரிவுரை செய்தேன். நிரம்பவும் மக்கள் வந்து கேட்டு இன்புற்றார்கள்.

ஜய—ஐப்பசி 12 (28—10—54)

பம்பாய் சிறந்த நகரம்; மேல் கடற்கரையில் இருப்பதனால் பெரிய துறைமுகப் பட்டினமாகத் திகழ்கின்றது. நெருக்கமான பட்டினம். மிக உயரமான கட்டிடங்கள்; அழகான கடை வீதிகள். பெரிய வியாபாரங்கள் நடைபெறுகின்றன. எண்ணெய், துணி, பஞ்சு ஆலைகள் பல உள. இந் நகரில் போய்வர மின்சார வண்டிகள், ட்ராம் வண்டிகள், பஸ், வாடகைக்கார் முதலிய எல்லா வசதிகளும் நிரம்ப இருக்கின்றன.

பம்பாயில் பார்க்கத் தக்கவை: பம்பாய் தேவி கோயில்; பாபுலநாத தேவாலயம்; மகாலட்சுமி கோயில்; சௌபாதி கடற்கரை; மெரீன்ட்ரைவ்; கண்காட்சிச் சாலைகள்; ரயில்வே நிலையங்கள்; கடைவீதிகள்; மலபார் ஹில்ஸ்; இந்தியா கேட் முதலியனவாகும்.

இவைகளை நான் ஏற்கனவே பார்த்திருப்பதனாலும், வழிபாடு அதிகம் இருந்தபடியாலும், என்னுடன் வந்தவர்கள் மட்டும் அவ்வப்போது சென்று பார்த்துவந்தார்கள்.

இரவு 8 மணிக்கு **திருப்புகழ் உபதேசம்** என்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன்.

ஜய ஐப்பசி—13 (29—10—54)

அதிகாலையில் எழுந்து நீராடி சிறப்பு வழிபாடுகள் பகல் 11 மணிவரை நிகழ்ந்தன. பல அன்பர்கள் வந்து

சந்தித்து மகிழ்ந்தார்கள். பம்பாயிலே உள்ள தமிழ்நாட்டு அன்பர்கள் மிக்க பக்தி யுடையவர்களாகவும், தெய்வ வழிபாடு புரிபவர்களாகவும், அன்பர்களாகவும் திகழ் கின்ருர்கள். சிறப்பாக மாதுங்கா சுப்ரமண்ய சமாஜ அன் பர்கள் முருக பக்தியில் தலைசிறந்து விளங்குகின்ருர்கள். சஷ்டி விழாவைப் பக்தி சிரத்தையுடன் கொண்டாடு கின்ருர்கள்.

இரவு 8 மணிக்கு அருணகிரிநாதர் வரலாற்றில் **வில்லி புத்தூரர் சந்திப்பு** என்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன்.

ஜய—ஐப்பசி 14 (30—10—54)

காலையில் சிறப்பு வழிபாடுகள் இனிது நடைபெற் றன. மூன்று நான்கு நண்பர்கள் தங்கள் தங்கள் இல்லங் களுக்கு அழைத்துச் சென்று உபசரித்தார்கள். நான் சென்ற வீடுகள் தோறும் தெய்வ ஆராதனையுடன் அழகிய திருவுருவங்கள் காட்சியளித்தன.

என்னுடன் வந்த அன்பர்கள் பம்பாயில் தங்கள் எதிர்கால குளிர் தேச யாத்திரையைக் கருதி உல்லன் சட்டைகள், உல்லன் போர்வைகள், மற்றும் பல சாத னங்கள் முதலியன வாங்கிக்கொண்டார்கள்.

இரவு 8 மணிக்கு அருணகிரிநாதர் வரலாற்றில் **சம்பந்தாண்டான் வாதமும் முத்திப்பேறும்** கூறினேன்.

ஜய—ஐப்பசி 15 (31—10—54)

காலையில் எழுந்து சிறப்பு வழிபாடுகள் செய்தேன். மாலையிலே **கோரேகாம்** என்ற இடத்திலேயுள்ள தமிழ்ச் சங்கத்தார் வேண்டுகோளின்படி ஆங்கு சென்று மாலை 5 முதல் 6 வரை "தமிழ்" என்னும் பொருள்பற்றி விரிவுரை செய்தேன். அங்குள்ள தமிழ் அன்பர்கட்கு அது பெரிய வாய்ப்பாக இருந்தது. மிக்க மகிழ்ச்சியுற்ருர்கள்.

இரவு 8 மணிக்கு சுப்ரமண்ய சமாஜத்திலே "**சூரசங்காரத்தின் தத்துவம்**" என்னும் விரிவுரை செய்தேன்.

ஜய—ஐப்பசி 16 (1—11—54)

**இன்று கந்தர் சஷ்டி**; அதிகாலையில் எழுந்து மிகவும் சிறப்பாக வழிபாடுகள், பாராயணம் முதலியன செய்தேன். ஐந்து நாட்களும் சிறிது பாலும் பழத்துடன் விரதமிருந்த நான், இன்று பூரண உபவாசம்; தண்ணீர்கூடப் பருகாமல் இருந்தேன். அது நன்ருக இறைவனை நினைக்கச் சாதனமாகும்.

துறையூரில் இருந்து எனது நண்பரும், பரம சாதுவும், முத்தி நெறியில் நின்ற உத்தமருமாகிய திரு. **மாரிமுத்து முதலியார்** என்பவர் எங்களுடன் யாத்திரை புரியுங் கருத்துடன் வந்தனர். அவருடைய அன்பைக்கருதி அடியேன் அவரை உடன்வந்து யாத்திரைபுரிய அனுமதித்தேன்.

சுப்ரமண்ய சமாஜத்தில் காவடி பூஜையும், அகண்ட நாம பஜனையும், சிறப்பான அபிஷேக ஆராதனைகளும் நடந்தன. "முருகா முருகா" என்ற ஒலி விண்ணைப் பிளந்தது. சொல்ல முடியாத பக்திபரவசத்துடன் அன்பர்கள் பாடினுர்கள்; ஆடினுர்கள். பெண்மணிகளும் வழிபாட்டில் கலந்து ஒரே அன்பு மயமாக நின்ருர்கள்.

இன்று இரவு சுவாமி புறப்பாடு இருந்ததனுல் சமாஜத்தில் எனது விரிவுரை யில்லை. புனவுக்கு அருகில் **கற்கி** என்ற ஊரில் உள்ள தமிழன்பர்கள் 3, 4 நாட்கள் முன்னரேயே வந்து வற்புறுத்திய வேண்டுகோளுக்கு இணங்கி மாலை அங்கு சென்று, அங்குள்ள ராம மந்திரத்தில் **முருகன் பெருமை** என்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன். தமிழ்ச் சொற்களைக் கேட்கும் வாய்ப்பே இல்லாத அம் மக்களுக்கு அது மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது.

மாதுங்காவில் சுப்ரமண்ய சமாஜத்தில் மிகவும் அழகாக அலங்காரம் புரிந்து திருவீதி உலா நிகழ்த்தினார்கள்.

ஜய—ஐப்பசி 17 (2—11—54)

இன்று காலை வழிபாடு முடித்து நண்பர் திரு. T. V. லட்சுமண ஐயர் வீட்டில் பாரணம் புரிந்தோம். மாலை நண்பர்கள் திரு. சுப்பராவ், திரு. ராமையர், முதலியவர்கள் இல்லங்களுக்குப் போய் அவர்கள் புரியும் வழிபாடுகளில் கலந்துகொண்டேன். இரவு 8 மணிக்கு **தெய்வயானை வள்ளியம்மை திருமண** விரிவுரை நிகழ்த்தினேன்.

இரவு 1 மணிக்கு ஒரு பஸ் ஏற்பாடு செய்துக் கொண்டு 3 மணிக்கு **வஜ்ரேஸ்வரம்** சென்றோம். ஐப்பசி மாதம் ஆதலினால் கடும் பனி. வஜ்ரேஸ்வரத்தைச் சுற்றி மலைகள். எங்களுக்கு பஸ்ஸை விட்டு இறங்கவே முடியவில்லை. நடுங்கிக்கொண்டு இறங்கினோம். அங்கு ஒரு சிறு மண்டபம் உளது; அதில் சென்று சிறிது நேரம் இருந்தோம். சரியாக 4 மணி. நல்ல இருட்டு. மெல்ல நான் டார்ச் லைட்டின் உதவியால் வெளியே வந்து பல் விளக்கிவிட்டு, அங்கிருக்கும் ஒரு குளத்தில் மெல்ல கால் விடுத்தேன். அது நல்ல வெந்நீர்க்குளம். பனி பொழிந்து கொண்டிருக்கும் அந்த நேரத்தில் மிக இதமாக இருந்தது; எல்லோரையும் இறங்கிக் குளிக்குமாறு செய்தேன். விடிகின்றவரை அக்குளத்தைவிட்டு நாங்கள் எழவேயில்லை. மூன்று குளத்தில் ஒன்று சற்று குறைந்த சூடுள்ளது. இடையில் உள்ளது நிதானமான சூடுள்ளது. ஒன்று சிறிது கூடிய சூடுள்ளது. தண்ணீர் கந்தக வாசனை. 3 அடி உயரம்தான் ஆழம். நன்றாக இருந்து குளிக்கக்கூடியவை. பல நோய்களைத் தீர்க்கவல்ல நீர். பல சர்ம நோயாளிகள் அவ்விடம் வந்து பலநாள் தங்கி நாள் கணக்கில் குளிக்கின்றார்கள்.

ஜய—ஐப்பசி 18 (3—11—54)

பொழுது விடிந்தது. குளத்தை விட்டு எழுந்து அருகில் ஒரு ஆறு ஓடுகின்றது. அங்கு சென்றோம். அங்கும் 6, 7 வெந்நீர் ஊற்றுக்கள் இருந்தன. அவற்றில் ஒன்று அரிசியை வேகவைக்கும் அளவில் மிக்க சூடாக இருந்தது. நாங்கள் அவ்விடமுள்ள 2, 3 வெந்நீர் ஊற்றில் முழுகி, பின்னர் ஆற்றில் குளிர்ந்த நீரில் முழுகினோம். நித்திய வழிபாடு செய்தோம். காலை 9 மணிக்குப் பஸ் ஏறி புறப்பட்டு 3 கல் தொலையில் உள்ள கணேசவாடி என்ற ஊர் சென்றோம். அங்கு ஒரு மகான் இருக்கின்றார். அவர் பேர் **நித்யானந்தர்.**

அவர்களைக் காணும் பொருட்டுப் பல அன்பர்கள் வருகின்றார்கள். பலர் அங்கு தங்கியும் தெரிசிக்கின்றார்கள். தங்க வசதியும் இருக்கின்றது. காணவந்தவர்கள் கொணர்ந்து சுவாமிகளின் திருமுன் வைத்த பழங்கள் ஒரு பெருங் குவியலாக இருந்தன. ஊதுபத்திக் குவியலும் இருந்தது. அடிகளார் அன்று மௌனமாக இருந்தார். அம் மகானைத் தெரிசித்தோம். அங்கும் மூன்று வெந்நீர் ஊற்றுக்கள் இருக்கின்றன. அன்பர்கள் கொணரும் தேங்காயைக் குண்டத்தில் எரிந்தவண்ணம் இருக்கின்றார்கள்.

அங்கிருந்து புறப்பட்டு 1½ கல் தொலை வந்து அங்கு ஒரு சிறு குன்றின் மீதுள்ள **வஜ்ரேஸ்வரி** அம்பிகையின் கோயிலைத் தெரிசித்தோம். மீளவும் பஸ்ஸில் புறப்பட்டு 20 கல் தூரம் வந்தபின், அந்த பஸ்ஸுக்கு லைசன்ஸ் இல்லாமையால் போலீஸ் அதிபர் அதைத் தடுத்து நிறுத்திவிட்டார். பின்னர் நாங்கள் அரும்பாடு பட்டு, வேறு இரு பஸ்களில் ஏறி டாண என்ற புகைவண்டி நிலையம் வந்து புகைவண்டியில் ஏறி மாலை 4-45 மணிக்கு பம்பாய் வந்து அகாலத்தில் உணவு உண்டோம்.

பின்னர், இரவு 10 மணிக்கு எங்கள் வண்டி புறப் பட்டது. என்னுடன் வந்த அன்பர்கள் அனைவரும் புறப் பட்டுச் சென்றார்கள்.

அடியேன் மட்டும் சமாஜ அன்பர்களின் வேண்டு கோளுக்காகப் பம்பாயில் நின்று இரவு 8 மணிக்கு **சுந்தர மூர்த்தி நாயனார் புராணம்** என்பது பற்றி விரிவுரை செய்தேன். அத்துடன் சஷ்டி விழா நிறைவு பெற்று அளவற்ற அன் பர்கள் வந்து மிக்க மகிழ்ச்சி யுற்றார்கள்.

விடியற்காலை 3 மணிக்கே எழுந்து நீராடி நித்திய வழிபாட்டை முடித்துக்கொண்டு சமாஜ அன்பர்களிடம் பிரியா விடைபெற்றுப் புறப்பட்டேன்.

## சூரத் (தபதிநதம்)

ஜய—ஐப்பசி 19 (4—11—54)

காலை 6 மணிக்கு பம்பாய் சென்ட்ரல் நிலயம் போய் புகைவண்டியில் ஏறினேன். பகல் 2 மணிக்கு சூரத் என்ற நகரம் சேர்ந்தேன். புகைவண்டி நிலயத்திற்கு 2 கல் தொலையில் **தபதியாறு** மேற்கே நோக்கி ஓடுகின்றது. மேற்கே நோக்கி ஓடுகின்ற ஆற்றுக்கு நதம் என்று பேர்.

கடலூர் மாவட்டத்திலிருந்து என்னுடன் வந்த நண்பர்களில் பஞ்சபாண்டவர்களைப்போல் ஐவருண்டு. அவர்களில் ஒரு பெரியவர் மற்றவர்களை அநுசரிக் காமல் யாரையோ கேட்டுக்கொண்டு ஆற்றுக்குப் போய் விட்டார். அத் தகவலை அறியாமல் இங்கும் அங்குமாக மூன்று மணி நேரம் அலைந்து திரிந்தும் அகம் உலைந்தும் வருந்த நேரிட்டது. பலர் சேர்ந்து செல்லும் யாத்திரை யில் ஒருவரை யொருவர் அநுசரித்துச் சென்றால் இந்த அவதி நேராது.

தபதியில் சென்று நீராடினோம். பஸ்கட்டணம் 0-3-0. அதன் கரையில் அஸ்வினி தேவர்கள் வழிபட்ட

சிவலிங்கம் உளது. அதற்கு நேராக உள்ள துறைக்கு அஸ்விநிகாட் என்று பேர்.

அங்கு **அக்ஷயவடம்** என்ற ஒரு சிறு ஆல் இருக்கின்றது. அதில் 3 இலைகள்தான் இருக்கின்றன. அது எப்போது முளைத்தது என்பது ஒருவருக்கும் தெரியாதாம். ஒரு இலை உதிர்ந்தால் மறு இலை தோன்றுமாம். அது ஒரு மகிமை வாய்ந்தது. 5 அடி உயரமும், கட்டைவிரல் கனமும் உள்ள அந்த ஆல் நித்தியமானது என்றார்கள்.

பின்னர் சூரத் நகருக்குள் சென்று **அம்பாஜி** என்ற அம்பிகையைத் தெரிசித்தோம்.

இரவு 8-22 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. இரவு 10 மணிக்கு **ப்ரோச்** சேர்ந்தோம்.

## ப்ரோச் (நர்மதை நதம்)

ஜய—ஐப்பசி 20 (5—11—54)

காலையில் எழுந்தோம். புகைவண்டி நிலயத்திற்கு அருகிலே **நர்மதையாறு** மேற்கே ஓடுகின்றது. இது ஏழு நதிகளில் ஒன்று. ஆண் ஆறு என்று இதை நூல்கள் புகழுகின்றன. மிகப் புனிதமானது. நாங்கள் அனைவரும் அம் மகிமை நிறைந்த ஆற்றில் முழுகி வினைகளை விலக்கினோம். பிறகு நித்திய வழிபாடு புரிந்தோம். பகல் 11 மணிக்கு வண்டி புறப்பட்டது. பகல் 1-15 மணிக்குப் பரோடாவை யடைந்தோம்.

## பரோடா

மாலை 4 மணிக்குப் பரோடா நகரைச் சென்று பார்த்தோம். விலங்கு காட்சிசாலை, ஓவிய சாலை, கண்காட்சி சாலை, அழகிய பூங்கா முதலியவற்றைப் பார்த்தோம். மன்னருடைய இடம் ஆதலின் எல்லாம் அழகாக அமைந்திருந்தன. புகைவண்டி நிலயமும் மிக வனப்பாக இருக்

கின்றது. அரண்மனையைப் பார்க்கப் போதுமான நேரம் இல்லாமையால் நேரே புகைவண்டி நிலையம் வந்தோம்.

இரவு 12 மணிக்கு எங்கள் வண்டியில் புறப்பட்டு விடியற்காலை 4 மணிக்கு **அகமதாபாத்துக்குச்** சென்றோம்.

## அகமதாபாத்

ஜய—ஐப்பசி 21 (6—11—54)

காலையில் அகமதாபாத் புகைவண்டி நிலையத்திலேயே நீராடி நித்திய வழிபாடு புரிந்தோம். காலை 9 மணிக்குப் புறப்பட்டு பஸ்ஸில் **சபர்மதி ஆச்சிரமம்** போயிருந்தோம். 3 கல் தொலையில் சபர்மதி நதிக்கரையில் அது மிக அழகாக அமைந்துளது. இங்கு காந்தியடிகள் பன்னிரண்டு ஆண்டுகள்வரை இருந்து உலகத்திற்குத் தொண்டு புரிந்தனர். இப்போதும் பல கைத்தொழில்கள், காகிதம் புரிதல், ராட்டை செய்தல், நெசவு முதலியவைகள் நடைபெறுகின்றன. கோசாலையும் உளது. காந்தியடிகளது பலவகையான படங்கள் இருந்து அலங்கரிக்கின்றன. அங்கு சென்ற உடனே உள்ளம் உருகியது. காந்தியடிகளாரது நினைவு நெஞ்சை யள்ளியது. சிறிது நேரம் மெய் மறந்து நின்றோம். மனிதரிற் புனிதர் வாழ்ந்த அந்த இடத்தைச் சுற்றிவந்தோம். ஆச்சிரமத்திற்கு நேராக சபர்மதி நதியில் இறங்க அழகிய படிகள் விசாலமாக இருக்கின்றன. அங்கு இறங்கி நீராடினோம்.

அதற்கு அருகில் சிறிய சிவாலயம் உளது. அதன் அருகில் ததீசி முனிவர் தவஞ் செய்த இடம் உளது. அங்கு அவர் திருவுருவம் உளது. அவற்றைத் தெரிசித்துவிட்டு பஸ் ஏறி அகமதாபாத் நகருக்கு வந்து காளிதேவி கோயில் சென்று தெரிசித்தோம்.

நாங்கள் வண்டிக்கு வருமுன் ஒருசிலர் முன் கூட்டி வண்டிக்குச் சென்றார்கள். அதில் ஒருவர் உணவு படைக்

கும் அன்பரைப் பார்த்து தனக்கு முன்கூட்டி அன்னம் படைக்குமாறு கேட்டனர். படைக்கும் அன்பர் "மற்றவர்களும் வரட்டும்; சேர்த்துப்படைக்கின்றேன்" என்று கூறினர். தான் கேட்ட மாத்திரத்தில் அவர் படைக்க மறுத்தது கருதி அந்த அன்பர் முனிவு கொண்டு அன்று முழுவதும் உணவு செய்யாது உபவாசமிருந்தனர். மறுநாள் தான் உணவு செய்தனர். யாத்திரை புரிவோர் மனத்தில் சினத்தைச் சேரவிடக் கூடாதென்று திருவருளை நினைந்து பிரார்த்தித்தேன்.

மாலை பூங்காவனஞ் சென்றோம். அங்கு பல விலங்குகளும் பறவைகளும் காட்சிப் பொருள்களாக வைத்திருக்கின்றார்கள். அங்கு ஒரு மேடைமீது மூன்று குரங்குகளின் உருவங்களை வைத்திருக்கின்றார்கள். ஒன்று காதையும், ஒன்று கண்ணையும், ஒன்று வாயையும் மூடிக்கொண்டிருக்கின்றன. "உலக விஷயங்களைக் கேட்காதே; உலக விஷயங்களைக் காணுதே; வீணான விஷயங்களைப் பேசாதே" என்ற உண்மைகளை அவை உணர்த்துகின்றன.

வேதானந்த சரஸ்வதியால் நிறுவிய கீதா மந்திரத்தைக் கண்டோம். விசாலமான மண்டபம். மிக்க அழகாக இருக்கின்றது. மூவாயிரம் ஆட்கள் இருக்கலாம். சொற்பொழிவு செய்வதற்குத் தக்க இடம். பிறகு கடைவீதிகளையும் பார்த்தோம். துணிக்கடைகள், துணி ஆலைகள் அங்கு நிரம்ப இருக்கின்றன.

ஜய—ஐப்பசி 22 (7—11—54)

காலையில் நீராடி நித்திய வழிபாட்டை முடித்துக் கொண்டோம். காலை 11-10 மணிக்கு எங்கள் வண்டியில் புறப்பட்டு பகல் 1-15 மணிக்கு வீரங்காம் சேர்ந்தோம்.

வீரங்காமிலிருந்து துவாரகைக்குச் சிறிய இருப்புப் பாதை யாதலின் எங்கள் வண்டி வீரங்காமிலேயே நின்று

விட்டது. வேறு சிறிய வண்டியில் பகல் 2-30 மணிக்கு ஏறினோம். **ராஜகோட்** சந்திப்பு வழியாக அந்த வண்டி சென்றது.

## துவாரகை

ஜய—ஐப்பசி 23 (8—11—54)

காலை 9 மணிக்குத் **துவாரகை** சேர்ந்தோம். துவாரகை வர 6 கல் தொலை இருக்கும்போது எங்கள் திருக் கூட்டத்தில் ஒருவரது சாவி தவறிக் கீழே விழுந்து விட்டது. அதன் பொருட்டு அவரும் மற்றொரு நண்பரும் வண்டி நின்றவுடன் இறங்கி சிறிது தூரம் நடந்து போய் சாவியை எடுத்துக்கொண்டு, பின்னர் நடந்தும் சிறிது தூரம் கட்டை வண்டியில் ஏறியும் பகல் 2 மணிக்குச் சிரமத்துடன் துவாரகை சேர்ந்தார்கள்.

துவாரகை புகைவண்டி நிலையத்திற்கு அருகிலேயே பெரிய தருமசாலை யிருக்கின்றது. அதில் நாங்கள் தங்கினோம். அங்கிருந்து கோயிலும் ஊரும் ஒரு கல். கோமதியாறு வந்து அங்கு கடலுடன் கூடுகின்றது. அங்கு சென்று எல்லோரும் நீராடிக் கண்ணபிரானைச் சேவித்து வந்தார்கள்.

அடியேன் தருமசாலையிலேயே முழுகி நித்ய வழிபாட்டைச் செய்தேன். மாலை 4 மணிக்குப் புறப்பட்டுச் சென்று சூரியன் மேல்கடலில் விழுந்தருணம்; கோமதியாறு மேல் கடலில் விழுகின்ற இடத்தில், அடியேனும் சில நண்பர்களும் நீராடி அநுஷ்டானம் புரிந்துகொண்டோம். மேல் கடல் ஓரத்தில் கண்ணபிரான் கோயில் அழகாக அமைந்துளது. கீழ்க்கடற் கரையில் விளங்கும் திருச்செந்தூரை நினைத்துக்கொண்டோம்.

துவாரகையில் கடற்கரையில் உள்ள மணல்கள் அத்தனையும் மணல் வடிவில் இல்லை. அவைலப்போல்

இருக்கின்றது. கோயிலுக்குள் சென்றோம். சுவாமி மேற்கே பார்த்து இருக்கின்றார். மிக்க அழகிய திருவுருவம். நவரத்தின அணிகலன்களால் அலங்கரிக்கப் பட்டுப் பார்க்கப் பார்க்கப் பரமானந்தத்தைத் தருகின்றார். **துவாரகை முத்தித் தலங்களுள் ஒன்று.**

கண்ணபிரான் சந்நிதியில் நாங்கள் அமர்ந்து தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய அருட்பாடல்களை ஓதி கூட்டு வழிபாடு செய்தோம். பின்னர் கண்ணபிரானுக்கு ஆராதனை நடந்தது. கண்ணபிரானுக்கு அப்பொழுது ஒரு புல்லாங்குழலும், மாடு மேய்க்குங் கோலும் வைத்து, பச்சைக் கல் இழைத்த திருவாபரணங்களும் அணிந்து அலங்கரித்திருந்தார்கள்.

ஆராதனை முடிந்ததும் புல்லாங்குழலையும் கோலையும் எடுத்துவிட்டார்கள். 13, 14 வயதுள்ள ஒரு இளம் பிரமசாரி பக்தியுடன் அமைதியாகவும் ஆராதனை செய்தார். சுவாமியிருக்கும் இடத்தைப் பொன்னாலும் வெள்ளியாலும் அலங்கரித்திருக்கின்றார்கள்.

சுவாமி கோயிலைச் சுற்றி பலராமர், பிரத்யும்னர், அநிருத்ரர், உருக்மணி, சத்யபாமை முதலியோருடைய கோயில்கள் இருக்கின்றன. இந்தத் துவாரகை சுவாமி அரசு செய்த இடம். கண்குளிரக் கண்டு களித்தபின் இரவு 9 மணிக்குத் தருமசாலை வந்து சேர்ந்தோம்.

## பேட்டி துவாரகை

*ஜய-ஐப்பசி 24 (9—11—54)*

அதிகாலை 4–30 மணிக்கு எழுந்து நீராடி நித்திய வழிபாட்டை முடித்துக்கொண்டோம். காலை 8 மணிக்குப் புகைவண்டியில் ஏறி காலை 10–15 மணிக்கு **ஓகா** என்ற புகைவண்டி நிலையம் போனோம். அத்துடன் இருப்புப்

பாதை முடிகின்றது. அங்கே கப்பல்களும் வந்து ஏற்றுமதி இறக்குமதி செய்கின்றன.

நாங்கள் புகைவண்டி நிலயத்திற்கு மிக அருகில் உள்ள தருமசாலையில் எங்கள் சாமான்களை வைத்து விட்டுப் படகில் ஏறினேம். கடலுக்கு நடுவில் பேட்டி துவாரகை இருக்கின்றது. குசேல முனிவர் வந்து பேட்டி கண்ட இடம் என்று கூறுகின்றனர். 3 கல் கடலில் படகில் பிரயாணம் புரிந்து அங்கு சென்றோம். படகை விட்டு இறங்கியவுடன் அங்கு ஆள் ஒன்றுக்கு 0-4-0 வீதம் வரிவசூல் செய்தனர். போக வர ஓடத்திற்குக் கட்டணம் 0-6-0.

கோயிலுக்கு முன் ஒரு ஆலமரத்தடியில் மிகச் சிறிய சிவாலயம் ஒன்றுளது. அழகிய சிவலிங்கம். அதைத் தெரிசித்துவிட்டு பகல் 11-30 மணிக்கு நாங்கள் கோயிலுக்குச் சென்றோம். கோயில் ஒரு அரண்மனை போல் மாட மாளிகையாக இருக்கின்றது. கண்ணபிரான் இங்கும் மேற்கே நோக்கியிருக்கின்றார். துவாரகையைக் காட்டிலும் இங்கு அழகாக இருக்கின்றார். ரத்னபரணங்கள் நிரம்பப் பூட்டி அலங்கரித்திருக்கின்றார்கள். கண் கொள்ளாக் காட்சி. வாயிலில் விநாயகர் இருக்கின்றார். கண்ணபிரானுக்கு வலப்பக்கம் கல்யாணராயர் கோயிலும், இடப்பக்கம் திரிவிக்ரமர் கோயிலும் இருக்கின்றன. உருக்குமணி, சத்யபாமை, சாம்பவதி, ராதை முதலியோர்களின் கோயில்கள் சிறியதாகத் தனித் தனியே இருக்கின்றன. எல்லா மூர்த்திகளும் நவரத்னமயமாகவே விளங்குகின்றன. மேல் மாடியில் ஒரு கண்ணாடி மயமாக படங்கள் பல அமைத்திருக்கின்றன. இந்த இடம் கண்ணபிரான் வாழ்ந்த இடம் என்பதற்குத் தக்கவாறே அமைந்துளது.

அங்கு மடாதிபதி காலில் தண்டையும், பட்டுப் புடவையுந் தரித்துப் பெண்வேடந் தாங்கிவந்து பகவானை ஆராதிக்கின்றார். நாங்கள் கண்ணபிரான் திருமுன் இருந்து திருப்புகழ், கந்தர் அநுபூதி கூறி, "வான்முகில் வழாது பெய்க" என்ற பாடலையும் ஓதி, "ஆறிரு தடந் தோள் வாழ்க" கூறி பாராயணம் புரிந்தோம்.

முத்தி உலகிற்கு முதற்படி ஏகதேவ வ்ழிபாடு.

கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோர்
இற்புலத் தவரை நாடார் யாங்களும் இன்ப வாழ்வும்
தற்பொறி யாக நல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய் பூரணா னந்த வாழ்வே.

என்கின்றார் தாயுமானார். எல்லாமாய் இருப்பவன் இளம் பூரணனும் முருகவேளேயாகும். ஆதலினால் எந்த மூர்த்திகளாயிருப்பினும், முருகவேளாகவே பாவனை செய்து வழிபடுவது எனது நியதி. அதனால் ஏகதேவ வழிபாட்டுக்கு இடரில்லை. எந்தத் தேவாலயம் போனாலும் அங்கும் எந்தை கந்தவேளையே கண்டு தொழுவேன். சிக்கியர், புத்தர், அருகர் கோயிலுக்குப் போனாலும் இதே நியதிதான். ஆகவே துவாரகையில் நாங்கள் திருப்புகழ் பாராயணம் புரிந்து போற்றினோம் என உணர்க. இது ஸ்ரீமத் **பாம்பன் சுவாமிகள்** காட்டிய செந்நெறியாகும்.

பகல் 12-30 மணிக்குப் புறப்பட்டுப் படகில் ஏறி ஒகா என்ற இடத்திற்கு வந்து உணவு செய்துகொண் டோம். மாலை 5-45 மணிக்குப் புகைவண்டியில் ஏறிப் புறப்பட்டோம். புகைவண்டியில் க்வாலியர் என்ற ஒரு வகுப்பினர் அதிகமாக ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கின்றனர். அவர்களுடைய ஆடைகளும், சுமக்க முடியாத அளவில் வெள்ளியில் செய்த அணிகலங் களும், கண்ணாடி அபிரேக் பதித்த புடவைகளும் விநோதமாக இருக்கின்றன. ஆண்கள் அனைவரும்

ஒரு கோல், கம்பளி வைத்திருக்கின்றார்கள். யாதவர் மரபு என்று அவரைக் கூறுகின்றார்கள். ஜாம் நகர் வழியாக விடியற்காலை 4-15 மணிக்கு **ராஜகோட்** சேர்ந்தோம்.

## ராஜகோட்

ஜய—ஐப்பசி 25உ (10—11—54)

ராஜகோட் சௌராஷ்ட்ர தேசத்தின் தலைநகரம். ராஜகோட் நகரில்தான் காந்திஜீ முதலில் இருந்து வக்கீல் தொழில் தொடங்கியது. இங்கு புகைவண்டி நிலையத்திற்கு அருகில் ஒரு தருமசாலை யிருக்கின்றது. அங்கு தங்கி நீராடி வழிபாடு செய்தோம். நகர பஸ்ஸில் ஏறி **பஞ்சநாதர்** கோயிலுக்குச் சென்றோம். நல்ல சலவைக் கல்லால் அழகாகக் கட்டியிருக்கின்றனர். சிவபெருமான், பார்வதி இலக்குமி சரஸ்வதி, ஸ்ரீராமர் லட்சுமணர் சீதை, சீதளாதேவி, காயத்திரி என்ற ஐந்து மூர்த்திகள் இருக்கின்றனர்.

பகல் 1.10 மணிக்குப் புகைவண்டியில் ஏறினோம். இடையில் ஜெடலாசர் சந்திப்பு நிலையம் வந்தது. அது கடந்து ஜூனகாட் என்ற நிலையத்தில் கடல் அலைமோதுவதுபோல் ஜனங்கள் வந்து புகைவண்டியில் ஏறினார்கள். மூச்சு நின்றுவிடும்போல் இருந்தது. இப்படியும் அப்படியும் திரும்பவும் முடியாத நிலை ஏற்பட்டது. பலர் ஜன்னல் வழியேதான் ஏறினார்கள். பொறுக்கமுடியாத துன்பம் ஏற்பட்டது. கடைசிவரை அத் துன்பம் இருக்கவில்லை. 3 நிலையங்கள் கடந்ததும் அந்த ஜனங்கள் இறங்கி விட்டார்கள். அங்கு ஒரு மலை மீது மகிமை நிறைந்த ஜூனகிர் என்ற கோயில் உளது என்றும், அங்கு பௌர்ணமி யன்று விழா என்றும், அதன்பொருட்டு 3 லட்சம் ஜனங்கள் கூடினார்கள் என்றும் அறிந்தோம். மாலை 7 மணிக்கு **வீரவால்** சேர்ந்தோம். புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள தருமசாலையில் தங்கினோம்.

## சோமநாதம் (பிரபாச பட்டினம்)

ஐய—ஐப்பசி 26 (11—11—54)

அதிகாலையில் எழுந்து விடிவதற்குள் நித்திய வழி பாட்டை முடித்துக்கொண்டோம். வீரவாலிலிருந்து 3 கல் தொலையில் **பிரபாசபட்டினமும், சோமநாதமும்** இருக்கின்றன. ஆள் 1-க்கு 0-3-0 கொடுத்து பஸ் ஏறி **பிரபாசபட்டினம்** சென்றோம். இது சரித்திரப் புகழ் பெற்ற நகரம். கண்ண பிரான் காலத்தில் இந்நகரம் மிகவும் உன்னத நிலையில் இருந்தது. கோட்டைகளும் கட்டிடங்களும் இடிந்து கிடக்கின்றன.

பிரபாச பட்டினத்திற்கு ½ கல் தொலையில் **திரிவேணி** என்ற இடத்திற்குச் சென்றோம். அங்கு ஹிரண்யா நதி யும், கபில நதியும் கூடுகின்றது; சரஸ்வதி நதி சிறிது முன் கூட்டிக் கலப்பதாகவும், வ்ரஜனி, நெங்கு என்ற இரு நதிகள் அந்தர்வாஹினியாகக் கலப்பதாகவும் கூறி னார்கள். மிகமிகச் சிறந்த தீர்த்த கட்டம் அது. அதில் நீராடி அநுஷ்டானம் புரிந்தோம். அதன் கரையில் திரிவேணி மாதாவின் கோயிலைத் தெரிசித்தோம்.

அங்கிருந்து 2 பர்லாங்கு தூரத்தில் கண்ணபிரான் முத்தியடைந்த இடத்திற்குச் சென்றோம். **சொர்க்காரோணம்** என்று அதற்குப் பேர். ஹிரண்யா நதிக்கரையில் ஒரு **குராமரம்** உளது. அதன் அடியில்தான் பகவான் கண்ண பிரான் வேடன் அம்பு திருவடியில் படுவதைக் காரண மாகக் கொண்டு யோகமுறையில் சிரசிலிருந்து ஜோதி வடிவாகப் புறப்பட்டுத் திருமேனியை விட்டு வைகுந்தம் போனார். மிகவும் புண்ணியமும் புனிதமும் அமைந்த அந்த இடத்திற்குச் சென்றவுடன் உள்ளம் உருகியது. மனம் ஒருமைப்பட்டது. ஒருவகையான உணர்ச்சியுண் டாகியது. கண்ணபிரான் முத்தி அடைந்த அந்த இடத் திற்கு அருகில் ஒரு சிறு குகை இருக்கின்றது. அங்கு

பல தலைகளுடன் கூடிய ஒரு பாம்பின் சிலை இருக்கின்றது. ஆதிசேட அவதாரமாகிய பலராமர் அந்த இடத்தில்தான் சரீரத்தை விடுத்து பாம்பு வடிவங்கொண்டு பாதலம் புகுந்தது. அதற்கு அருகில் **லட்சுமி நாராயணர்** கோவிலும் இருக்கின்றது. அதற்கு அருகில் ஒரு சிறு கோயிலில் "**பீமேஸ்வரர்**" என்ற சிவலிங்கம் பெரிய உருவில் இருக்கின்றது. அது சுயம்புலிங்கம்.

நகரம் இருந்து அழிந்த சின்னங்கள் காணப்படுகின்றன. **சூரியகுண்டம்** என்ற பாதாள சுனை படிகளுடன் இருக்கின்றது. அதற்கு அருகில் ஒரு சிவாலயம் இருக்கின்றது. வேற்று மதத்தினரால் அங்குள்ள சிவலிங்கம் அகற்றப்பட்டிருக்கின்றது. சுவற்றில் சூரிய வடிவத்தை எழுதி யிருக்கின்றது.

அங்கிருந்து ஒரு பர்லாங்கு தொலை மேற்கில் ஒரு சிவாலயம் இருக்கின்றது. அங்குள்ள சிவலிங்கம் அழகாக அமைந்திருக்கின்றது. அதற்கு **சித்தேச்வரம்** என்று பெயர். அதற்கு எதிரில் அரசமரத்தின் கீழ் பாணலிங்கம் உளது. இவைகளை எல்லாம் தெரிசித்துக்கொண்டு பிரபாஸ பட்டினம் வந்து சேர்ந்தோம். அங்கு பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களுள் ஒன்ருகிய **சோமநாத** சிவலிங்கத்தைத் தெரிசித்தோம். அது பூமிக்குக் கீழ் சுரங்கக்கோயிலில் விளங்குகிறது. பல விளக்குகள் எரிகின்றன. அருகில் அந்தணர்கள் இருந்து வேத மந்திரங்களை உச்சரிக்கின்ருர்கள். பற்பல சிவலிங்கங்களைப் பார்த்த எங்களுக்கு மகிமை வாய்ந்த அச் சிவலிங்கத்தைக் கண்டவுடன் மெய் சிலிர்ப்பும் மன ஒருமையும் எய்தியது; உள்ளம் உருகியது. மலரிட்டு நாங்களே அருச்சித்து திருவாசகம் கூறி கற்பூர ஆராதனை செய்து வழிபாடு செய்தோம். அம்மூர்த்தி பளபளவென்று மெருகிட்ட மரகதச் சிலை போல் காட்சி தருகின்றது. வழிபட்ட பிறகு சிவலிங்கத்

திற்கு முன் கம்பீரமாக படுத்திருக்கும் நந்தியெம்பெரு மானைத் தொழுது மேலே வந்தோம். மேல் தட்டில் **அகல்யா பாய்** என்ற மகாராணியார் நிறுவிய சிவலிங்கத்தை வணங்கினோம். கோயிலை வலம்வந்து விநாயகர், திருமால் முதலிய மூர்த்திகளையும் தெரிசித்தோம். அக்கோயிலில் ஈசான திசையில் **காளீஸ்வரர்**என்றசிவலிங்கம்இருக்கின்றது.

ஒரு பர்லாங்கு தூரம் மேற்கில் கடற்கரை ஓரமாக திரு **வல்லபாய் படேல்** அவர்கள் புதுப்பித்த **சோமநாதர்** ஆலயம் இருக்கின்றது. அக்கோயில் விசாலமாக சலவைக் கற்களால் இன்னும் திருப்பணி நடந்துகொண் டிருக்கிறது. சிவலிங்கம் மிக அழகாகத் திகழ்கின்றது. இக் கோயிலைப் பகைவர்கள் மத வெறியினால் பதினெட்டு முறை பாழாக்கினார்கள். தங்கக் கதவுகளும், நவரத்தினப் பாத்திரங்களும் விலைமதிக்கமுடியாத அணிகலன்களும் கொள்ளையிடப்பட்டன. இடிந்து சிர்குலைந்து காண்பார் உள்ளம் வருந்த இருந்த அந்த இடத்தில் வல்லபாய் படேல் அவர்கள் பல இலட்சம் ரூபாய்கள் செலவு செய்து ஆலயத்தைப் புதுப்பித்த பெருமை அளவிடற் கரியது. உலகம் அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறது. அக் கோயிலுக்கு நேரே தென் திசையி லுள்ள கடல் துறைக்கு **வல்லபாய் காட்** என்று பெயர்.

கடல் அலைகள் மதில் சுவரில் மோதிக்கொண்டிருக் கின்றன. கோயிலும், கோயிலின் செயற்கை யழகும், கடலும், கடலின் இயற்கை யழகும் சேர்ந்து உள்ளத் தைக் கொள்ளை கொள்ளுகின்றன. நெடுநேரம் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தை உண்டாக்குகின்ற அவ் விடத்தை விட்டுப் பிரிய மனமின்றி தாயைப் பிரியும் கன்று போல் பிரிந்துவந்தோம்.

நகருக்குள் ஒரு பெரும் மண்டபத்துள் பகைவர்கள் முன்னிருந்த கோயிலை உடைத் தெறிந்த அதிநுட்பமான

வேலைப்பாடுகளமைந்த பல சிலைவடிவங்களைக் காட்சிப் பொருளாக வைத்திருக்கின்றார்கள்.

அதற்கு அருகில் பல இலட்ச ரூபாய்கள் செலவழித்து முழுவதும் சலவைக் கற்களினாலேயே புதுக்கிய ஜைனர் கோயில் இருக்கின்றது.

அங்கிருந்து புறப்பட்டு ஆள் ஒன்றுக்கு 0—4—0 கொடுத்து குதிரைவண்டியிலேறி வீரவால் தருமசாலைக்கு வந்தோம்.

அன்று மாலை வீரவால் நகரத்தின் கடற்கரைக்குச் சென்றோம். துறைமுகத்தில் கப்பல்களும், ஓடங்களும் நிறைந்திருந்தன. ஆயிரக்கணக்கான தானிய மூட்டைகள் மலைபோல் குவிந்திருந்தன. பம்பாய் முதலிய நகரங்களிலிருந்து பல சரக்குகள் கடல்மூலமாக வருவதனாலும், அரேபியாவிலிருந்து பண்டங்கள் வருவதனாலும் வீரவால் நகர் சிறந்த வியாபாரப்பெருக்குடையதாக விளங்குகிறது. கட்டிடங்களும், மூன்றடுக்கு நான்கடுக்குகளுடன் வானமளாவி வளம்பெற்றிருக்கின்றன. இவைகளைப் பார்த்துவிட்டு வரும் வழியில் **நாகநாதர்** என்ற சிறிய கோயிலில் பெரிய கோயில்களிலில்லாத பக்தி சிரத்தையுடன் நெடுநேரம் ஆராதனை நடைபெறக் கண்டு வணங்கி மனம் மகிழ்ந்தோம்.

## பிரபாசபட்டின வரலாறு

பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் போர் முடிந்தபின் புத்திரசோகத்தில் ஆழ்ந்திருந்த காந்தாரியைக் கண்ணபிரான் வணங்கினார். சிறந்த பதிவிரதையாகிய காந்தாரி கண்ணன்மீது சினங்கொண்டு, "கண்ணா! என் குல அழிவுக்கு நீயே முதற்காரணம்; என் குலம் அழிந்ததுபோல் உன் குலமும் ஒருங்கே அழியக்கடவது" என்று சபித்தனள். அதுவும் பூபாரம் தீர நன்மைக்கே என்று கண்ணபிரான் களிப்புற்றனர்.

துவாரகையில் அரசுபுரிந்துகொண்டிருந்த கண்ண பிரான், பலராமர், சாத்தகி, பிரத்யுமனன், அநிருத்னன் முதலியோர் மனமகிழ்ந்து விளங்கிய காலத்தில் கண்ணுவ முனிவர் அங்கு சென்றனர். யதுகுலத்தோர் ஒருவனைக் கருப்பவதிபோல் பெண்வேடம் கொள்ளச் செய்து முனிவருக்கு முன் அழைத்துச் சென்று, "இவள் கருவுற்றிருக்கின்ருள்; பிறப்பது ஆணு? பெண்ணு?" என்று வினவினர்கள். முனிவர் பெருமான் முனிந்து, "உலக்கை பிறந்து உங்கள் குலத்தை அழிக்கும்" என்று கூறிச் சென்றனர்.

பெண்ணுருவம் பெற்ற அவன் வயிற்றில் இருப் புலக்கை பிறந்தது. அதைக் கண்டு அஞ்சிய யதுகுலத் தோர் அதைப் பொடிசெய்து கடலில் கொட்டிவிட்டனர். எஞ்சிய ஒரு சிறு இருப்புத் துண்டையும் கடலில் எறிந்தனர். அதனை ஒரு மீன் விழுங்கியது. வலைஞர் அம் மீனைப் பிடித்து அதன் வயிற்றிலிருந்த இருப்புத் துண்டை எறிந்துவிட்டனர். அதனை ஒரு வேடன் (இவன் முற்பிறப்பில் வாலி) எடுத்து தன் அம்பின் நுனியில் அமைத்துக்கொண்டான்.

பிரபாச பட்டினத்தில் சோமநாதர் ஆலயத்தில் நிகழும் விழாவின்பொருட்டு கண்ணன் முதலிய யதுகுலத் தோர் அனைவரும் வந்து குழுமியிருந்தனர். மதுமயக்கில் மீறிய சாத்தகிக்கும், கிருதவர்மனுக்கும் வாக்குவாதம் நிகழ அது காரணமாக பெருங் கலகம் விளைந்தது. கடலில் கொட்டிய இரும்புப் பொடிகள் அங்கு கோரைகளாக முளைந்திருந்தன. அவைகளைப் பிடுங்கி ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு ஒருங்கே அத்தனை பேரும் அழிந்தார் கள். அவ்வண்ணம் நிகழவேண்டும் என்ற நியதி இருந்த படியால் கண்ணபிரான் தடுக்காமல் ஹிரண்யா நதிக் கரையில் சென்று பலராமரைக் கண்டு வைகுந்தம் போகு

மாறு கட்டளையிட்டு குராமரத்தின்கீழ் யோக சமாதியில் அமர்ந்தனர். அவர் திருவுளத்தில் நினைத்தபடி அருச்சுனன் வந்து கண்ணபிரானைக் கண்டனன். "துவாரகை ஏழுநாட்களில்கடலில்முழுகிவிடும்;குழந்தைகளையும்பெண்களையும் அழைத்துச் செல்" என்று தனஞ்சயனுக்குக் கட்டளையிட்டனர். அருச்சுனன் துவாரகை சென்று யது குலத்தோர் அழிவைச் சொன்னவுடன் வசுதேவர் உயிர் துறந்தனர். தேவகி, உருக்குமணி, சத்தியபாமை முதலிய பெண்மணிகளை அழைத்துக்கொண்டு மீண்டதும் துவாரகை கடலில் அழுந்தியது. (இப்போதுள்ள துவாரகை அதிலிருந்து எஞ்சிய சிறுபகுதி). கண்ணபிரானுடைய பேரன் மகனாகிய வஜ்ஜிரன் என்ற சிறுவனை இந்திரப்பிரஸ்தத்திற்கு அரசனாக்கினான்.

பலராமர் சேடவடிவந் தாங்கி வைகுந்தம் சென்றனர். கண்ணபிரான் கால்களை முடக்கிக்கொண்டு யோக நிலையில் அமர்ந்திருந்தனர். வேட்டையாடிக் கொண்டு வந்த வேடன் யோகாசனத்தில் அமைந்த இரு கால்களையும் மான் கொம்பு என்று கருதி தொலைவிலிருந்து அந்த இரும்புத்துண்டு அமைந்த பாணத்தை விடுத்தான்.

ஒரு சமயங் கண்ணபிரான் தூருவாசருக்குப் பணிவிடை புரிந்தபோது உடம்பு முழுவதும் எண்ணெய் பூசினார். காலில் ஒரு சிறுபகுதி எண்ணெய் பூசப்பெறுமையால் "உன் கால்வழியே உயிர் பிரியும்" என்று தூருவாசர் கூறினார். அதன்படி கண்ணபிரான் காலில் அக் கணை பட்டு, பாம்பு சட்டையை உரிப்பதுபோல் யோக நெறியால் அநாயாசமாக திருமேனியை உதறிவிட்டு ஜோதி வடிவாகக் கண்ணபிரான் வைகுந்தம் அடைந்தனர்.

இவ்வாறு பூபாரந் தீர்க்கப் புகுந்த புருஷோத்தமன் வைகுந்தமடைந்த புண்ணிய இடமாகிய ஹிரண்யா நதிக்

கரையையும், அக்குராமரத்தையும் பார்க்கும் பேறு தவப் பயனால் எங்களுக்குக் கிடைத்தது.

ஜய—ஐப்பசி 27 (12—11—54)

காலையில் எழுந்து மீளவும் பிரபாஸபட்டினம் போய் திரிவேணி சங்கமம் சென்று அதை அடுத்துள்ள சொர்க்காரோணம் போய் அங்குள்ள ஹிரண்ய நதியில் முழுகினோம். முந்தியநாள் தெரிசித்த மூர்த்திகள் எல்லா வற்றையும் முறையே தெரிசித்துக்கொண்டு சோம நாதரையும் வழிபட்டோம். கடற்கரையிலுள்ள சோமநாதர் ஆலயத்திலும் சென்று வணங்கினோம். வீரவால் வந்து மீண்டும் நீராடி நித்திய வழிபாடுகள் செய்தோம்.

பகல் 2-10 மணிக்கு புகைவண்டியிலேறி **ஜடலாசர்** சந்திப்பை யடைந்தோம். அங்கிருந்து **போர்பந்தர்** போகும் வண்டியில் அளவுக்கு மீறிய கூட்டம் ஏறி எங்களுக்கு இடமின்மையால் வழி காட்டி அன்பரை மட்டும் போர்பந் தருக்கு அனுப்பிவிட்டு நாங்கள் அங்கு தங்கினோம். குளிர் மிகுதியினால் வருந்தினோம். அங்கிருந்து இரவு 2 மணிக் குப் புகைவண்டியிலேறினோம். அந்த வண்டியிலும் கூட் டம் மிகுதியினால் துன்புற்றோம்.

## போர்பந்தர் (சுதாமபுரி)

ஜய—ஐப்பசி 28 (13—11—54)

காலை 9-30 மணிக்கு போர்பந்தர் சேர்ந்தோம். புகை வண்டி நிலையத்தின் அருகிலுள்ள அருமையான தரும சாலையில் தங்கினோம். புகைவண்டி நிலையத்திலேயே குளித்து நித்திய வழிபாடு செய்தோம்.

முன்னாளிரவு எங்கள் உணவு படைப்பாளர் ஜடலா சர் சந்திப்பில் குளிரில் தயிர் அன்னம் படைத்தாரென்று எங்களுடன் வந்த அன்பரில் ஒருவர் சமையல் செய்யும்

அன்பரையும், புகைவண்டி அமைப்பாளரையும் உள்ளஞ் சுடும் கடுஞ் சொற்கள் பேசியபடியால் அவரைத் திருக் கூட்டத்திலிருந்து விலகுமாறு கூறினோம். அவர், "இனி அவ்வாறு பிழைபட நடப்பதில்லை" என்று மன்னிப்பு கேட்டுக்கொண்டார். அதுபடி அவர் அங்கீகரிக்கப் பட்டார்.

பகல் 3 மணிக்குச் சென்று "**சுதாமா மந்திர்**" தெரிசித் தோம். குசேல முனிவர் அங்கு அவதரித்தனர். குசேல ருடைய பிள்ளைத் திருநாமம் சுதாமா என்பது. அவர் அவதரித்த வீட்டைக் கோயிலாக அமைத்திருக்கின்றனர். கோயில் அழகாகத் திகழ்கின்றது. **கேதாரீஸ்வரர்** என்ற கோயிலையுந் தெரிசித்தோம்.

உலகம் புகழும் உத்தமரும், சுதந்திர பிதாவுமாகிய **காந்தியடிகள்** அவதரித்த திருமாளிகையைச் சென்று தெரி சித்தோம். அதற்கு அருகில் பளிங்குக் கற்களால் மிக அழகாக காந்தியின் புகழுக்கு அறிகுறியாகப் புதுக்கியுள்ள **கீர்த்திமந்திர்** என்ற மணிமண்டபத்தையும்கண்டுகளித்தோம். அதன் நடுவில், **கஸ்தூரிபாய்**, **காந்தியடிகள்** திருவுருவ ஓவியங் கள் பெருஞ்சிறப்பாக அமைந்திருக்கின்றன. மேல் மாடி யிலும், கீழே உள்ள அறைகளிலும் காந்தியடிகளின் பொன்மொழிகளைப் பளிங்குக் கற்களில் பொறித்து வைத் திருக்கின்றனர். காந்தியடிகளின் பலவகையான படங் களும் நிறைந்திருக்கின்றன. நூல் நிலையம் ஒன்று இருக்கின்றது. அந்த இடம் மனிதனைப் புனிதனுக்கும் மகிமை வாய்ந்ததாக விளங்குகின்றது.

அங்கிருந்து கிழக்கே ஒருகல் தொலையில், உள்ள **சங்கர் மந்திர்**, **கீதாமந்திர்** திருமால் **கோயில்** இவைகளைத் தெரிசித் தோம். போர்பந்தரில் எல்லா வீதிகளும், வீடுகளும் ஒரே வரிசையாகவும், நேராகவும், அழகாகவும், அமைந் திருக்கின்றன. ஒன்றேனும் பழைய வீடே காணப்பட

வில்லை. எல்லா வீடுகளும் மூன்று நான்கு அடுக்குகளு டன் இந்திரனுடைய அமராவதி நகரம் விண்ணிலிருந்து மண்ணிலிறங்கியது போல் காட்சி தருகின்றன.

துவாபர யுகத்தின் முடிவில் **குசேலரும்**, நாம் காண வாழ்ந்த **காந்தியடிகளும்** அவதரித்த **சுதாமபுரி** என்ற போர் பந்தரின் பெருமை போற்றத் தக்கது. வீதிகளில் இரு புறத்தும் நடை பாதையும், குளிர்ந்த தருக்களும், விசால மான வெளிகளும், பூஞ்சோலைகளும் இருக்கின்றன. போர் பந்தருக் கருகில் விமான நிலையமும், தொழிற்சாலைகளும் இருக்கின்றன. போர்பந்தர் கடற்கரையில் இருப்பதால் இனிய காற்று வீசுகின்றது. நாங்கள் தங்கிய தருமசாலை களுக்குள் போர்பந்தர் தருமசாலையே தூய்மை நிறைந் திருந்தது.

ஜய—ஐப்பசி 29உ (14—11—54)

காலையில் எழுந்து நீராடி நித்திய வழிபாடு செய் தோம். பகல் 1-40 மணிக்குப் புகைவண்டியில் ஏறிப் புறப் பட்டோம். வண்டியில் வரும்பொழுது ஜடலாசர் சந்திப் பில் ஒரு அன்பர் வாழைப்பழம் 12 வாங்கி உடன் வந்த அன்பர்களைப் பார்த்து, "உங்களுக்கு வேண்டுமா", "உங்க ளுக்கு வேண்டுமா?" என்று கேட்டனர். ஒரு அன்பர் "தேவையான அளவுக்கு வாங்காமல் அதிகமாக வாங்கி, எங்களை யேன் தொந்திரவு தருகின்றீர்? நண்டு கொழுத் தால் வளையில் தங்காது" என்றார். வாழைப்பழம் வாங்கிய அன்பருக்கு வந்தது சீற்றம். ஒவ்வொரு பழமாக எடுத்து ஜன்னலின் வழியே வெளியே எறிந்தனர். எறியவேண்டா மென்று தடுத்து இரண்டொரு பழத்தை எதிரிலிருந்த அன்பர் எடுத்துக்கொண்டனர். பரம கோபங்கொண்ட அன்பர் அதையும் வெடுக்கென்று பிடுங்கி வெளியே எறிந்தார். ஆனால் பழங்கள் வீணாகவில்லை. வெளியே நின்றுகொண்டிருந்த வறியவர்கள் எடுத்து சிரித்த

வண்ணம் உரித்து உண்டு உவந்தனர். வண்டிக்குள் ஒரு ஓரத்திலிருந்த அடியேன் இக்காட்சியைப் பார்த்து முனிவின் முடிவு வறியவருக்கு நன்மையாக முடிந்தது என்று சித்த சமாதானம் அடைந்தேன். இரவுமுழுவதும் அந்த வண்டியில் பிரயாணம் செய்து விடியற்காலை எங்கள் வண்டி நின்றுகொண்டிருந்த **வீராங்கம்** சந்திப்பைச் சேர்ந்தோம். ஒருவாரமாகச் சிறிய புகை வண்டியில் நெருக்குண்டு அவதியுற்ற எங்களுக்குத் தாய்வீடு கண்டதுபோல் உவகை விளைந்தது.

ஜய—ஐப்பசி 30உ (15—11—54)

காலை வீராங்கத்தில் மின்சாரத்தால் அமைத்த வெந்நீர்க் குழாய்களில் குளித்து நித்திய வழிபாடு செய்தோம். காலை 8-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. பகல் 1 மணிக்கு (ஆமதாபாத் சந்திப்பு வழியே) **ஆனந்தா** சந்திப்பை அடைந்தோம். மாலை ஆனந்தா நகரில் பால் பண்ணைத் திறப்புக்காக இந்திய ஜனாதிபதி **ஸ்ரீ ராசேந்திர பிரசாத்** அவர்கள் வந்திருந்தனர். மிகுந்த ஜனக்கூட்டத்தில் அவர் இனிய விரிவுரை செய்தனர். அதை நாங்கள் பார்த்துவிட்டு கடைவீதிகளையும் பார்த்துப் புகைவண்டி நிலையத்தை அடைந்தோம்.

இரவு 7-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டு **டாக்கோர்** என்ற ஊருக்கு இரவு 8-45 மணிக்குச் சேர்ந்தது.

## டாக்கோர் (கிருஷ்ண துலாபாரம்)

ஜய—கார்த்திகை 1 (16—11—54)

கடுங்குளிர் நிறைந்த அங்கு அதிகாலை 5-மணிக்கு எழுந்து ஒரு கல் தொலையிலுள்ள கோமதித் தடாகத்தில் சென்று முழுகினோம். அத் தடாகம் பெரிய நதியைப் போல் மிக விசாலமாக விரிந்திருக்கின்றது. எங்களிடம் இருந்த கல்லாமை, ஈயாமை, நல்லவர்களுடன் சேராமை,

நல்ல விஷயத்தைப் பிறருக்குச் சொல்லிக் காட்டாமை, பிறர் வாழ மனம் பிடியாமை, பக்தி செய்யாமை, பொருமை முதலிய ஆமைகள் அத் தடாகத்தில் கழிந்தமைபோல் அங்கு பல ஆமைகள் சஞ்சரித்தன. அதன் கரையில் நித்திய வழிபாடு செய்தோம்.

கரையிலுள்ளசிவபெருமான், விநாயகர், உருக்குமணி, கண்ணபிரான் முதலிய திருவுருவங்களைத் தெரிசித்தோம். அங்கு ஒரு பெரிய **துலாக்கோல்** அமைத்திருக்கின்றனர். அந்த இடம் **கிருஷ்ணதுலாபாரம்** என்று வழங்கப்படுகின்றது.

அதற்கு எதிரில் கிருஷ்ணருடைய அழகிய கோயில் தங்கச் சிகரத்துடன் விளங்குகின்றது. அங்கு வேளைக்கு ஒரு வண்ணமாக, தாய் தன் குழந்தையைப் பலவாறு அலங்கரிப்பதுபோல், கண்ணபிரானுக்கு நவரத்தின அணிகலன்களால் அலங்காரஞ் செய்து ஆராதிக்கின்றூர் கள். கண்ணபிரானுடைய திருவுருவம் மிகவும் அழகாகத் திகழ்கின்றது. சுவாமி மேற்கே நோக்கி யிருக்கின்றூர். இடப்புறத்தில் பெரிய பெரிய கண்ணுடிகளால் அமைத்த பள்ளியறை இருக்கின்றது.

## துலாபார வரலாறு

கண்ணபிரானுடைய மூத்த மனைவியும் ஸ்ரீதேவியின் அம்சமுமாகிய உருக்குமணிதேவி உயர்ந்த ஆடை அணி கலன்களை விரும்பாமல் ஆடம்பரம் இன்றி துளசியைச் சூடிக்கொண்டு இருப்பர். இளைய மனைவியும் பூதேவியின் அம்சமுமாகிய சத்யபாமை விலை யுயர்ந்த ஆடை யணி கலன்களால் அலங்கரித்துக்கொண்டு மிகுந்த ஆடம்பரத் துடன் இருப்பள். அவள் உள்ளத்தில் தனக்கு அள விடற்கரிய நவரத்தின ஆபரணங்கள் இருப்பதனல் தானே உயர்ந்தவள் என்ற தருக்கு ஏற்பட்டது. அதனை அகற்ற எண்ணிய நாரத முனிவர், ஒருநாள் அவள்பால் வந்து நன்கு வீணையை மீட்டிப் பாடினர்.

பாடலுக்கு மகிழ்ந்த சத்யபாமை, "தங்களுக்கு என்னவேண்டும்? வேண்டியதைத் தருவேன்" என்றாள். நாரதர், "கண்ணனைத் தாரும்" என்றார். "கண்ணனை நான் எவ்வாறு தரமுடியும்? அவருக்கு நிறையாகப் பொன்னும் மணியுந் தருவேன்" என்று கூறி, ஒரு துலை நாட்டி கண்ணனை ஒரு தட்டில் ஏற்றி, தன்பால் உள்ள பொன், மணி, அணிகலன், ஆடைகள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக மற்றொரு தட்டில் வைத்தாள். நிறை சரிப் படவில்லை. முடிவில் அவள் கையில் ஒன்றுமேயில்லை. விழித்தாள்; வெட்கினாள்; உருக்குமணி யம்மை வந்து, தான் அணிந்திருந்த துளசியில் ஒரு இலையை யெடுத்து கண்ணபிரான் திருவடியை நினைத்து வைத்தாள். துலை சரியாகி நின்றது. துளசியின் பெருமையையும், உருக்கு மணியின் அருமையையும் அறிந்த சத்யபாமை நாணி உருக்குமணியை வணங்கித் தருக்கொழிந்து அன்பு செய்தாள்.

டாக்கோரிலிருந்து எங்கள் வண்டி காலை 10.45 மணிக்குப் புறப்பட்டது. **கோத்ரா** வழியாக **ரட்லம்** என்ற சந்திப்புக்கு இரவு 7 மணிக்கு வந்தது.

## உஜ்ஜைனி

ஜய—கார்த்திகை 2 (17—11—54)

காலை 7-45 மணிக்கு ரட்லத்திலிருந்து வண்டி புறப் பட்டது. **உஜ்ஜைனியைக்** காலை 10-40 மணிக்கு அடைந் தது. நாங்கள் வண்டியிலேயே நீராடி வழிபாடு புரிந்தோம்.

உடனே அருகில் உள்ள **ஷிப்ராநதி** சென்று நீராடினோம். நதிக்கரையில் இருமருங்கிலும் நல்ல கட்டிடங்களும், படித்துறைகளும், கோயில்களும் அமைந்திருக்கின்றன. நதியின் படித்துறையில் பல சிவலிங்கங்கள் வரிசையாக இருக்கின்ற காட்சி அழகாக இருக்கிறது. ஷிப்ரா நதியிலும் ஆமைகள் அதிகம். நாங்கள் அப்புண்ணிய நதியில் இரண்

டாவதுமுறை முழுகினோம். அதன் கரையில் விக்ரமாதித்த மன்னனது குலதெய்வமாகிய ஹரசித்திமாதா கோயிலைத் தெரிசித்தோம். அம்பிகை மிகவும் வரதம். அம்பிகைக் கோயிலின் இடப்புறத்தில் ஒரு சிறு சிவாலயம் இருக்கின்றது. கோயிலும் தூபியும் அழகாக உள்ளன.

## மஹாகாளர் (ஜோதிர்லிங்கம்)

அங்கிருந்து சிறிது தூரத்தில் பெரிய உருவமுள்ள விநாயகர் கோயில் உளது. அதன் எதிரில் மகாகாளர் திருக்கோயில் உளது. உஜ்ஜைனி முத்தித்தலம் ஏழனுள் ஒன்று. மகாகாளர் பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களுள் ஒன்று. விசாலமான கோயில். கோயிலுக்குத் தென்புறத்தில் **கோடி தீர்த்தம்** என்ற திருக்குளம் இருக்கின்றது. அக்குளத்தைச் சுற்றிப் பல சிவலிங்கங்கள் திகழ்கின்றன. அத் திருக்குளத்தில் தண்ணீர் முகந்துகொண்டு வில்வமும் பூவும் எடுத்துக்கொண்டு உள்ளே சென்றோம். சில படிகள் பூமிக்குள் இறங்கினோம். குகைபோன்ற அவ்வழியே சென்று, அங்குள்ள **மகாகாளரைத் தெரிசித்தோம்** அம்மூர்த்தி பெரிய உருவில் மிக அழகாக விளங்குகின்றது. மகிமை நிறைந்த அம் மூர்த்தியை நாங்களே நீராட்டி மலரிட்டு துதி செய்து வழிபட்டோம். ஜோதிர்லிங்க தெரிசனை கிடைப்பது அரிதிலும் அரிது. அக்கோயிலின் மேல் தட்டில் **ஓங்காரேஸ்வரர்** என்ற சிவலிங்கம் இருக்கின்றது. சுற்றுப் பிரகாரத்தில் பல சிறு சிவலிங்கங்கள் இருக்கின்றன.

பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை **கும்பமேளா** இங்கு மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது. இலட்சக்கணக்கான ஜனங்கள் அப்பொழுது கூடுகிறார்கள். அந்த விசேட வேளையில் கோடி தீர்த்தத்தில் ஒவ்வொரு திசையிலிருந்து பார்த்தால் தண்ணீர் ஒவ்வொரு நிறமாகக் காணப்படுகின்றது. மகாகாளருக்கு ஜிதாபஸ்மம்

(மயானச் சாம்பல்) அணிகின்றார்கள். அது சிறந்த பிரசாதமாக அங்கே வழங்கப்பெறுகிறது.

மாலை 4 மணிக்குப் புறப்பட்டு **கோபால் மந்திரத்துக்குச்** சென்றோம். அது புகைவண்டி நிலையத்திலிருந்து ஒரு கல். வழி முழுவதும் அழகிய கடைவீதிகள். கோபால கிருஷ்ணர் நிரம்ப அழகாக இருக்கின்றார். கோயிலும், தூபியும் சலவைக்கற்களால் அமைந்திருக்கின்றன.

இரவு 7 மணிக்குக் கூட்டு வழிபாட்டில் கந்தரநுபூதி பாராயணம் செய்தோம்.

பழங்காலத்தில் உஜ்ஜைனி என்ற நகரம் மிகவும் பெருமையுடன் விளங்கியது. இதற்கு **அமராவதி, அவந்திகா, பத்மாவதி, சிவபுரி, விசாலா** என்ற பேர்கள் இருந்தன. இராமர் ஒருமுறை இங்கு தங்கியதாகவும் வரலாறு கூறுகின்றது. **சுதன்வா** என்ற ஜெயின அரசன் இதனை ஆண்டு உஜ்ஜைனம் எனப் பேரிட்டனன். அதனால் உஜ்ஜைனி என வழங்கப் பெறுகின்றது. **விக்ரமாதித்தனும், பர்த்ருஹரியும்,** கவிரத்ன காளிதாசர், பவபூதி, தண்டி, வரருசி முதலிய வடமொழிப் பெரும் புலவர்களும், ஜோதிட ஆசிரியர் வராக மிச்ரரும் புடை சூழ **போஜராஜனும்** இந்நகரத்தை நன்கு அரசு புரிந்தார்கள். தருமசாலைகள் பல இருக்கின்றன.

முத்தித் தலமாகிய இங்கு **சித்தவடம்,** என்ற ஒரு ஆல விருட்சமும் சிறிய சிவாலயமும் ஷிப்ரா நதிக்கரையில் (புகைவண்டி நிலையத்திலிருந்து 3 கல் தொலையில்) இருக்கின்றன. அதற்கு ஒருகல் தொலையில் விக்கிரமாதித்தனுக்கும், காளிதாசருக்கும் அருள்செய்த **காளி கோயில்** இருக்கின்றது. அதற்குச் சிறிது தூரத்தில் பர்த்ருஹரி (விக்ரமாதித்தன் தம்பி) அரசை வெறுத்து மச்சேந்திரரிடம் யோகாப்பியாசம் செய்துகொண்ட **குகை** இருக்கின்றது. அதிலிருந்து 2 கல் தொலையில் விக்கிரமாதித்தனுடைய இடிந்த கோட்டைகள் காணப்படுகின்

றன. அங்கிருந்து 2 கல் தொலையில் விக்கிரமாதித்தன் அரண்மனை இருந்த இடத்தில் குவாலியர் மன்னர் **காலியாதக மஹால்** என்ற அழகிய கட்டிடம் கட்டிவைத்திருக்கின்றனர். அதற்கு எதிரில் அழகிய மண்டபங்களும் படித்துறைகளும், நந்தனவனங்களும் இருக்கின்றன.

உஜ்ஜைனிக்கருகில் **மங்களேஸ்வரம்** என்ற சிவஸ்தலமும், தெற்கில் 5 கல் தொலையில் **திரிவேணி** என்ற பிரயாகையும், மேற்கில் **பைரவ கட** என்ற பைரவர் கோயிலும் உள்ளன.

## ஓங்காரம்

ஜய—கார்த்திகை 3 (18—11—54)

விடியற்காலை 4 மணிக்கே எழுந்து கொடுங் குளிரில் நடுங்கிய வண்ணம் குளித்து நித்திய வழிபாட்டை 6 மணிக்குள் முடித்துக்கொண்டோம். ஓங்காரத்துக்கு அங்கிருந்து சிறிய இருப்புப் பாதையாதலின் எங்கள் வண்டியை உஜ்ஜைனியிலேயே நிறுத்திவிட்டு சிறிய புகைவண்டியில் 7 மணிக்குப் புறப்பட்டோம்.

வழிமுழுவதும் பெரிய வனங்களும் மலைகளும் நதிகளுமாகவே இருந்தன. வனங்கள் வானளாவிய தேக்கு விருட்சங்களுடன் இயற்கை யழகுடன் குளிர்ந்திருந்தன. புகைவண்டி நான்கு இடங்களில் மலைக்குகையில் நுழைந்து சென்றது.

பகல் 2-45 மணிக்கு ஓங்காரேஸ்வர ரோடு என்ற புகைவண்டி நிலையத்தை அடைந்தோம். புகைவண்டி நிலையத்துக்கு அருகில் ஒரு தருமசாலை இருக்கிறது. ஆள் ஒன்றுக்குப் போக வர பஸ் கட்டணம் 0-12-0வீதம் தந்து பஸ்ஸில் ஏறி ஏழுகல் தொலை சென்று **ஓங்காரம்** என்ற திருத்தலத்தை அடைந்தோம்.

மாலை 4 மணிக்கு **நர்மதா** நதத்தை ஓடத்தில் கடந்து அக்கரை சென்றோம். அக்கரையில் அழகிய படித்துறைகளும், ஓங்காரேஸ்வரர் திருக்கோயிலும் இருக்கின்றன. ஓடத்தில் செல்லும்பொழுது, **பிறவியலையாற்றைக்** கடந்து செல்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. புனிதமும், தெளிவும் மிகுந்த நர்மதையில் மாலை நேரத்தில் நீராடி தூய்மை யடைந்தோம். அநுஷ்டானம் புரிந்துகொண்டு வில்வமும் தண்ணீரும் எடுத்துக்கொண்டு நர்மதைக் கரைமீதிலேயே விளங்குகின்ற திருக்கோயிலில் சென்று **ஓங்காரேஸ்வரரை** அபிஷேகமும் அருச்சனையும் செய்து வழிபட்டோம். **பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களுள் அது ஒன்று.** ஆழமான ஒரு பள்ளத்தில் சிவலிங்கம் மிகமிகப் புனிதமாக விளங்குகின்றது. அதனைக் கண்டவுடன் உள்ளத்தில் அளவற்ற உணர்ச்சியும், உருக்கமும் உண்டாயின. அரைமணி நேரம் பெருமானுக்கு முன் திருவைந்தெழுத்தை ஓதினோம். கோயில் பெருங்காட்டில் மனித சஞ்சாரம் அதிகமில்லாத மலைச்சரிவில் இருப்பதால் ஜனங்களின் நெருக்கடியின்றி ஏகாந்தமாக வழிபட முடிந்தது.

ஓங்காரேஸ்வரரின் எதிரிலுள்ள மண்டபத்தில் மாந்தாதா வழிபட்ட **மாந்தாதலிங்கம்** இருக்கின்றது. அதற்கருகில் ஒரு குகையில் **சுகமுனிவரின்** திருவுருவம் இருக்கின்றது. கோயிலை வலம் வரும்போது ஓங்காரேஸ்வரருக்கு மேல் தட்டில் **மகாகாளர்** என்ற சிவமூர்த்தி இருக்கின்றார்.

மாலை 6 மணிக்கு மீளவும் ஓடத்திலேறினோம். இப்பொழுது ஆண்டவனுடைய அருள் வெள்ளத்தில் மிதந்து செல்வது போன்ற எண்ணம் உண்டாகியது. ஆற்றில் அழகிய மீன்கள் ஓடத்தின் இருபுறங்களிலும் தவழ்ந்து எங்களை வழி விடுவதுபோல் வந்தன. அங்கு மீன்கள் பிடிப்பாரின்றி தீர்க்காயுளுடன் அச்சமின்றி வாழ்கின்றன.

நர்மதையின் தென்கரையில் **அமலேஸ்வரம்** என்ற திருக்கோயிலை அடைந்துசிவமூர்த்தியைத்தெரிசித்தோம். அதற்கருகில் **இந்திரேஸ்வரம்** என்ற திருக்கோயிலையும் தெரிசித்தோம். கோயிலைச் சுற்றி சில வீடுகளே இருப்பதனால் எங்கும் தூய்மையாக இருக்கின்றது. ஒரு சிறிய அரண்மனையில் அரசகுடும்பத்தினர் வாழ்கின்றார்கள்.

## நர்மதை

ஏழு நதிகளில் ஆறு நதிகள் பெண்களாகவும், நர்மதை மட்டும் ஆண் நதம் என்றும், தெரிசித்த மாத்திரத்தில் சகல வினைகளையும் போக்கவல்லது என்றும், சமானமில்லாத பெருமையுடையதென்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. நர்மதை கங்கையினும் சிறந்தது; ஓங்காரம் கயிலையினும் சிறந்தது. நர்மதையாறு அரச யானை நடப்பதுபோல் கம்பீரமாக ஓடுகின்றது. அதனைப் பார்ப்பதற்கே பெரும் புண்ணியம் வேண்டும்.

இரண்டாயிரம் கரங்களையுடைய **பாணாசுரன்** நாள் தோறும் இரண்டாயிரம் சிவலிங்கங்களைப் பூசித்து இந்த இடத்தில் நர்மதையில் விடுத்தனன். அந்த பாணலிங்கங்கள் இன்றும் இங்கு முழுகி எடுப்பாருக்குக் கிடைக்கின்றன. பாணலிங்கத்தில் சிவபெருமான் எப்பொழுதும் இடையறாது விளங்குவதனால் அது வழிபாட்டுக்கு மிகவும் சிறந்தது.

இராமருடைய மூதாதையும், சூரிய குல சக்கரவர்த்தியுமாகிய **மாந்தாதா** இங்கு வந்து வழிபட்டு அருள் பெற்றதனால் இத்தலத்துக்கு "மாந்தாதா" என்ற ஒரு பேரும் உண்டு.

ஓங்காரம் என்ற இத் திருத்தலம் மலையும், மலைச் சரிவும், மேற்கு நோக்கி ஓடும் நர்மதையாறும் சேர்ந்த இடத்தில் சாந்தாகாரமாக விளங்குகின்றது. திருவருள் விலாசம் அங்குபொலிந்துகொண்டிருக்கிறது.

நாங்கள் செய்த யாத்திரையில் ஓங்காரத்தில் ஏற்பட்ட சாந்தியும், ஒருமைப்பாடும் ஏனைய தலங்களில் ஏற்படவில்லை. அங்கு சில நாட்கள் தங்கி வழிபடும் வாய்ப்பு அமையாமல் போனதற்காக வருந்தினோம். இயற்கையழகு அங்கு திருநடனம் செய்துகொண்டிருக்கிறது. நர்மதையின் இரு பக்கங்களிலும் மலையை வெட்டிவிட்டது போன்ற இயற்கைக் கற்சுவர்கள் காணப்படுகின்றன. பன்முறை பார்த்தும் மனதில் போதுமென்ற திருப்தி ஏற்படவில்லை. அன்று முழுவதும் நாங்கள் உணவு இன்றி உபவாசமாக இருந்தும் பசி தாகமோ களைப்போ ஏற்படவில்லை. ஓங்காரத்தைச் சுற்றி பல கல் தொலை வரை அருள் விளக்கம் திகழ்கின்றது. பல பிறப்புக்களில் செய்த நல்வினைப் பயன் கைகூடினாலன்றி இத் தல தெரிசனம் எளிதில் கிடைக்காது.

மீளவும் பஸ் ஏறி புகைவண்டி நிலையத்தை அடைந்து இரவு 9 மணிக்குப் புகைவண்டியிலேறி விடியற்காலை 4–30 மணிக்கு உஜ்ஜைனி சேர்ந்தோம்.

ஜய—கார்த்திகை 4 (19—11—54)

காலையில் ஷிப்ரா நதியில் நீராடி, ஹரசித்தி, மகா காளர் முதலிய மூர்த்திகளைத் தெரிசித்தோம். மாலை சித்தவடம், காளிகோயில், காலியாதக மஹால் முதலியவைகளைப் பார்த்தோம். இதற்கு 18 கல் தொலையில் சித்திரக் கலை நிறைந்த சாஞ்சி இருக்கிறதென்று சொன்னார்கள். மாலை 5-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. கூட்டு வழிபாடு புரிந்தோம்.

ஜய—கார்த்திகை 5 (20—11—54)

காலை 7 மணிக்கு நாகடா சந்திப்பு வழியாக **சவாய்மோதுபூர்** சந்திப்பை யடைந்தோம். அங்கிருந்து அஜ்மீர், ஜெய்ப்பூர் போகச் சிறிய இருப்புப் பாதையாதலால் எங்கள் வண்டியை அங்கேயே நிறுத்தி, சிறிய ரெயிலில் புறப்பட்டோம்,

பகல் ஒரு மணிக்கு **ஜெய்ப்பூரைச்** சேர்ந்தோம். அங்கு வண்டிமாறி டெல்லிக்குப் போகும் துரித வண்டியில் ஏற முடியாமல் தவித்தோம். பெண்களைப் பெண்கள் வண்டியில் ஏற்றிவிட்டு நாங்கள் பல பெட்டிகளில் பிரிந்து ஏறினோம். ரயில் புகை ஒரு பக்கம்; மனிதர்கள் விடும் புகை ஒரு பக்கம்; இரு புகை மண்டிலத்திற்கு இடையே நின்ற வண்ணம் நெருக்குண்டும் உடல் சுருக்குண்டும் இரவு 9-45 மணிக்கு **அஜ்மீர்** என்ற நகரை யடைந்தோம். பெண்கள் வண்டியை விட்டு இறங்க முடியாமற்படிக்கு மீளவும் ஒரு பெருங் கூட்டம் ஏறியதனாலும் வண்டியில் விளக்கு நின்றுவிட்டபடியாலும், கர்ப்பத்திலிருந்து சிசு வெளிப்படுவதுபோல், ஜென்னல் வழியாக ஒவ்வொரு பெண்களாக வெளியேற்றினோம். மறு பிறப்புபோல் களைத்துவிட்டனர். சிறிது நேரம் இளைப்பாறிய பின் 2 பர்லாங்கு தொலையிலுள்ள ஒரு தரும சாலைக்குச் சென்றோம். அங்கு இடந் தூய்மையாக இல்லை. உடம்பிலிருந்த அசதியால் வசதியில்லாத அங்கு படுத்தோம். குளிர் நடுக்கம் வாட்டியது.

## **புஷ்கரம்** (கஜேந்திர முத்தி)

ஜய-கார்த்திகை 6 (21—11—54)

காலையில் எழுந்து ஆள் 1-க்கு கட்டணம் 0-6-0 தந்து பஸ்ஸில் ஏறி 7 கல் தொலை சென்று **புஷ்கரம்** என்ற தலத்திற்குச் சேர்ந்தோம். பஸ் மலைமீது ஏறி இறங்குகின்றது. மலைச் சூழலுக்கு இடையே இத்தலம் இருக்கின்றது. **புஷ்கரம்** என்ற தடாகம் ஒரு கல் சுற்றளவுடையதாக விரிந்திருக்கின்றது.

கஜேந்திரம் என்ற யானையை இங்குதான் முதலை பற்றியது. ஆதிமூலம் என்று அழைக்க நாராயண மூர்த்தி வந்து காத்தருளிய புனிதமான இடம். புஷ்கர தடாகத்தின் கரையில் சில இடம் சலவைக்கற்களால்

மிக அழகாக படித் துறைகள் கட்டியிருக்கின்றன. ஆங்காங்கு சிவலிங்கங்கள் இருக்கின்றன.

இங்கு சிறப்புடையது **பிரமதேவருடைய கோயில்.** புராதனமானது. உயரமான இடத்தில் இருக்கின்றது.

**அடுமடேஸ்வரம்** என்ற சிவாலயமும், **வராஹ மூர்த்தி** கோயிலும் இருக்கின்றன. நமது தமிழ்நாட்டுக் கோயில் மாதிரி இங்கு இரு கோயில்கள் இருக்கின்றன. **ஸ்ரீநிவாசப் பெருமாள் கோயில், ஸ்ரீரங்கநாதர் கோயில்** என்பவை. தமிழ் நாட்டு அந்தணர்கள் இங்கு பூசை செய்கின்றார்கள். கோயில்களில் பிரசாதம் நிரம்ப வழங்குகின்றார்கள். பகல் 1 மணிக்குப் பஸ் ஏறி அஜ்மீர் வந்தோம். அங்குள்ள அழகிய ஜைனர் கோயிலையும் பார்த்தோம். மாலை 7 மணிக்குப் புகை வண்டியில் ஏறி இரவு 11 மணிக்கு **ஜெய்ப்பூரைச்** சேர்ந்தோம். புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள தருமசாலையில் தங்கினோம். அதுவும் தூய்மையாக இல்லை.

## ஜெய்ப்பூர்

ஜய—கார்த்திகை 7 (22—11—54)

காலையில் எழுந்து நீராடி நித்ய வழிபாடு செய்தோம். குதிரை வண்டிகளை வைத்துக்கொண்டு 5 கல் தொலையில் வடக்கே மலைகளுக்கு இடையே இந்திரபவனம்போல் விளங்கும் **அம்பர் பாலஸ்** என்ற அரண்மனையைப் பார்த்தோம். அதுபோன்ற அழகிய கட்டிடத்தைக் கண்டதேயில்லை. காணப்போவதுமில்லை. மிக்க அதிசயத்தைத் தருகின்றது. உயர்ந்த இடத்தில் அது அமைந்துளது. அவ்வளவும் சலவைக் கற்களாலும், வெண்ணெய்க் கற்களாலும் புதுக்கியிருக்கின்றது. அதிலுள்ள நுட்பமான வேலைப்பாடுகளைப் பார்க்கும்போது உணர்ச்சி நின்றுவிடுகின்றது. பல கண்களிருந்து பார்க்கவேண்டும். அரசர் பெருமான் இருக்கும் இடமும், அரசமாதேவியார்

இருக்குமிடமும் அழகின் சிகரங்களாக விளங்குகின்றன. அப்போது தீட்டிய வர்ணங்கள் இன்னும் அழியாமல் இருக்கின்றன. சில இடங்களில் சிறுசிறு கண்ணாடிகளைப் பதித்திருக்கின்றனர். அங்கு நின்று பார்த்தால் நம்முடைய பிரதிபிம்பம் ஒரு லட்சம் உருவங்களுக்கு மேல் தெரிகின்றன. **மான்சிங்க்** என்ற மன்னர்பிரான் வாழ்ந்த மாளிகை ஒருபுறமும், அவர் புதல்வராகிய **ஜெயசிங்க்** வாழ்ந்த மாளிகை ஒரு புறமும் இருக்கின்றன. அந்த அரண்மனையில் மறக்கமுடியாத ஒரு சிறப்பு உண்டு. ஒரு அறையில் சலவைக்கல் சுவர்களில் உலகிலுள்ள முக்கியமான தலங்கள் எல்லாவற்றையும் வர்ணசித்திரங்களாகத் தீட்டியுள்ளது. அவ்வத் தலங்களில் அந்தந்த மூர்த்தியையும் அங்கே காட்டியுளது. மன்னர் உணவு உட்கொள்ளுமுன் அவைகளை ஒருமுறை தெரிசித்து, வணக்கஞ் செலுத்துவாராம். இத்தனை மூர்த்திகளையுந் தெரிசித்த பின்னர் உண்பது என்ற நியதியை அக்காலத் திருந்த மன்னர் அநுசரித்தார் என்பதை நினைக்கும் போது அவர்கள் பக்தி வெளியாகின்றது.

அந்த அரண்மனையில் ஒருபுறம் விலைமதிக்க முடியாத அளவில் ஒரு அம்பிகை கோயில் புதுக்கியுள்ளது. கதவு வாசற்படி டமாரம் எல்லாம் வெள்ளி; கோயில் வெண்ணெய்போன்ற சலவைக் கல். கால் வைக்கக் கூசுகின்றது. மிக அழகிய கோயில். அம்பிகையின் திருவாசியில் பஞ்ச மூர்த்திகளைப் பொறித்துளது. இதனைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சியடைந்தோம்.

ஜெய்ப்பூருக்குள் மன்னருடைய குதிரைலாயம், 52 கோர்ட், ஜோதிஷாலயம், (அப்ஸர் வேடரி) அரண்மனை, கடைவீதிகள் முதலியவற்றையும் கண்டோம். கடைவீதிகள் ஒரே ஒழுங்காகவும் கட்டிடங்கள் ஒன்று போலவும், எல்லாம் மூன்று அடுக்குடையனவாகவும், பல

சித்திர வேலைப்பாடுகளுடனும் அமைந்திருந்தன. சுருங்கச் சொன்னால் இதுபோன்ற அழகிய பட்டினம் நாங்கள் இதுவரை எங்கும் பார்க்கவில்லை.

அஜ்மீரிலும் ஜெய்ப்பூரிலும் சூழ்ந்துள்ள மலைகள்மீது கோட்டைகள் பல அழகாக இருக்கின்றன. சூரியகுல மன்னன் அஜாமீளன் ஆண்டதனால் அது ஆஜ்மீர் என்று பேருண்டாயிற்று என்றும், சூரிய வம்சத்து மன்னர்களே ஜெய்ப்பூரையும் பண்டைக் காலத்து ஆண்டார்கள் என்றும் கூறுகின்றார்கள். பழங்காலத்து மன்னர்களுடைய பெருமிதமான வாழ்வின் சின்னமாக ஜெய்ப்பூர் திகழ்கின்றது.

மாலை 6-15 மணிக்குப் புகை வண்டியில் ஏறி இரவு 10-40 மணிக்கு சவாய்மோதுபூருக்கு வந்து எங்கள் வண்டியில் ஏறினோம். சிறிய புகைவண்டியில் நாங்கள் பட்ட அல்லலினால் அலுப்படைந்த எங்கட்கு அப்போது தான் ஆறுதல் ஏற்பட்டது. இனி கடைசிவரை சிறிய வண்டியின் பிரயாணமே இல்லாமையால் யாத்திரையே முடிந்த மாதிரிதான் என்று உடன் வந்த அன்பர்கள் பேசிக்கொண்டார்கள். நிழலருமை வெய்யில் உணர்த்தும் என்றபடி எங்கள் வண்டியின் அருமை வேறு வண்டிகளில் சென்று அறிந்தோம்.

## ஆக்ரா

ஜய - கார்த்திகை 8 (23—11—54)

காலை 7 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. வண்டியிலேயே நீராடி நித்திய வழிபாட்டைச் செய்தோம். பெயானு சந்திப்பு வழியாக மாலை 6-40 மணிக்கு **ஆக்ரா கோட்டைக்குச்** சென்றோம்.

ஜய - கார்த்திகை 9 (24—11—54)

காலையில் எழுந்து புகைவண்டி நிலையத்திற்கு அருகிலேயே உள்ள **யமுனைநதிக்குச்** சென்றோம்.

ஏழு நதிகளுள் ஒன்றாகிய யமுனை அழகாக ஓடிக்கொண்டிருக்கின்றது. ஆமைகளும் அதில் விளையாடிக்கொண்டிருக்கின்றன. நாங்கள் அந் நதியில் முழுகி அஞ்சலி செய்தோம். வழிபாடுகள் முடிந்தபின் **ஷாஜஹான்கோட்டை**யைச் சென்று பார்த்தோம். பெரிய மதில்களும், அகழியும் சூழ உள்ளே மகம்மதிய மன்னன் வாழ்ந்த அரண்மனை பளிங்குக் கற்களால் விசாலமாகவும் ஆங்காங்கு தங்கத் தகடுகள் பதித்தும் வெகு அழகாக இருக்கின்றது. அரண்மனைக்குள் தர்பார் மண்டபம், ஸ்நான மண்டபம், அந்தப்புரங்கள், தொழுகை இடம், நந்தவனம் முதலியன இருக்கின்றன. யமுனைக் கரையில் இது அமைந்திருக்கின்றது. உள்ளே சென்று பார்க்க 0-2-0 கட்டணம்.

## தாஜ்மஹால்

அங்கிருந்து ஒரு கல் தொலையில் உலக அதிசயங்களில் ஒன்றாகிய **தாஜ்மஹால்** இருக்கிறது. இது ஷாஜஹான் என்ற மன்னன் தன் மனைவி **மம்தாஜ்** 38-ம் வயதில் மாண்டதனால் அவள் மீது அவனுக்கிருந்த அன்பிற்கு அறிகுறியாக இதனைப் புதுக்கினான். மேற்சொன்ன அரசியைக் காதலித்திருந்த ஒரு சிற்பக்கலைஞன் தானே முன்வந்து இவ்வரிய கட்டிடத்தைக் கட்டி தன் அன்பை வெளிப்படுத்தினான். 20 ஆயிரம் பேர் கூடி 20 ஆண்டில் சுமார் 30 கோடி ரூபாய்கள் செலவு செய்து 260 அடி உயரமாக இது கட்டப்பட்டது. அவ்வளவும் சலவைக் கற்களால் அமைந்திருக்கின்றது. இன்றுதான் கட்டியது போல் பழமையில் புதுமை காணப்படுகின்றது. யமுனாநதியில் அதன் நிழல் விழுந்துகொண்டிருக்கிறது. அதன் அழகு பார்த்தவருக்கே விளங்கும்.

இதனை அன்பர்களுடன் சென்று அடியேன் கண்டேன்.

"அன்னையெத்தனை யெத்தனை அன்னையோ?
அப்பனெத்தனை யெத்தனை அப்பனோ?
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ?"

என்ற வாக்கின்படி பிறவிகள்தோறும் வருகின்ற மனைவியருக்கு இப்படி நினைவுச் சின்னங்கள் புதுக்குவதாயின் உலகில் இடம் ஏது? பொருள் தான் ஏது?

"தோலெலும்பு சீ நரம்பு பீளை துன்று கோழை பொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான தூலம்"

என்று அருணகிரிநாதரும், "நாற்றமடித்திடும் நாய் நரி கழுகுகள் நமதென்றே தின்னும்" என்று சித்தரும், "நார்தொடுத்து ஈர்க்கிலென்? நன்றாய்ந் தடக்கிலென்? பார்த்துப் பெய்யிலென்?" என்று நாலடியாரும் கூறுகின்றனர். இத்தகைய புன்புலாலுடம்பிற்கு 30 கோடியும், வாழ்நாளில் 20 ஆண்டுகளும் செலவழித்தது நலந்தானோ? என்று சிந்தித்தேன். உடம்போடு வாழ்ந்தபோதும், வீழ்ந்தபோதும் உடம்பைப் பொருளென்று மதியாத நம் முன்னோர்களின் ஞானத்தையும் அப்பொழுது சிந்தித்துப் போற்றினேன்.

மாலை 3 மணிக்குமேல் சுமார் ஐந்து கல் தொலையிலுள்ள **தயாள்பாக்** என்ற இடத்திற்குப் போயிருந்தோம். அங்கு **ராதாசுவாமிகள்** என்ற மகானுக்கு சலவைக் கற்களினால் நுட்பமும் திட்பமும் அமைந்த ஒரு கோயிலை அதிவிசித்திரமாகப் புதுக்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர் பெயரால் ஒரு சிறந்த தொழிற்சாலையும் நடைபெறுகின்றது. மாலை கூட்டு வழிபாடு செய்தோம்.

## மதுரா

ஜய—கார்த்திகை 10 (25—11—54)

காலை ஆக்ராவை விட்டு 6-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. மதுரைக்கு காலை 8-30 மணிக்குச் சேர்ந்தது.

வண்டி சென்றுகொண்டிருக்கும்பொழுதே நீராடி நித்திய வழிபாட்டைப் புரிந்தோம்.

மாலை 3 மணிக்கு ஏழு முத்தித் தலங்களுள் ஒன்றும், கண்ணபிரான் திருவவதாரஞ் செய்ததும் ஆகிய புண்ணியத் தலமாகிய மதுரையம்பதி சென்று, கண்ணபிரான் கம்சனைக் கொன்று, குளித்து இளைப்பாறிய இடமாகிய **விச்ராந்திகாட்** என்ற இடத்தை யடைந்தோம். அது யமுனையில் ஒரு துறை. மதுரைக்கருகில் யமுனை நதி அழகாக ஓடிக்கொண்டிருக்கின்றது. பல துறைகள் இருக்கின்றன. மாலை 6 மணிக்கு யமுனை நதிக்கு ஆராதனை செய்கின்றார்கள். யமுனைக் கரையில் கண்ணபிரானுடைய கோயில் இருக்கின்றது. ஆராதனையும் பஜனையும் நன்கு நடைபெறுகின்றன. இந் நகரத்தின் பழைய சின்னங்கள் பலவும் வேற்று மதத்தவர்களால் அழிக்கப்பட்டன. வசுதேவர், தேவகி, உக்கிரசேனன், சூரசேனன் என்ற யதுகுலமன்னர்கள் அரியணைமீது இருந்து அரசு செய்த இடம் மதுரை. பழங்காலத்தில் மிகப் பெருமையோடிருந்த நகரம்.

ஜராசந்தனுடைய போர் அடிக்கடி விளையாமலிருக்கும் பொருட்டு கண்ணபிரான் இந்நகரத்தை விடுத்து மேற்கடலுக்கு நடுவில் துவாரகை யென்ற நகரத்தை ஏற்படுத்தி அங்கு சென்று அரசாண்டனர்.

யமுனை நதிக்கரையில் பல சிவலிங்கங்கள் இருக்கின்றன. இங்கும் ஆமைகள் அதிகம். அது ஐந்து உறுப்புகளையும் அடக்குவது, நமது ஐம்புலன்களை அடக்க வேண்டும் என்று நினைவுபடுத்துவதுபோல் தோன்றுகின்றது. மாலை கூட்டு வழிபாடு செய்தோம்.

## பிருந்தாவனம்

ஜய—கார்த்திகை 11 (26—11—54)

காலையில் எழுந்து போகவரக் குதிரை வண்டிகளை அமர்த்திக்கொண்டு பிருந்தாவனஞ் சென்றோம்.

மதுரைக்கு 7 கல் தொலையில் யமுனை நதிக்கரையில் அது புனிதமான தலமாகப் புகழுடன் திகழ்கின்றது. கண்ண பிரான் இளமையில் வேய்ங்குழலூதியும் நிரை மேய்த்தும் பற்பல அற்புதத் திருவிளையாடல்கள் செய்த இடம் இது. யமுனையில் நீராடி நித்திய வழிபாடு செய்தோம்.

காளிங்க நர்த்தனம், கோபிகா வஸ்திரங் கவர்ந்த இடம், கோபிகைகளோடு விளையாடிய வனம், தென் னுட்டுக் கோயிலைப்போல் கட்டி தென்னுட்டு அந்தணர் கள் பூசிக்கும் ரங்கநாதர் கோயில், பழமையான கோவிந்த மந்திர் முதலிய பல கோயில்கள் இருக்கின்றன. பல பக்த ஜனங்கள் இங்கு இருந்து ஆராத காதலுடன் பக்தி செய்துகொண்டிருக்கின்றுர்கள். பாகவதத்தில் கூறிய பல வரலாறுகள் நிகழ்ந்த இந்த இடம் நம்மைப் பழங் காலத்திற்கு அழைத்துக்கொண்டு போகின்றது. 4, 5 கல் தொலை சுற்றிப் பார்க்கவேண்டியதாக இருக்கின்றது. அதன் அருகில் ராதை பிறந்த இடம் இருக்கின்றது. இவைகளை யெல்லாம் நிதானமாகப் பார்க்கவேண்டும். நாங்கள் முடிந்ததை மட்டும் பார்த்துக்கொண்டு திரும்பி னேம். வழியில் **பிர்லா மந்திர்** என்ற கண்ணன் கோயில் அழகாக இருக்கின்றது. அதையுந் தெரிசித்து மாலை 3 மணிக்கு மதுரை வந்தோம். மாலை வழக்கம்போல் கூட்டு வழிபாடு புரிந்தோம்.

மதுரைக்கு 20 கல் தொலையில் **கோவர்த்தனம்** இருக் கின்றது. கண்ணபிரான் வளர்ந்த இடமாகிய **கோகுலம்** 6 கல் தொலையில் இருக்கின்றது. அவ்விடங்களுக்கு நாங் கள் போகவில்லை. இரவு 6–40 மணிக்கு எங்கள் வண்டி யில் புறப்பட்டு இரவு 11–30 மணிக்கு டெல்லி வந்து சேர்ந்தோம்.

11

## டெல்லி

ஜய—கார்த்திகை 12 (27—11—54)

காலையில் நீராடி நித்திய வழிபாடு செய்தோம். **செங் கோட்டை** என்ற பெரிய கோட்டையையும் அதற்குள் மகம் மதிய அரசரால் கட்டிய விசாலமான அரண்மனையையும் பார்த்தோம். அரண்மனை சலவைக் கற்களால் பலகோடி செலவழித்துப் புதுக்கி யிருக்கின்றது. மிக விசித்திர மான வேலைப்பாடுகள் செய்திருக்கின்றன. முன்னே இருந்த கலைஞர்களின் திறமைக்கு இது கருவூலமாக இருக்கின்றது.

மாலை தமிழ்ச் சங்கத்தில் **"பாரதியார் கண்ட மறுமலர்ச்சி"** என்ற தலைப்பின்கீழ் விரிவுரை நிகழ்த்தினேன்.

ஜய—கார்த்திகை 13 (28—11—54)

காலை வழிபாடு வழக்கம்போல் முடிந்தது. குதிரை வண்டிகள் வைத்துக்கொண்டு **பிர்லாமந்திர்** சென்றோம். பிர்லா என்ற தனவந்தர், இந்த ஆலயத்தைத் தன் தகுதிக்கேற்றவாறு சலவைக் கற்களால் புதுக்கி யிருக் கின்றார்.

லட்சுமிநாராயணர், சிவபெருமான், துர்க்கை, முதலிய மூர்த்திகளைத் தனித்தனியே நிறுவி யிருக்கின்றார்கள். சலவைக் கல் சுவர்களில் அழகான ஓவியங்கள் உயிருள்ளவைபோல் பொறித்திருக்கின்றன. பணத்தை அள்ளிக்கொட்டி ஒவ்வொன்றும் கவின்பெற்றிருக்கின் றது. கோயிலுக்குப் பிறகே நந்தனவனம், அதற்கருகில் செயற்கையில் இயற்கை, குகை போன்ற இடங்கள், பாம் பின் வாயில் தண்ணீர் விழுவது போன்ற காட்சிகள், மண்டபங்கள், ஒரு புத்தர் கோயில் முதலியன அங்கு காணப்படுகின்றன. மூன்றுமணி நேரம் இருந்து நிதான மாகக் காணத் தக்கவைகளாகும்.

பின்னர் **வைஸ்ராய் மாளிகை** சென்ரேம். அது ஆங்கிலேயர்கள் புதுக்கியது. இப்போது அதில் ஒரு பகுதியில் **ராஜேந்திர பிரசாத்** இருக்கின்ருர். அதில் ஒரு பகுதியில் விலையுயர்ந்த பொருள்களைக் காட்சிக்கு வைத்திருக்கின்ருர்கள். நவரத்தினங்கள் இழைத்த பாத்திரம் ஒன்றையும் பார்த்தோம். போர்க் கருவிகள்; பழைய திருவுருவங்கள்; ஓவியங்கள் முதலியவற்றையும் பார்த்தோம். அந்த அழகிய மாளிகையும் அதன் வெளித் தோற்றமும், அதைச் சூழ்ந்து கட்டியிருக்கின்ற அமைப்புக்களும் மிக்க வனப்புடன் விளங்குகின்றன.

காந்தியடிகள் பிரார்த்தனைக்கு வரும்போது சுடப்பட்ட இடத்திற்குஞ் சென்ரேம். அங்கே அந்த இடத்தில் ஒரு மேடை மலர்மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. ஒருபுறத்தில் காந்தியடிகளின் வாழ்க்கைக் குறிப்புடன் கூடிய ஓவியங்கள் இருக்கின்றன. அங்கு சென்றதும் எங்கள் மனம் ஒடிந்துவிட்டது. எங்கேயோ போவது போன்ற துக்கம் மேலிட்டது. மலரிட்டு அந்த இடத்தை அஞ்சலித்தோம்.

**இந்தியாகேட்** என்ற இடத்தைப் பார்த்துக்கொண்டு **புராணகிலம்** என்ற இடம் போனேம். அதுதான் பாண்டவர்கள் இருந்து அரசுபுரிந்த **இந்திரபிரஸ்தம்.**

திரௌபதி திருமணத்திற்குப்பின் ஐந்து ஆண்டுகள் பாண்டவர்களும் கௌரவர்களும் ஒற்றுமையாகவே அத்தினபுரத்தில் இருந்தார்கள். திருதராஷ்டிரன் இரு திறத்தாருக்கும் பழையபடியே கலகம் ஏதும் வரக்கூடாது என்று கருதி அவர்கள் முன்னேர்கள் இருந்த **காண்டவ பிரஸ்தம்** என்ற இந்த இடத்தில் சென்று அரசாளுமாறு அனுப்பினன். பாண்டவர்கள் கண்ணபிரானேடு வந்து பார்க்க அக் காண்டவ பிரஸ்தம் அழிந்திருந்தது. கண்ணபிரான் இந்திரனைக் கொண்டு விச்சுவ கன்மனல்,

புதிய நகரத்தை யுண்டாக்கி அதில் பாண்டவர்களை இருத்தினர். அதனால் அது இந்திரபிரஸ்தம் எனப் பட்டது. இது 5000-ம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. அது இப்போது அழிந்து கோட்டைச் சுவர்கள் மட்டும் பிரமாண்டமாகத் தெரிகின்றன. புராணம் - பழமை; கிலம் - அழிவு. **புராணகிலம்**-பழமையின் சிதைவு. இதைப் பார்க்கின்றபோது பாண்டவர்களுடைய பெருமை; அவர்களுடைய அறத்தின் அருமை; அவர்களுக்குள் இருந்த ஒருமை; ஆட்சியின் மாட்சி முதலியன எல்லாம் நினைவுக்கு வந்தன.

காந்தி யடிகளின் திருமேனியை எரியூட்டிய **ராஜகாட்** என்ற இடம் போனோம். ஆ! ஆ! அண்ணலுடைய அருமையான புனித உடம்பை அக்கினிதேவன் எவ்வாறுதான் உண்டானோ? ஒருகல் சுற்றளவில் பூச்செடிகள் சூழ, மரகதக் கம்பளம் விரித்தாலன்ன பசும் புல்தரையுடன் அது விளங்குகின்றது.

நடுவில் புஷ்பக் குவியலுடன் கூடிய மேடை காட்சி தருகின்றது. எங்கள் மனம் உலைந்தது. காந்தி யடிகளின் அரும் பெருங் குணங்களை யெல்லாம் நினைவு கூர்ந்தோம். சிறிது நேரம் அங்கிருந்து தியானம் புரிந்தோம். "வான் முகில் வழாது பெய்க" என்ற பாடலைக் கூறினோம்.

**அசோகத் தூபி**, 12 கல் தொலையிலுள்ள **குதப்மினர்** என்ற தூபி, **பார்லிமெண்ட்ஹால்** முதலியவை பலபார்க்கத்தக்கவை.

இந் நகரம் 45 கல் சுற்றளவில் யமுனை நதிக் கரையில் முக்கோண வடிவாகப் பரந்திருக்கின்றது. நமது தேசத்தின் தலைநகரம் இதுவாதலின் அதன் தகுதிக்கேற்ப அமைந்துளது.

மாலை 3-30 மணிக்கு ரயில்வே உதவி அமைச்சர். திரு. O. V. அழகேசன் அவர்கள் தலைமையில் தமிழ்ச்

சங்கத்தில் **"பரதனும் குகனும்"** என்னும் பொருள் பற்றிப் பேசினேன்.

ஜய—கார்த்திகை 14 (29—11—54)

கார்த்திகை சோமவாரமாகிய இன்று அடியேன் உபவாசம். ஒரு அன்பர் 8 கல் தொலையிலிருந்து வந்து வழிபாட்டுக்குப் பசுவின்பால் அன்புடனளித்தார்.

நாங்கள் பார்லிமெண்ட் ஹால் சென்று அங்கு சர். ராதாகிருஷ்ணன் தலைமையில் நடைபெறும் ராஜ்ய சபையையும், மாவலங்கர் தலைமையில் நடைபெறும் லோக சபையையும் பார்த்தோம். அவைகளைப் பார்க்க நேரு சர்க்கார் அரசியலின் அருமை தெரிகின்றது.

மாலை 3 மணிக்குச் சென்னைக் கல்விச் சாலையில் சென்று 800 மாணவ மாணவிகட்கு **'தமிழின் பெருமை'** யென்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன்.

மாலை 5-55 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. இரவு 10-30 மணிக்குக் **குருக்ஷேத்திரம்** சேர்ந்தோம்.

## குருக்ஷேத்திரம்

ஜய—கார்த்திகை 15 (30—11—54)

குருக்ஷேத்திரம் என்றது காசிக்கு ஒப்பான புண்ணியத்தலம். பகவான் பாண்டவர்களைக் கொண்டு பூமி பாரந் தீர்த்த இடம்.

புகை வண்டிக்கு 1 கல் தொலையில் **சூரியகுண்டம்** என்ற தீர்த்தத்தில் முழுகினோம். இங்கு சூரிய கிரகணத்தின் போது லட்சக்கணக்கான மக்கள் கூடுகின்றார்களாம். வழிபாடும் சூரிய குண்டத்தின் கரையிலேயே செய்தோம்.

பகல் 1 மணிக்குக் குதிரை வண்டிகளை அமர்த்திக் கொண்டு 3 கல் தொலையிலுள்ள **சமந்த பஞ்சகம்** என்ற பெரிய நீர் நிலைக்குச் சென்றோம். கரைகளில் நன்றாகப்

படிகள் கட்டப்பட்டிருக்கின்றன. நீர்நிலைக்கு இடையில் குந்திதேவி பூசித்த **ஜோதீஸ்வரம்** என்ற கோயில் இருக்கின்றது. அதைக் கடந்து 2 கல் தொலை சென்று **பாண கங்கை** யைப் பார்த்தோம். பீஷ்மர் இங்குதான் சரசயனத்தில் படுத்திருந்தது. அவர் தீர்த்தங் கேட்டனர். துரியோதனன் தண்ணீரை வேண்டி இங்குமங்கும் ஓடினன். அர்ச்சுனன் வருணஸ்திரம் விடுத்துப் பூமியில் ஒரு குளத்தை யுண்டாக்கித் தண்ணீரைத் தந்தான். பாணத்தால் உண்டாக்கியபடியால் அதற்குப் பாணகங்கை என்ற பேர் ஏற்பட்டது.

சென்ற வழியே திரும்பி சமந்தபஞ்சகத்தைக் கடந்து 4, 5 கல் சென்றல் அர்ச்சுனனுக்குக் கண்ணன் கீதையை உபதேசித்த இடத்தைக் காணலாம். இப்போது அங்கு **சரஸ்வதி தீர்த்தம்** என்ற குளமும், பழைய ஆலமரத்தின்கீழ் ஒரு மேடையும், அதன்மீது கீதோபதேச வடிவங்களும் காணப்படுகின்றன. புனிதமான இந்த இடத்தில் ஒரு சன்யாசி இருக்கின்றார். இங்கு வாசகசாலையும் வைத்திருக்கின்றார்.

அங்கிருந்து 3, 4 கல் சென்று **தானேஸ்வரம்** என்ற சிவாலயத்தைத் தெரிசித்தோம். இச் சிவமூர்த்தி மிகவும் விசேடமுடையவர். அதற்கு அப்பால் பாண்டவர்கள் போர் தொடங்கும்போது வழிபட்ட காளி ஆலயத்தையுங் கண்டோம். மொத்தம் 15 கல் அளவில் சுற்றி இவைகளைப் பார்த்தோம். மிகப் புனிதமான இந்த இடங்களைக் காணும்போது மனக்கண்ணில் பாண்டவ கௌரவ யுத்தங்களும், கண்ணபிரான் தனஞ்செயனுக்குச் செய்த உதவிகளும், அபிமன்யுவினுடைய வீரப்ரதாப யுத்தமும் பிறவும் தெரிந்தன.

இங்கு பல தருமசாலைகள் இருக்கின்றன. பல தீர்த்தங்களும் இருக்கின்றன. நல்ல வழியும் நல்ல வண்டி

களும் இல்லாமை ஒரு குறை. காலையில் எனது நண்பர் ஒருவர் புகைவண்டி நிலையத்தில் நடக்கும்போது தவறி கீழே 3 அடி பள்ளத்தில் தண்டவாளத்தின்மீது திடீர் என்று விழுந்துவிட்டார். அவர் மாதம் மாதம் பழநிக்குப் போய் தண்டபாணியைச் சேவிக்கும் பண்புடையவர். தன் ஊரில் இரண்டு விநாயகர் கோயில்கள் கட்டிக் கும்பாபிஷேகம் புரிந்தார். அடியேன் செய்த வடலூர் சத்திய ஞான சபைத் திருப்பணிக்கு இரும்பு கொடுத்து உதவியவர். அவர் விழுந்த அந்த இடத்தில் முருகன் அருவமாக நின்று அவரைத் தாங்கிக் காப்பாற்றினார். இல்லையேல் எங்கள் யாத்திரையே இடர்ப்பட்டிருக்கும். முருகன் புரியும் கருணைக்கு அளவு இல்லை.

அன்றே வண்டியில் போகும்போது ஒரு குதிரை வீழ்ந்தது. அருகிலிருந்த நான்குபேர்கட்கும் ஒருவிதமான இடரும் இன்றி உய்ந்தார்கள். இப்படி குருக்ஷேத்திரத்தில் அன்றும் ஆபத்து; இன்றும் எங்களுக்கு இரு ஆபத்துக்கள் வந்து அகன்றன. பின்னர் கூட்டு வழிபாடு புரிந்தோம்.

இரவு 8-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது.

## அமிர்தசரஸ்

ஜய—கார்த்திகை 16 (1—12—54)

காலை 7-40 மணிக்கு **அமிர்தசரஸ்** என்ற இடம் போனோம். காலை நீராடி நித்திய வழிபாடு புரிந்தோம்.

10 மணிக்குப் புறப்பட்டு ஒரு தடாகத்திற்கு இடையே சலவைக் கற்களால் புதுக்கியுள்ள கோயிலுக்குச் சென்றோம். அங்கு சிவபெருமான், லட்சுமிநாராயணர், ராமர் சீதை, ராதாகிருஷ்ணர் முதலிய திருவுருவங்கள் இருக்கின்றன. **ஜலியன்வாலா** தோட்டத்தைப் பார்த்தோம்.

பிறகு $1\frac{1}{2}$ கல் தொலையில் **தங்கக்கோயில்** இருக்கின்றது. இது சீக்கியர்களுடையது. அமிர்தசரஸ் என்ற பெரிய நீர்நிலை எல்லாம் சலவைக்கல் தளம். அதற்கு நான்கு புறங்களிலும் தூபிகள் சூழ்ந்த மண்டபங்கள். நீர்நிலைக்கு நடுவே, தேவலோகத்திலிருந்து இந்திரனுடைய பொன் மாளிகை இறங்கியிருப்பது போன்ற தங்கக்கோயில் காண்பவர்கள்கண்களைக் கவரும்வண்ணம் திகழ்கின்றது. அங்கு தங்கத்தால், கோயிலுக்கு உள்ளும் புறமும் செய் திருக்கின்ற சித்திர வேலைப்பாடுகளை எழுத்தாலும் சொல்லாலும் எழுதவோ சொல்லவோ முடியா.

அக்கோயிலில் வேதங்களை வைத்து வழிபடுகின் ருர்கள். சதா பஜனை; தித்திப்புப் பிரசாதங்கள் வழங்கு கின்ருர்கள். அதற்கு எதிரில் ஒரு தங்க மயமான மண்ட பம்; அதிலும் வேதத்தை வைத்துப் பூஜை நடைபெறு கின்றது. தங்கக் கோயிலைக் கண்டவுடன் எங்கள் எல் லோருக்கும் பெருவியப்பு உண்டாயிற்று. கண்கொள்ளாக் காட்சி. அங்கு சிறிது நேரம் இருந்துவிட்டுப் புறப்பட் டோம். கடை வீதிகள் அழகாக இருக்கின்றன. போர் வீரர்கள் தங்கும் இடமாதலினுல் ஊர் விசாலமாக இருக் கின்றது. காஷ்மீருக்கு அருகில் இருப்பதனுல் நல்ல பழங்கள் நிரம்ப இருக்கின்றன. இமயமலையைச் சார்ந் திருப்பதனுல் கடுங்குளிர் அதிகம்.

மாலை 6-15 மணிக்கு வண்டி புறப்பட்டது. கந்தரநுபூதி பாராயணம் புரிந்தோம்.

## அரித்துவாரம்

ஜய—கார்த்திகை 17 (2—12—54)

காலை 7-15 மணிக்கு **முத்தித்தலங்களுள்** ஒன்றுகிய **ஹரித் துவாரத்தை** யடைந்தோம். புகை வண்டியின் நிலையத்திற் கும் கங்கைக்கும் ஒரு கல் தொலை. கங்கையில் **பிரமகுண்டம்** என்ற இடம் தலைசிறந்தது. நாங்கள் வண்டியை

விட்டு இறங்கி திருப்புகழ் பஜனை செய்துகொண்டே கங்கா நதியை யடைந்தோம். அடியேன் தமிழ் நாட்டில் 12 ஜில்லாக்களிலும் சுற்றியிருக்கின்றேன். இப்போதும் வடநாட்டில் எல்லாப் பகுதிகளையும் பார்த்து வந்தேன். இங்கு ஓடுகின்ற கங்கா நதியைப்போன்ற ஒன்றைக் கண்டதே இல்லை. ஞானிகளின் உள்ளத்தைவிடத் தெளிவாகப் பளிங்குபோல் ஓடுகின்றது. தண்ணீர் மிக வேகமாகச் செல்லுகின்றது. வடக்கே இமயமலையினின்றும் இறங்கி பூமியைத் தொட்டுச் செல்லுகின்றது. முருகவேளுடைய திருவருளைப்போல் கங்கை நீர் மிகக் குளிர்ச்சியாக இருக்கின்றது. 10-30 மணி சுமாருக்கு நாங்கள் குளித்தோம். பனிக்கட்டி உருகி வந்தத் தண்ணீராதலின் அப்பொழுதும் ஒருமுறை இருமுறைக்கு மேல் முழுக முடியவில்லை. தேள் கொட்டியதுபோல் குளிர்ச்சி உடம்பில் ஏறியது. என்னுடைய நண்பர்களையெல்லாம் அப்போது நினைத்து முழுகினேன். பின்னர் கங்கா நதிக்கரையில் கங்கா பாலனாகிய எம்பிரானை வைத்து வழிபட்டேன்.

மாலை 5 மணிக்கே குளிர் வந்து விடுகின்றது. 5-55 மணிக்கு கங்காபூஜை செய்கின்றார்கள். பற்பல மணிகள் கணீர் கணீர் என்று அடித்து பற்பல ஆராதனை செய்யும் போது தொன்னைகளில் நல்ல ரோஜாப் பூக்களை வைத்து கற்பூரம் ஏற்றி கங்கையில் பல தீபங்களை விடுகின்றார்கள். அது கண்கொள்ளாத காட்சியாக இருக்கின்றது. கங்கையினுடைய பெருமை கணக்கிலடங்காதது.

பகிரதன் பல்லாயிரம் ஆண்டுகள் தவம்புரிந்து தனது முன்னோர்களாகிய சகரர்கள் அறுபதாயிரம் பேரையும் சுவர்க்கத்தி லேற்றும் பொருட்டு வரவழைத்து சிவ பெருமான் திருமுடியிலிருந்து இறங்கி இமயமலையில் ஆயிரம் முகங்களாகத் தோன்றி உலகத்தை உய்விக்கும்

பொருட்டு வருகின்றாள். விண்ணில் உயர்ந்த பொருள் சூரியன்; மண்ணில் உயர்ந்த பொருள் கங்கை. கண்ட மாத்திரத்திலே கலி தீர்கின்றது. பலமுறை பார்த்தாலும் ஆர்வம் அடங்கவில்லை. கூட்டு வழிபாடு புரிந்தோம்.

ஜய—கார்த்திகை 18 (3—12—54)

காலையில் **கனகலம்** சென்றோம். அது ஹரித்துவாரத்திற்கு இரண்டு கல் தொலையில் இருக்கின்றது. தட்சப் பிரசாபதி யாகஞ் செய்த இடம். பழங்காலத்தில் ஒரு பல்கலைக் கழகம் நடந்ததாகவும் தெரிகின்றது.

அங்கு சென்று கங்கையாற்றில் நீராடினோம். கங்கையில் பல லட்சம் சிவலிங்கங்கள் இருக்கின்றன. உலகிலுள்ள அன்பர்கள் எல்லோரும் சிவபூஜை செய்தாலுங் கூட அங்கு லிங்கம் கிடைக்கும். அங்கேயே வைத்து நித்திய வழிபாடு செய்தோம். அங்கு தட்சன் பூசித்த சிவலிங்கம், அம்பிகை முதலிய மகிமை வாய்ந்த மூர்த்திகள் இருக்கின்றன. அவைகளைத் தெரிசித்துவிட்டு வந்தோம்.

மாலை 4 மணிக்கு புகைவண்டி நிலையத்திற்குச் சற்று வடக்கேயுள்ள வில்வகேஸ்வரம், பைரவர், ஊருக்கு நடுவில் உள்ள கீதாமந்திர், மாயாதேவி கோயில், பஞ்சமுக லிங்கம் முதலிய கோயில்களைத் தெரிசித்தோம். பஞ்சமுக லிங்கம் உள்ள கோயிலில் முருகக்கடவுள் இருக்கின்றார். இத் தலத்திற்கு **மாயை** என்று பேருண்டு. அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ் ஒன்று உளது. மாலையில் கங்கை ஆராதனையைத் தெரிசித்து மகிழ்ந்தோம். இரவு கூட்டு வழிபாடு புரிந்தோம்.

ஹரித்துவாரத் **திருப்புகழ்**

சிகர மருந்த வாழ்வது சிவஞானம்
சிதறி யலைந்து போவது செயலாசை
மகர நெருங்க வீழ்வது மகமாய
மருவி நினைந்திடாவருள் புரிவாயே

அகர நெருங்கி னுமய முறவாகி
அவச மொடுங்கை யாரொடு முனமேகிக்
ககன மிசைந்த சூரியர் புகமாயை
கருணை பொழிந்து மேவிய பெருமாளே.

மாயை யகற்று **மாயையெனும்** மகிமை **யரித்துவாரமெனுந்**
தூய தலத்தில் தவழ்கங்கைத் துறையில் கருணை நிறைவுடனே
தாயையனைய அருள்புரிந்துதழைக்குந்தனிவேற்பரம்பொருளாம்
சேயை வணங்குந் திருவாளர் சிவமாம் பேறு பெறுவாரே.

## ரிஷிகேசம் – ஆனந்தகுடீர்

## (சிவானந்த ஆஸ்ரமம்)

*ஜய—கார்த்திகை 19 (4—12—54)*

அதிகாலையில் எழுந்து நீராடி நித்திய வழிபாடுகளை முடித்துக்கொண்டோம். ஆள் 1-க்குப் போக வர 2–6–0 என்று பேசி தனி பஸ் ஒன்று அமைத்துக்கொண்டு **ரிஷி கேசஞ்** சென்றோம். அங்கிருந்து தவராஜ முனிவராய் விளங்கும் ஸ்வாமி **சிவானந்த சுவாமிகளுடைய** **ஆனந்தகுடீர்** சென்றோம். அங்கு சுவாமிகள் தாயினுஞ் சிறந்த தயாவுடன் எங்கள் எல்லோருக்கும் மாலை சூட்டி வரவேற்றனர். சுவாமிகளுடைய அன்புக் கங்கையில் முழுகினோம். சுவாமிகள் புதுக்கியுள்ள **விஸ்வநாத மந்திர்** தெரிசித்தோம். இன்னும் பல அரிய காட்சிகளைக் கண்டு உவகையுற்றோம்.

பகல் 12 மணிக்கு கங்கை யாற்றில் முழுகினோம். அது சொர்க்காஸ்ரமத்திற்கு எதிர்கரை. சுற்றி இமய மலையின் சாரல். இயற்கை யழகு களிநடம் புரிகின்றது.

1 மணிக்கு இனிய உணவு அடிகளார் படைக்க உண்டோம். 1–30 மணிக்குப் புறப்பட்டு $1\frac{1}{2}$ கல் தொலையிலுள்ள **லட்சுமணஜூலா** சென்று இலட்சுமணருடைய திருவுருவத்தை வணங்கினோம். கங்கையைக் கடப்பதற்கு

இருப்புக் கம்பிகளினால் ஊஞ்சல் (தொங்கு) பாலம் அமைத்திருக்கின்றார்கள். அதைக் கடந்து கீழ்க்கரை சென்றோம். அங்கிருந்து $1\frac{1}{2}$ கல் நடந்தோம். வழிநெடுக முனிவர்கள் தங்கும் ஆஸ்ரமங்களும், பற்பல ஆலயங்களும், இருபுறத்தும் மாமரங்களின் நிழலுமாகவே இருந்தன. நடப்பதனால் வருங் களைப்பு தெரியவில்லை. பின்னர் சொர்க்காஸ்ரமத்தை யடைந்து, **கீதாமந்திர், சிவாலயம், காலா கம்பிளிவாலா சமாதி** முதலியவற்றைத் தெரிசித்தோம். ஓடம் ஏறி மாலை 3–30 மணிக்கு ஆனந்தகுடீர் வந்தோம். அங்கு சுவாமிகள் தலைமையில் உயர்ந்த தம்பூர், கஞ்சிரா, ஹார்மோனியம் இவைகளுடன் திருப்புகழ் பாடி, "பேசா அநுபூதி பிறந்ததுவே" என்ற அநுபூதி வாக்கியத்திற்கு இரண்டு மணிநேரம் விரிவுரை செய்தேன். அங்கு ஒரு அன்பர் கொனகோல் நன்றாகக் கொணித்தார்.

சுவாமிகள் அங்கேயே பலநாள் தங்கியிருக்க வேண்டும் என்று கூறி அன்பு கனிந்து வாழ்த்தினார்கள். அப்பொழுது அடியேன் பாடிய பாடல்:

ஐய மகற்றும் ஆனந்த குடீர மதனில் **அன்பரெ**லாம்
உய்ய வந்த தவஞான ஒருவ**ன்** அறுவர் தமைவென்றோன்
செய்ய கங்கைக் கரைவாழும் சித்தன் சித்த சிகாமணியாம்
வையம் புகழும் **சிவானந்த** வள்ளல் வாழி வாழியவே.

மாலை 6—30 மணிக்கு எல்லோருக்கும் வாழைப்பழம், எள்ளுருண்டை, லட்டு வழங்கப் பெற்றன. எல்லோருக்கும் உப்புமா, சுண்டல், காபி நீர் முதலியவை வழங்கினார்கள்.

சுவாமிகளுடைய அன்பு வெள்ளம் கங்கை வெள்ளத்தைவிட அதிகமாகப் பெருகி ஓடுகின்றது. கங்கைக் கரை மணல்களைப்போல் சுவாமிகள் எழுதிய நூல்களும் அதிகமாக இருக்கின்றன. ஆஸ்ரமத்தில் தினம் ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய் செலவழிகின்றதென்றும் அறிந்தேன். ஐந்து கண்டங்களிலிருந்தும்

## சிவானந்தரும், கிருபானந்தரும்.



ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரி அவர்கள் தம் திருப்புகழ் குழுவுடன் 4—12—54ல் ரிஷிகேசம் ஆனந்தகுடீர் ஆசிரமத்துக்கு விஜயம் செய்தபோது, ஆசிரமத்தலைவர் ஸ்ரீ குருமகராஜ் **சிவானந்த சுவாமிகள்** அன்போடு வரவேற்கும் காட்சி.

பலர் அடிகளாரைக் காண வருகின்றார்கள். நாங்கள் போயிருந்தபோதும் பாரீஸ் நகரிலிருந்து ஒரு சிலர் வந்தார்கள்.

ஆஸ்ரமத்தில் மாணவர்கள் பலர் படிக்கின்றார்கள். 200 சன்யாசிகள் இருந்து தொண்டு புரிகின்றார்கள். தபால் ஆபீஸ் இருக்கின்றது. "சேய்போலிருப்பர் கண்டீர் உண்மை ஞானந் தெளிந்தவரே" என்று பட்டினத்து சுவாமிகள் கூறியவாறு சுவாமிகள் குழந்தை போல் இருந்து வருகின்றார்கள்.

அங்கு ஒரு பெரிய மருத்துவச்சாலை இருக்கின்றது. இமயமலை மூலிகைகளைக் கொண்டு சிறந்த மருந்துகள் தயாரிக்கப் பெறுகின்றன. உயிர் நோய்க்கு மருந்து போல் சில பல நூலகளையும், உடம்பு நோய்க்கு மருந்து களும் அன்புடன் வழங்கினார்கள். **சியவனப் பிரகாசம்,** தைலம் முதலியனவாகும். சுவாமிகளிடம் பிரியா விடை பெற்று 7.30 மணிக்குப் புறப்பட்டு ஹரித்துவாரம் வந்து சேர்ந்தோம்.

ஜய—கார்த்திகை 20 (5—12—54)

எங்களுடன் வந்திருந்த அன்பர்களில் மதுரை பழக் கடை திரு. பழநிசாமிப் பிள்ளை யவர்கட்கு உடல் நலம் குன்றியது. அவர் திரும்பி ஊருக்குப் போக விரும்பிய படியால் அவரையும் அவருடைய வாழ்க்கைத் துணைவி யாரையும் காலை மதுரைக்குப் புகைவண்டியில் ஏற்றி ஒரு துணையாளையும் சேர்த்து அனுப்பினோம்.

காலை கங்கை நதி சென்று முழுகினோம். கங்கைக்கரை யிலே வழிபாடு செய்தோம்.

கங்கையில் குளிக்கும்போது எங்களுடன் வந்த அன்பர்களில் சென்னை திரு. நடேசன் செட்டியார் அஜாக் கிரதையால் வழுவி தண்ணீருடன் உருண்டு சென்றார்,

கரையிலுள்ளார் ஓடி அவரைக் கரை சேர்த்தனர். பெரிய ஆபத்து அகன்றது.

எல்லோரும் கங்கைக்கு வழிபாடு செய்து கங்கை நீரை எடுத்துக்கொண்டோம்.

மாலை கங்கையாராதனையைப் பார்த்து, கங்காதேவியிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டோம். அன்று ஹரித்துவாரம் திருப்புகழ் உள்பட பல பாடல்களைப் பாடிக் கூட்டு வழிபாடு செய்தோம்.

இரவு 9-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது.

## நைமிசாரண்யம்

ஜய—கார்த்திகை 21 (6—12—54)

பாலமன் சந்திப்பு வழியாக காலை 9 மணிக்கு நைமிசாரண்யத்தை யடைந்தோம்.

முனிவர்கள் பிரமதேவரையடைந்து, "நாங்கள் பூவுலகத்தில் தவஞ் செய்யப் புனிதமான இடம் ஒன்றைக் காட்டியருளவேண்டும்" என்று வேண்டினார்கள். பிரமதேவர் ஒரு தருப்பைப் புல்லைச் சக்கரம் (நேமி) போல் கட்டி எறிந்து, "இது எங்கு விழுகின்றதோ அந்த இடம் பூவுலகில் புனிதம் நிறைந்தது" என்று கூறியருளினார். அப்புல்லின் சக்கரம் உருண்டுவந்து இங்கு நின்றது. அதனால் இந்த இடம் **நைமிசாரணியம்** எனப் பெற்றது. 88 ஆயிரம் முனிவர்கள் இருந்து தவஞ் செய்த இடம்.

சூதபுராணீகர், சௌனகாதி முனிவர்கட்குப் பதினெண் புராணங்களையும் இங்கிருந்து கூறினார். பழங்காலத்தில் இது பெரிய சிறப்புடன் விளங்கியது.

நாங்கள் புகைவண்டி நிலையத்தினின்றும் புறப்பட்டு ஒரு கல் சென்றோம். அங்கு **கோமதி** என்ற நதி ஓடுகின்றது. அதில் முழுகினோம். அதன் கரையில் சிறிய கோயில் ஒன்றுளது. சற்று தூரத்தில் ஒரு மேட்டில் பெரிய

உருவத்தில் ஆஞ்சனேயர் இருக்கின்றார். அருகில் பாண்டவர்கள் கோயில் இருக்கின்றது.

3 பர்லாங்கு தொலையில் சரஸ்வதி தீர்த்தம், பிரம தீர்த்தம் என்ற இரு குளங்களும், வியாசருடைய கோயிலும், அதன் அருகில் சுகருடைய கோயிலும், அதற்கு எதிரில் மநுச் சக்ரவர்த்தியின் சமாதியும், காசிப முனிவரின் சமாதியும் இருக்கின்றன. அதிலிருந்து சிறிது தூரத்தில் ஒரு மேட்டின் மீது முனிவர்கள் வேள்வி செய்த குண்டம் இருக்கின்றது. அதன் அடியில் பருமனை குழாய் இருக்கின்றது. அக்குழாய் சிறிது தூரம்வரை பூமிக்குள் செல்லுகின்றது. அங்கிருந்து நெய் விட்டால் வேள்விக்குண்டத்திற்கு வந்து விழும். இந்த இடத்தைப் பார்த்தால் பழைமையின் பெருமை தெரிகின்றது.

அங்கிருந்து சிறிது தூரத்தில் **சக்ர தீர்த்தம்** இருக்கின்றது. அதன் கரையில் பூதேஸ்வரர் என்ற சிவாலயம் இருக்கின்றது. திருமால் சிவபூஜை செய்யும் பொருட்டு சக்கரத்தினால் உண்டாக்கிய தீர்த்தம் அது. அத் தீர்த்தத்தில் தண்ணீர் ஊற்று சதா வந்தவண்ணமாகவே இருக்கின்றதாம். தண்ணீர் பெருகி வழிந்துகொண்டேயிருக்கின்றது. அருங்கோடையிலும் வற்றுவதில்லையாம்.

அதற்கு அப்பால் **லலிதாதேவி** கோயில் இருக்கின்றது. அம்பிகை மிகவும் சக்திவாய்ந்தவள். அதற்கருகில் **சீதா குண்டம்** என்று ஒரு சிறு குளம் உளது.

ஸ்ரீராமர் இராவண வதஞ் செய்தபின் அயோத்தியை அரசு புரிந்தனர். சீதை கருவுற்றிருந்தபோது பின்னே நிகழ இருக்கும் கருமத்தின் பொருட்டு சீதையைக் கானகத்தில் விடுத்தனர்.

பின்னே இந்த நைமிசாரண்ய வனத்தில் அஸ்வமேத யாகம் புரிந்தனர். அதில் குசலவர்கள் இராமாயணக் காவி

யத்தை அரங்கேற்றினார்கள். ஸ்ரீராமர் அவர்களை நோக்கி "உங்கள் தாய் யார்?" என்று வினவினர். "சீதை" என்றனர். ஸ்ரீராமர் சீதையை யழைத்து, "இவர்கள் உன் புதல்வர்கள் என்பதற்கு சான்று எது?" என்று வினவினர். சீதை "முன்னே அக்கினிதேவன் சான்று கூறினான். இப்போது நான் பிறந்த இடமாகிய பூமிதேவி கூறுவாள்" என்றாள். உடனே பூமி வெடித்து அதிலிருந்து ஒரு சிம்மாசனம் வந்தது. அதில் சீதாதேவி யமர்ந்ததும் சிம்மாசனம் பூமிக்குள் சென்றுவிட்டது. அந்த இடந்தான் இப்போது சீதா குண்டம் என்று விளங்குகின்றது. அப் புனிதமான குளத்தின் நீரைச் சிரசில் தெளித்துக் கொண்டோம். கார்த்திகைச் சோமவாரமாகிய இன்று உபவாச விரதத்துடன் இவைகளைத் தெரிசிக்கும் பேறு கிடைத்தது. மாலை 7-15 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. அன்று நாங்கள் கீர்த்தித் திருவகவல் கூறி கூட்டு வழிபாடு புரிந்தோம்.

## லட்சுமணபுரி

ஜய—கார்த்திகை 22 (7—12—54)

பாலமன் சந்திப்பு வழியாக அதிகாலை 5-25 மணிக்கு லக்னௌ என்று வழங்குகின்ற லட்சுமண புரியை யடைந்தோம். புகைவண்டி நிலயத்திலேயே நீராடி நித்திய வழிபாட்டை முடித்துக்கொண்டோம். பகல் 11 மணிக்கு மேல் புறப்பட்டு அழகிய கடை வீதிகளையும், **மத்ஸ்யபவனத்தையும், இமாம்பாரா** என்ற அரண்மனையையும், பூங்காவையும் பார்த்தோம்.

ஆதிகாலத்தில் இராமர் உத்தரவின்படி லட்சுமணர் இந்த நகரத்தைத் தன்பேரால் உண்டாக்கி அவர் இருந்து அரசாண்டனர். அதுதான் காலாந்தரத்தில் இப்படி உருமாறிப் பெயர்மாறியது. லட்சுமணருடைய கோயிலை யிடித்து அந்த இடத்தில் முகமதிய அரசர்கள் மசூதி கட்டி

யுள்ளார்கள். அதைப் பார்க்க மனம் பதறியது. மத வெறியாளரின் கொடுமையை நினைந்துஉள்ளம்உருகியது.

லட்சுமணபுரி அந்த மாகாணத்திற்குத் தலைநகர். ஆதலின் கவர்னர் தங்கி யிருக்கின்றார். அருகில் கோமதி யாறு ஓடுகின்றது. பரந்த நகரம். கடைவீதிக் கருகில் உள்ள சிறு பூந்தோட்ட வெளியில் சிவாலயம் இருக்கின்றது. அதற்கு ஓங்கார மகாதேவ மந்திர் என்று பேர். அதற்கெதிரில் அநுமானுடைய கோயில் இருக்கின்றது. இவற்றை யெல்லாம் பார்த்துவிட்டு வந்தோம். மாலை 7-25 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. பிறகு கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 9-45 மணிக்கு **பெய்சாபாத்** (அயோத்தி) வந்து சேர்ந்தோம்.

## திரு அயோத்தி

*ஜய—கார்த்திகை 23 (8—12—54)*

கோசலநாட்டின் தலைநகரம் **அயோத்தி.** யுத்தபயம் இல்லாத ஊர் என்று அதற்குப் பொருள். இதன் பெருமையைக் கம்பரும் வான்மீகரும் அளவிலாது பேசியுள்ளார்கள். சூரியகுல மன்னர்கள் வழிவழியாக இருந்து அரசாண்ட அரிய நகரம்.

காலை நாங்கள் நீராடி நித்திய வழிபாடு புரிந்து கொண்டு புறப்பட்டோம். அயோத்திக்குள் நுழைகின்ற போது அடியேன் காவிய உலகில் நுழைந்தேன். அயோத்தியைக் காண்கின்றபோது கம்பநாடரைக் கண்டேன். அதன் அருகில் சரயுநதி ஓடுகின்றது. இதன் அகலம் $2\frac{1}{2}$ கல். புலவன் உள்ளம்போல் பரந்திருக்கின்றது.

**சுவர்க்கத் துவாரம்** என்ற ஒரு துறையுளது. அதன் வழியாக நாங்கள் சென்றோம்.

இராவண வதத்திற்குப்பின் ஸ்ரீராமர் திரு அயோத்தியை 11 ஆயிரம் ஆண்டு அரசுபுரிந்தனர். அறக் கடவுள்

ஸ்ரீராமர் இனி வைகுந்தம் வரவேண்டும் என்று நினைவுபடுத்த வந்தார். தனியிடத்தில் இருவரும் பேச அமர்ந்தனர். "ஒருவரையும் உள்ளே விடவேண்டாம்" என்று இராமர் இட்ட கட்டளைப்படி இலட்சுமணர் வாசலில் காவல் புரிந்தனர். துருவாச முனிவர் வந்தனர். அவரைத் தடுக்க அஞ்சி உள்ளே விட்டுவிட்டனர். அறக்கடவுள் "இராமச் சந்திரமூர்த்தியே! இனி நீர் வைகுந்தம் எழுந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்துவிட்டுச் சென்றனர். அண்ணவுடைய சொல்லை நிறைவேற்ற முடியாமல் போனதற்காக வருந்திய இலட்சுமணர் தன் உருவத்தை விடுத்து ஆதிசேட வடிவந் தாங்கி வைகுந்தஞ் சென்றனர்.

ஸ்ரீராமர் பரதர் சத்ருக்னர் மற்றும் பல அன்பர்களுடன் சரயுநதி சென்று நீராடி நின்றனர். உடனே மானுட வடிவம் மாறி நாராயணரானார். பரதர் சக்கரமாகவும் சத்ருக்னர் சங்காகவும் மாறினார். ஏனையோர் தேவ சரீரம் பெற்றனர். விண்ணிலிருந்து இறங்கிய விமானம் ஊர்ந்து எல்லோரும் பரமபதம் புகுந்தார்கள்.

இந்த வழியே சென்றதனால் இதற்குச் சொர்க்கத் துவாரம் என்று பேர். நாங்கள் அங்கு சென்று சரயுநதியில் முழுகி, சரயுநதியை ஆராதித்தோம்.

நதிக்கரையில் தசரதச் சக்ரவர்த்தி முதலிய சூரிய குலத்து மன்னர்கள் வழிபட்ட நாகநாதர் ஆலயம் சிறிய அளவில் இருக்கின்றது. நாகங்களின் வடிவினால் ஆவுடையார் வெள்ளியங்கியுடன் சிவலிங்கம் சிறப்புடன் திகழ்கின்றது. நாங்கள் சென்று சிவபெருமானை வழிபட்டோம். அங்கிருந்து **ராமர் கோயில், அநுமந்தர் கோயில்** முதலியவைகளைத் தெரிசித்தோம். ராமர் அவதரித்த இடத்தில் முகம்மதியர்கள் மசூதி கட்டியுள்ளார்கள். அதன் அருகில் சிறிய கோயில் கட்டி அதில் இராமரை

வைத்துப் பூசிக்கின்றார்கள். மீளவும் அம் மசூதியில் இராமர் படத்தை வைத்து இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் கலகம் விளைந்தது. இப்போது அங்கு போலீஸ் காவல் இருக்கின்றது.

கைகேயி கோபாக்ரகம், சீதை யிருந்த இடம், தசரதர் மாளிகை என்று பலவற்றைக் காட்டுகின்றார்கள். அவைகள் நிஜமல்ல. அந்த நினைவை யுண்டாக்குகின்றது.

செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளில்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞர் அனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுலகத்தோர் யாவருந் தவஞ்செய்
தேறுவான் ஆதரிக்கின்ற
அவ்வுலகத்தோர் இழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

நிலமகள் முகமோ? திலகமோ? கண்ணோ?
நிறைநெடு மங்கல நாணோ?
இலகு பூண் முலைமேல் ஆரமோ? உயிரின்
இருக்கையோ? திருமகட் கினிய
மலர்கொலோ? மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ? வானின்
உலகின்மேல் உலகோ? ஊழியின் இறுதி
உறையுளோ? யாதென உரைப்பாம்.

என்று கவிச் சக்ரவர்த்தி கம்பர் தன் வாய் குளிர வாழ்த்திய இந்த அயோத்திமா நகரம் தன் பழைய நலனிழந்திருக்கின்றது. அதனைக் காண மனம் மிகவும் வருந்தியது.

**முத்தித்தலங்கள் ஏழனுள் ஒன்று அயோத்தி.** இந்த புண்ணிய நகரத்தில் இக்காலத்து சிற்றரசன் ஒருவன் புதுக்கிய கோயில் ஒன்றைப் பார்த்தோம். அதில் முருகவேள்

திருவுருவம் இருந்தது. திருக்கார்த்திகையாகிய அன்று முருகவேள் தெரிசனை கிடைத்ததுபற்றி மனம்மகிழ்ந்தது.

மாலை எங்கள் புகைவண்டியிலேயே பல விளக்குகள் ஏற்றி மாவிளக்கிட்டு தேங்காய் பழம் அவல் இவைகளை நிவேதித்து திருப்புகழ் பஜனை செய்தோம். பழநியின் நினைவு வந்துகொண்டே யிருந்தது. பிறகு தீபங் கண்டு உணவு உட்கொண்டோம். திருக்கார்த்திகையன்று சரயு நதி ஸ்னனமும், அயோத்தி தெரிசனமும் கிடைத்தது பெரிய வாய்ப்பு.

மாலை 5-20 மணிக்கு வண்டி புறப்பட்டு இரவு 10-45 மணிக்கு **அலகாபாத்** சேர்ந்தது.

## பிரயாகை (அலஹாபாத்)

## திரிவேணி சங்கமம்

ஜய—கார்த்திகை 24 (9—12—54)

காலை புறப்பட்டு பிரயாகை சென்றோம். அங்கு யமுனையில் கங்கை கூடுகின்ற இடத்திற்கு முன் கங்கையில் முழுகினோம், கங்கை நதி இங்கு 1½ கல் தொலை பரந்திருக்கின்றது. நித்திய வழிபாடு புரிந்தோம். பின்னர் ஓடத்தில் கங்கையும் யமுனையும் கூடும் **திரிவேணி** சங்கமத்திற்குச் சென்றோம்.

அங்கு அரசனுகட்டும், அரசகுமாரனுகட்டும், அல்லது விஷ்ணுவேயாகட்டும் சவுளம் செய்து கொண்டே தீரவேண்டும் என்று விதியுண்டு.

‘ ராஜோவா ராஜபுத்ரோவா லக்ஷ்மீபதி ரேவவா?
ப்ரயாகே வபனம் குர்யாதன்ய க்ஷேத்ரே கதாசத் ’

நாங்களும் சவுளஞ் செய்து கொண்டோம்; “சகல ஆன்மாக்களுக்கும் நன்மையுண்டாகட்டும்” என்று பிரார்த்தித்து முழுகினேன். அங்கு முழுகும்போது மிக்க ஆனந்தமாக இருந்தது. இடை பிங்கலை சுழுமுனை என்ற மூன்று

நாடிகளும் ஒன்றுகூடும் புருவ நடுவில் முழுகவேண்டும் என்பதன் வெளிப்பொருள்தான் இது.

இந்தப் பிரயாகையில் பழைய காலத்தில் சந்திர குலத்தின் மூதாதைகளாகிய புரூரவன், ஆயு, நகுஷன், யயாதி முதலிய மன்னர்களும் துஷ்யந்த மன்னனும் இருந்து அரசுபுரிந்தார்கள். அப்போது இதற்கு **பிரதிஷ்டானபுரம்** என்று பேர்.

முகம்மதியர்கள் காலத்தில் இலாஹாபாத் என்று பெயர் மாறியது.

பிரமதேவர் இங்கு 10 அஸ்வமேதயாகம் புரிந்தனர். அதனால் அந்த இடத்திற்கு தசாஸ்வமேதகாட் என்று பேர். சிறந்த யாகம்புரிந்ததனால் பிரயாகையெனப்பட்டது.

பட்சிராஜா—கருடன்; மிருகராஜா—சிங்கம்; தேவ ராஜா—இந்திரன்; தியாகராஜா—சிவன்; நாகராஜா—சேடன்; மந்திரராஜா—திருவைந்தெழுத்து; விருட்ச ராஜா—கற்பகம். அதுபோல் **தீர்த்தராஜா—பிரயாகை** என உணர்க. உலகிலேயுள்ள தீர்த்தங்களுக் கெல்லாம் அரசன் என்றால் அதன் பெருமை அளவிடற்பாற்றோ? கங்கை வெண்மையாகவும், யமுனை கருமையாகவும் கலக்கும் போது இரு பிரிவாக நன்கு தெரிகின்றது. சரஸ்வதி நதி அந்தர்வாஹினியாக வந்து கலக்கின்றது. வேணி—ஜடை; மூன்று நதிகளின் பின்னல்; அதனால் **திரிவேணி** எனப்பட்டது. மாலை பெண்மணிகள் சேர்ந்து கூட்டு வழிபாடு நிகழ்த்தினார்கள்.

ஜய—கார்த்திகை 25 (10—12—54)

"த்ரிவேணிம் மாதவம் சோமம் பாரத்வாஜஞ்ச வாசுகிம்
வந்தே அட்சயவடம் சேஷம் ப்ராயாகே தீர்த்தநாயகம்"

என்று இது சிறப்பிக்கப்பெற்றுள்ளது.

இங்கு தெரிசிக்கத் தக்கவை திரிவேணி, வேணிமாதவர், சோமலிங்கம், பாரத்வாசர், வாசுகி, அட்சயவடம் என்பவை.

நாங்கள் காலை நீராடி நித்திய வழிபாடு செய்து கொண்டு குதிரை வண்டிகளில் புறப்பட்டோம். நேருஜீயின் **ஆனந்தபவனம்**, அதற்கருகில் மோதிலால் நேரு காங்கிரசுக்குக் கொடுத்த சுயராஜ்யபவனம் என்ற இரண்டையும் பார்த்தோம். சுயராஜ்யபவனத்தில் பள்ளிக்கூடம் நடைபெறுகின்றது.

அதற்கு எதிரில் **பாரத்வாஜர் கோயில்** உளது. இது பார்க்கவேண்டியது. பாரத்துவாஜர் பூசித்த லிங்கமும் உளது. பின்னர் கமலா நேருவின் மருத்துவச் சாலையைப் பார்த்தோம்.

அதற்கு வடக்கே ஒரு கல் தொலையில் **ஆதிசேடனுடைய** கோயில் இருக்கின்றது. இதுவும் அவசியம் பார்க்கத்தக்கது. அதைத் தெரிசித்தோம். அங்கிருந்து தெற்கே ஊருக்குள் வரும்போது **வேணிமாதவர்** கோயில்; அதனையுந் தெரிசித்தோம்.

பின்னர் திரிவேணிக்குச் சென்றோம். தம்பதிகளாக வந்தவர்கள், சாத்திர விதிப்படி கிரியைகள் செய்து, மனைவியின் தலையைக் கணவனார் சீவி பின்னலிட்டு அப் பின்னலின் நுனியைக் கத்தரித்துக் கங்கையில் விட்டனர். அப்படி விட்ட அது உடனே பளிச்சென்று தண்ணீருக்குள் அழுந்திவிடுகின்றது. சரஸ்வதி நதி அதை வாங்கிக் கொள்ளுகின்றது என்பது ஐதீகம். இந் நிகழ்ச்சி கண்கூடாகக் கண்டது. இக் கலியில் இன்று நிகழ்வது ஆச்சரியமாக இருக்கின்றது.

திரிவேணி கடந்து யமுனை நதியையுங் கடந்து மேற்கரை சென்று 2 கல் அல்லது $1\frac{1}{2}$ கல் தொலை தெற்கு

நோக்கி வயல் வழியே சென்று ஏகாந்தமாக ஒரு சோலை யில் உள்ள **சோமநாதரைத்** தெரிசித்தோம். இதுதான் மிக அவசியம். இவரைத் தெரிசிக்காதவர் பிரயாகை யாத் திரையின் முழுப்பலனை அடைய முடியாது.

சிறிய கோயில். சிவலிங்கம் அழகாக இருக்கின்றது. இந்த சோமநாதரைக் குறித்து ருக்வேதத்தில் இவ்வாறு கூறியுளது.

"யத்ர கங்கா சயமுனச யத்ர ப்ராசீ சரஸ்வதீ
யத்ர சோமேஸ்வரோ தேவா
தத்ரமாம்ருதங்க்ருதி;
இந்த்ரோ இந்த்ரவா பரிச்ரவா"

சோமநாதர் கோயிலில் நாங்கள் சிறிதுநேரம் இருந்து "வான்முகில் வழாது பெய்க" என்ற பாடலை மும்முறை கூறி வழுத்தினோம். அதற்கு அருகில் உள்ள சித்தேசர், கௌரிசங்கர், நர்மதேசுரர் என்ற மூர்த்திகளைத் தெரிசித் தோம்.

அங்கிருந்து நதிக்கு வந்து மீண்டும் படகில் ஏறி அக் கரைபோய், கரையில் அசோகரும், அவருக்குப் பின் அக்பரும் கட்டிய கோட்டையைப் பார்த்தோம். அதற்குள் அக்ஷயவடம்—(என்றும் அழியாத ஆலவிருட்சம்) என்ப தனையும், வாசுகி முதலிய திருவுருவங்களையும் தெரிசித் தோம். பின்னர் புகைவண்டி நிலையத்தை யடைந்தோம்.

பிரயாகையில் தருமசாலைகள் நிரம்ப இருக்கின்றன. மாசி மகத்தின்போது பெரிய விழா நடைபெறும். அப் போது இலட்சக்கணக்கில் மக்கள் கூடுவார்கள். 12 ஆண் டுகட்கு ஒருமுறை கும்பமேளா நடக்கின்றது. இந்தத் தலத்தைப் பற்றி மச்சபுராணம், ரகுவம்சம், லிங்கபுராணம் முதலிய பல நூல்கள் புகழ்ந்திருக்கின்றன.

பிறகு இரவு 9-45 மணிக்கு எங்கள் வண்டி புறப் பட்டது.

## சித்திரகூடம்

ஜய - கார்த்திகை 26 (11—12—54)

வழியில் மணிக்பூர் சந்திப்பில் நீராடி வண்டியிலேயே வழிபாடு செய்துகொண்டோம். காலை 9-45 மணிக்குச் **சித்திரகூடம்** என்ற புகைவண்டி நிலையத்தை யடைந்தோம். அங்கிருந்து சித்திரகூடமலை 6 கல். வண்டி முதலியவை ஒன்றும் இங்கு இல்லாமையால் அடுத்த புகைவண்டி நிலையம் **கர்வீ** என்பதற்குப் போன் செய்து பஸ் ஒன்றைத் தருவித்து ஆள் 1-க்கு 0-10-0 தந்து சித்திரகூட மலைக்கு அருகில் உள்ள **சீதாபூர்** சென்றோம். சித்திரகூடம் போகின்றவர்கள் சித்திரகூடத்தில் இறங்காமல் அதற்கு அடுத்த **கர்வீ** என்ற புகைவண்டி நிலையத்தில் இறங்கினுல் வண்டி வசதிகள் உண்டு.

**சீதாபூருக்குப்** பகல் 1 மணிக்குச் சென்று **மந்தாகினி** என்ற நதியில் **ராமகாட்** என்ற துறையில் முழுகினோம். அதன் கரையில் உள்ள சிறு கோயில்களைத் தெரிசித்தோம். அங்கிருந்து சுமார் 1½ கல் தொலையில் சித்திரகூட மலை யுளது. நல்ல வளமான மலை. மலையைச் சுற்றி 350 கோயில்கள் இருக்கின்றன. சுற்றிவர 5 கல். காமதா பர்வதம் என்றும் அதற்கு ஒரு பேருண்டு. அதனை நாங்கள் வலம் வந்தோம். தென் திசையில் ஒரு பெரிய கோயில் உளது. அங்குதான் ஸ்ரீராமர் பரதர் லட்சுமணர் சத்ருக்னர் முதலிய எல்லோரும் சந்தித்தது. அங்கு சிறு சிறு மண்டபங்களை எழுப்பியுள்ளார்கள்.

அதற்கு எதிரில் ஒரு சிறு மலையுண்டு. அதில் ஏறி லட்சுமணர் பரதருடைய வருகையை அறிந்தார். அம் மலைக்குமேலும் கோயிலுண்டு.

இம்மலையில் பாரத்வாஜர், அத்திரி, வால்மீகி முதலிய முனிவர்கள் இருந்து தவஞ் செய்தார்கள். துளசிதாசர்

இங்கிருந்து இத்தலத்தின் பெருமையை விளக்கம் புரிந்தனர். பல சித்ரமான தன்மைகள் இருப்பதனுல் சித்ர கூடம் எனப்பட்டது.

மலையை வலம் வருவதனுல் ஒவ்வொரு அடியிலும் முற்பிறப்பிற் செய்த வினைகள் தொலைகின்றன.

மந்தாகினி நதிக்கு கிழக்கே 12 கல் சென்று கோடி தீர்த்தம், தேவாங்கனு, ஹநுமான்தாரா முதலியவைகளைப் பார்க்கவேணும்.

மந்தாகினி நதிக்குத் தெற்கே 10 கல் சென்று ராம தாபம், கேசவகட், பரமோதவனம், ஜானகீ குண்டம். ஸிரஸாவனம், படிகசிலை, அநசூய தீர்த்தம் இவைகளைக் காணவேண்டும்.

நிருதிதிக்கில் 10 கல் சென்று குப்த கோதாவரி, கைலாசபர்வதம் இவைகளைக் காணவேண்டும்.

வடக்கே 12 கல் சென்று பரதமந்திரம், ராமசயனம் முதலியவைகளைக் காணவேண்டும்.

குறைந்த பட்சம் 5 நாள் தங்கி இவைகளை வலம் வந்து பார்க்கவேணும்.

ஸ்ரீராம நவமியின்போது இங்கு ஏராளமான மக்கள் கூடுகின்ருர்கள். பலநாள் இருந்து வலம் வந்து நிதானமாகச் சுற்றிப் பார்க்கத் தக்க இம்மலையை நாங்கள் ஒரே நாளில் முடிந்தமட்டும் தெரிசித்துத் திரும்பினேம்.

இரவு 2-45 மணிக்கு எங்கள் வண்டி காசியை நோக்கிப் புறப்பட்டது.

## காசி

காசியை நினைக்க முத்தி காசியென் றுரைக்க முத்தி
காசியைக் காண முத்தி காசியில் வசிக்க முத்தி
காசியைச் சூழ முத்தி காசியைக் கேட்க முத்தி
காசியில் வசித்தோர் தம்மைக் கண்டுதொழ்ந் திடுதன்முத்தி.

புண்ணியத் தலங்கள் எல்லாவற்றிலும் தலைசிறந்த முடிமணி போன்றது **காசி**. காசி யென்ற சொல்லுக்கு ஒளி மயமானது என்பது பொருள். இத்தலம் மிகவும் பழமை யானது; கங்கா நதிக்கு மேல் கரையில் மிகவும் அழகாக வும் விசாலமாகவும் அமைந்துளது. காசிக்குத் தெற்கே 20 மைலிலிருந்து வடக்கே 20 மைல் வரை **கங்காநதி உத்தர வாஹினியாக** (தெற்கிலிருந்து வடக்குநோக்கி) ஓடுகின்றது. ஹரித்துவாரத்தில் மிக வேகமாக ஓடுகின்ற கங்காநதி விஸ்வநாதர் எழுந்தருளிய காசியில் கணவனுக்கு அரு கில் நடக்கும் பயபக்தியுள்ள கற்புடைய பெண்மணியைப் போல் மெல்லச் செல்லுகின்றது. நதி சற்று வளைந்து போவதனால் கரையிலுள்ள 64 கட்டங்களையும் ஒருமிக்க ஒரே இடத்திலிருந்து பார்க்கலாம்.

காசிக்கு வடக்கே வரண என்ற ஆறும், தெற்கே **அசி** என்ற ஆறும் கங்கையில் வந்து சங்கமம் ஆகின்றது. இந்த இரு ஆறுகளுக்கு இடையே இத்தலம் அமைந் திருப்பதனால் **வாரணசி** என்ற பேரும் இதற்கு உண்டு. எல்லாம் வல்ல இறைவனாகிய சிவபெருமான் இங்கு மகிழ்ச்சியுடன் தங்கி யிருப்பதனால் **ஆனந்தவனம்** என்றும், சர்வ சங்கார காலத்தில் மாலயனாதி வானவர் யாவரும் முடிந்த இடம் ஆதலின் **மகாமயானம்** என்றும் கூறுவர்.

காசி என்பது ஆக்ஞா ஸ்தானம் ஆகும். அது புருவ நடு என அறிக. புருவ நடுவில் அறிவின் விளக்கம் அமைந்துளது. அதைக் குறிப்பிக்கும் பொருட்டே அங்கு திலகம் வைக்கும் வழக்கம் ஏற்பட்டது. புருவநடுவில் நாட்டத்தை வைத்து ஏனைய உலக நாட்டங்களை மறந்து விடவேண்டும். அதுவே இறப்பதாகும். காசியில் சென்று இறந்தவர் முத்தி பெறுவர் என்பதின் தத்துவம் அது என அறிக.

முத்தித்தலம் ஏழனுள் ஒன்று **காசி.** முதன்மை யானதுமாகும். இங்கு இறந்த பசு,பறவை,மனிதர் முதலிய எல்லா உயிர்களுக்கும் இறைவன் அவ்வுயிர்களின் செவியில் **தாரக**(ஓம்)மந்திரத்தை உபதேசித்து முத்தியருளுவன்.

இத்தலே யெய்தி யிறக்குநர் யாரு மிளைப்பாற
உத்தரியங் கொடு மாதுமை வீசிட உமையோர்பால்
வைத்தவரும் பொருள்மே வருதாரக மறையோதி
முத்தியளித்திடு மிப்பதி யார்விட முயல்வாரே.

தாரகம் என்ற சொல்லுக்கு தாண்டச் செய்வது என்பது பொருள். பிறவிப் பெருங்கடலைத் தாண்டச் செய்வதால் பிரணவம் தாரகம் எனப்படும். "தாரகப் பொருளாய் நின்றான்" எனவரும் கந்தபுராண திருவாக்காலும் அறிக. இவ்வண்ணம் இத்தலம் தன்பால் இறந்தோர்க்கு அன்பால் முத்தி யருளுவதால் **அவிமுக்தம்** எனப்படும்.

ஏனைய தலங்களில் பலகாலம் வசித்து பலப்பல அறஞ் செய்ததனால் வரும் பயன் இக்காசியில் ஒருகணம் வசித்து ஒரு சிறிது அறஞ் செய்தார்க்கு உண்டாகும்.

விசுவம்—எல்லாம். எல்லாத்தலங்களிலும் எல்லா மூர்த்திகளுமாய் இங்குள்ள மூர்த்தி விளங்குவதனால் இவருக்கு **விசுவநாதர்** என்ற சிறப்புடைய நாமம் அமைந்துளது. நதிகளிற் சிறந்தது கங்கை; தலங்களிற் சிறந்தது காசி; தீர்த்தங்களிற் சிறந்தது மணிகர்ணிகை; மண்டபங்களிற் சிறந்தது முத்தி மண்டபம்; மூர்த்திகளிற் சிறந்தது விசுவலிங்கம்.

"மணிகன் னிகையிற் சிறந்தோங்கு
மலர்வாவியும் பொன் வயங்குகதிர்
அணிசேர் முத்தி மண்டபத்தை
நிகர்மண் டபமும் அலங்கு துத்திப்
பணவா ளரவின் முடிகிடந்த
பாரில் விசும்பிற் காசிநகர்க்
கிணையா னகரு மெய்ஞ்ஞான்று
மில்லை யில்லை யில்லையால்"

பனூரன் என்ற அரசன் இந் நகரத்தை பிற்காலத்தில் புதுப்பித்தபடியால் பனூரஸ்என்றபெயரும் வழங்கலாயிற்று.

விசுவநாதர் 12 ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று.

## ஸ்லோகம்

ஸௌராஷ்ட்ரே ஸோமநாதஞ்ச
ஸ்ரீஸைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யாம் மஹாகாளம்
ஓங்கார மமலேஸ்வரம்
பரஸ்யாம் வைஜநாதஞ்ச
டாகின்யாம் பீமசங்கரம்
சேதுபந்தேது ராமேசம்
நாகேசம் தாருகாவனே
வாராணஸ்யாம்து விஸ்வேசம்
த்ரயம்பகம் கௌதமீதடே
ஹிமாலயேது கேதாரம்
குஸ்ருணேசம் சிவாலயே
ஏதானி ஜோதிர்லிங்கானி
ஸாயம் ப்ராத படேன்னர:
ஸப்தஜன்மக்ருதம் பாபம்
ஸ்மரணேன விநஸ்யதி

இதிதுவாதச ஜோதிர் லிங்கானி.

## ஜோதிர் லிங்கங்கள் 12

1. **சோமநாதர்**

ஸௌராஷ்டிர தேசத்தில் **வீரவால்** புகை வண்டி நிலையத்திற்கு 3 கல் தொலையில் உள்ள பிரபாச பட்டினத்தில் உள்ளது.

2. **மல்லிகார்ஜுனம்**

கர்நூல் மாவட்டத்தில் நந்தியால் புகைவண்டி நிலயத்திலிருந்து 32 கல் ஆத்மகூர்; அங்கிருந்து 28கல் பெத்தச் செருவு; அங்கிருந்து 14 கல் **ஸ்ரீசைலம்.** அங்குள்ள மூர்த்தி மல்லிகார்ஜுனம்.

3. த்ரியம்பகம்

நாசிக் பஞ்சவடியிலிருந்து 18 கல் தொலையில் உள்ள சிவமூர்த்தி.

4. மகாகாளர்

உஜ்ஜைனியில் உள்ள சிவமூர்த்தி.

5. ஓங்காரம்

உஜ்ஜைனியிலிருந்து 90 கல் தொலையில் உள்ள **ஓங்காரேஸ்வரரோட்** என்ற புகைவண்டி நிலையத்திலிருந்து 7 கல் தொலையில் நர்மதைக் கரையிலுள்ளது.

6. பீமாசங்கரர்

பூனாவுக்கு அருகிலுள்ள நேரளம் புகைவண்டியிலிருந்து 8 கல் தொலையிலுள்ள காண்டசத்திலிருந்து 4 கல் மலைமீது உள்ள சிவமூர்த்தி.

7. ராமேச்சுரம்

தனுஷ்கோடிக்கு அருகிலுள்ளது.

8. குஸ்ருணேஸ்வரம்

எல்லோரா குகைக்கு அருகிலுள்ளது.

9. நாகநாதர்

சவுண்டி என்ற புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே 14 கல் தொலையிலுள்ளது.

10. வைத்தியநாதர்

பாட்னா-ஜஸித் சந்திப்பிற்கு 4 கல் தொலையில் வைத்தியநாதம் என்ற புகைவண்டி நிலையத்தின் அருகிலுள்ளது.

11. கேதாரேச்வரர்

ஹிமாலயத்திலுள்ளது.

12. விசுவேச்வரர்

காசியில் உள்ளது.

## முத்தித் தலங்கள் 7

காஞ்சி, மதுரா, மாயா (ஹரித்துவாரம்), அவந்திகா, (உஜ்ஜைனி), அயோத்தி, துவாரகை, காசி.

இந்த முத்தித்தலங்கள் ஏழனுள் காசி முதற் பீடமாகிய முகபீடம் ஆதலால் **கௌரீமுகம்** எனப்படும்.

## மணிகர்ணிகை

காசிக்குப் பகீரதனால் கங்கை வருவதற்கு முன்னர் திருமால் சக்கரத்தால் ஒரு திருக்குளத்தை உண்டாக்கி அதன் கரையில் சிவபெருமானை வேண்டி மாதவம் புரிந்தனர். விசுவேசுரர் அவர்முன் தோன்றி அவருடைய தவத்தை மெச்சி சிரக்கம்பம் செய்தனர். அத் தலையசைவினால் அவருடைய திருச்செவியிலுள்ள குண்டலத்தின் **நாகமணி** நழுவி அக்குளத்தில் விழுந்தது. அதனால் அக்குளத்திற்கு **மணிகர்ணிகை** என்றபேர் ஏற்பட்டது. சக்கரத்தினால் உண்டாக்கிய காரணத்தால் **சக்கரதீர்த்தம்** எனவும் பேர் பெறும். பின்னர் இம் மணிகர்ணிகையில் கங்கையும் கலந்து அதன் மகிமை உயர்ந்தது. இதில் உச்சிப்பொழுதில் முப்பத்து முக்கோடி தேவர்களும் நீராட வருவர். அதனால் இதில் உச்சியில் நீராடுவது உத்தமம். காசியிலுள்ள எல்லா தீர்த்தங்களிலும் இது சிறப்புடையது.

மிருகண்டேய முனிவர் இதில் முழுகி மகப்பேறு பெற்றனர். மார்க்கண்டேயர் இம் மணிகர்ணிகையில் நீராடி விசுவேச்வரருடைய திருவருளைப்பெற்று மறலியை வெல்லும் திறலினைப் பெற்றனர்.

## ஞானவாவி

ஈசான உருத்திரர் இங்கு தவஞ் செய்து தம் சூலத்தால் ஒரு கிணற்றை உண்டாக்கி அத் தீர்த்தத்தினால் விசுவநாதரை அபிஷேகித்து வழிபட்டனர். விசுவநாதர் அவருக்கு முன் தோன்றி அருள்புரிந்து அக் கிணற்று

நீரில் முழுகுவோர் பரமஞானத்தைப் பெறுவர் என்று வரமளித்தனர். அதனால் அக்கிணறு **ஞானவாவி** எனப் பெற்றது. இது விசுவநாதர் திருக்கோயிலுக்கு அருகில் உள்ளது.

## விசுவநாதர்

மிகப் பழமையானதும், மிகப் புனிதமானதும், மூவரும் தேவரும், முனிவரும், சித்தரும், முத்தரும் பூசித்து பேறு பெற்ற மூர்த்தி **விசுவேச்வரர்.**

விசுவேச்வரருடைய ஆலயத்தை முகம்மதியமன்னன் இடித்து அவ்விடத்தில் மசூதி புதுக்கினன். அம் மசூதியில் பழைய கோயிலின் சின்னங்கள் இன்றுங் காண இருக்கின்றன. அப்பொழுது விசுவலிங்கத்தை **ஞான வாவியில்** மறைத்து வைத்தனர். பின்னர் கோயில் முக்கிய குருக்களான நாராயணப் பட்டர் என்பவருக்கு இறைவன் கனவில் அருளிச் செய்தவாறு அருகில் ஒரு சிறு இடத்தில் சிறிய கோயிலை அமைத்து விசுவலிங்கத்தைப் பிரதிஷ்டை புரிந்தார்கள்.

விசுவலிங்கம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகின் கருவூலமாக விளங்குகின்றது. மேற்கு நோக்கிய மூர்த்தி. நான்கு பக்கங்களிலுமிருந்து தெரிசிக்கலாம். மரகத நிறமாக பளபளவென்று திகழ்கின்றது. சிவலிங்கத்தின் முடியில் அருச்சுனன் அடித்த வில்லின் தழும்பு காணப்படுகின்றது. கோயிலின் ஈசான மூலையில் வெள்ளித் தகடு பதித்த தொட்டியில் தங்க ஆவுடையாருக்கு இடையில் சிவலிங்கம் விளங்குகின்றது.

கோயில் முழுவதும் பளிங்குக் கற்களால் புதுக்கப் பெற்றிருக்கிறது. கோயிலில் பல சிவலிங்கங்கள் இருக்கின்றன. கோயிலின்மேல் தங்கச் சிகரங்கள் இரண்டு பொலிகின்றன, வழிபாட்டுக்குச் செல்லுகின்ற அடியார்கள்

அனைவரும் பூவும், நீரும் விசுவநாதரின்மீது இட்டு பக்திப் பரவசத்துடன் வணங்குகின்றனர்.

காலை 4 மணிமுதல் இரவு 10 மணி வரையில் கோயில் திறந்திருக்கிறது. உச்சிக்கால பூஜையும், அர்த்த சாம பூஜையும் நகர தனவணிகர்களின் உபயமாக மிகவும் சிறப்பாகவும், அமைதியாகவும் நடைபெறுகின்றன. மாலை 7 மணி முதல் 8 மணிவரை சப்தரிஷி பூஜை யென்று ஏழு அந்தணர்கள் அமர்ந்து, வேத கீதங்களைச் சொல்லி ஆராதனை செய்கின்ற காட்சி உள்ளத்தை உருக்கும். பூசிக்கும் அர்ச்சகர் மிக்க பயபக்தியுடனும், நிதானமாக வும் அபிஷேக ஆராதனை செய்கின்ற காட்சி மாட்சிமை யுடையது.

## முத்தி மண்டபம்

விசுவநாதர் கோயிலுக்கு அருகிலுள்ள **ஞானவாவிக்கு** மேற்கில் இம் மண்டபம் அமைந்திருக்கின்றது. இதிலிருந்து திருவைந்தெழுத்தை ஜெபித்தால் எண்ணில்லாத பலன்கள் உண்டாகும். சித்தி புத்திகளும் உண்டாகும்.

## அன்னபூரணேச்வரி

விசுவநாதர் ஆலயத்துக்கு அருகில் அன்னபூரணி அம்மை ஆலயம் இருக்கின்றது. அம்பிகையின் திருவுருவம் மிகவும் அழகியது. மேற்கு நோக்கிய சந்நிதி. சுற்றுப் பிரகாரத்தில் பலர் இருந்து சதா பாராயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். மற்றும் பிரகாரத்தில் பற்பல மூர்த்திகளின் திருவுருவங்கள் காணப்படுகின்றன. விசுவநாதர் கோயிலுக்கும், அன்னபூரணி ஆலயத்துக்கும் இடையே **அட்சய வடம்** (ஆலமரம்) என்பதனையும் அவசியம் தெரிசிக்க வேண்டும்.

## துண்டிராஜ விநாயகர்

அன்னபூரணி ஆலயத்திற்கு அருகில் துண்டிராஜ விநாயகர் ஆலயம் தெற்கு நோக்கிச் சிறியதாக அமைந்

துளது. செந்தூர நிறமுடைய திருவுருவம். வரதமான மூர்த்தி.

### சாட்சி விநாயகர்

துண்டிவிநாயகர் ஆலயத்துக்கு அருகில் கிழக்கு முகமாக உள்ள ஆலயம். மூர்த்தி பெரிதாகவும் அழகாகவும் விளங்குகின்றது.

### விசாலாட்சி

விசுவநாதர் ஆலயத்துக்குக் கிழக்கே ஒரு பர்லாங்கு தூரத்தில் விசாலாட்சியம்மை கோயில் வடக்கு நோக்கியுளது. நகர தனவணிகர்கள் இக்கோயிலைப் புதுக்கியுள்ளார்கள். விசாலாட்சியம்மையின் திருவுருவம் சிறியதாக இருக்கின்றது. உத்ஸவமூர்த்தி மிகவும் அழகியது. மதவெறி மிக்க வேற்றரசர்களின் ஆட்சி நிகழ்ந்த காலத்தில் அச்சத்தினுல் மூர்த்திகளை ஆங்காங்கு அஞ்ஞாதவாசம்போல் ஒளித்தும், மறைத்தும் வைத்து வழிபட்ட காரணத்தினுல் ஆங்காங்குள்ள சிறந்த மூர்த்திகளின் கோயில்கள் தென்னுட்டிலுள்ளவாறு விசாலமின்றி சுருங்கிய இடத்தில் அமைந்திருக்கின்றன.

### நித்திய யாத்திரை

(பத்து மூர்த்திகளின் தேரிசனம்)

விசுவேசம், மாதவம், துண்டிம்,
தண்டபாணிஞ்ச, பைரவம்,
வந்தே காசி, குஹாம், கங்காம்,
பவானி, மணிகர்ணிகாம்.

1. விசுவேசம்

காலையில் மணிகர்ணிகையில் நீராடி, தூய்மையுடன் சென்று விசுவநாதரை வணங்க வேண்டும்.

2. மாதவம்

பஞ்ச கங்கா தீர்த்த கட்டத்திற்கு அருகில் உள்ளது. விந்துமாதவர் என்று இவருக்குப் பேர். இராமேசுரத்தில்

சேதுமாதவர்; பிரயாகையில் வேணி மாதவர்; காசியில் விந்து மாதவர். விந்து மாதவர் பூசித்த சிவலிங்கம் அருகில் உள்ளது.

3. துண்டி

முன் சொன்ன அமைப்பில் உள்ள விநாயகர்.

4. தண்டபாணி

இது விசுவாநாதர் ஆலயத்திற்கு வடகிழக்கில் ஒரு கல் தொலையில் உள்ளது. சிறுகோயில். ஒரு தூண்மீது சிறிய உருவம் உளது. அருகில் சிவலிங்கங்களும் உள்ளன.

5. பைரவம்

தண்டபாணி கோயிலுக்கு அருகில் உள்ள கால பைரவர் சந்நிதானம். இவர் காசிக்குக் காவலர். இங்கு ரட்சையாக கறுப்புக் கயிறு படைத்து கையில் கட்டிக் கொள்ளவேண்டும். அதனைக் காசிப் பிரசாதமாகக் கொணர்ந்து அன்பர்கட்கு வழங்குதல் மரபு. வைரவருடைய அநுமதி பெற்றுக்கொண்டு காசியை விட்டுப் புறப்படவேணும்.

6. வங்தேகாசி

பைரவர் சந்நிதியின் மேற்கே சிறிது தொலையில் ஒரு பெரிய ஆலமரத்தின் கீழுள்ள ஒரு சிறிய தேவி ஆலயம்.

7. குஹா

வந்தேகாசிக்கு மேற்கே சிறிது தூரத்தில் உள்ளது. ஒரு குகையும் அதற்கு அருகில் சிவலிங்கமும் உளது.

8. கங்கா

பகீரதன் கங்கை கொணருமுன் இருந்த குளம். அதனால் இது **ஆதிகங்கை** எனப்படும். இதன் மேல் கரையில் மூன்று தேவிகளை நிறுவியுள்ளனர்.

9. **பவானி**

அன்னபூரணி சந்நிதி.

மணிகர்ணிகைக் கட்டத்திலுள்ள தேவியாலயம் என்பாரும் உண்டு.

10. **மணிகர்ணிகா**

கங்கா நதியின்கண் உள்ள மணிகர்ணிகா என்ற தீர்த்தகட்டம்.

இந்தப் பத்து இடங்களையும் மேலே கண்ட சுலோகத்தில் வந்த வரிசைப்படியோ, அல்லது, முன் பின்னாக அனுகூலப்படியோ ஒரே நாளில் தெரிசிக்க வேண்டும். அதற்கு நித்திய யாத்திரை என்று பேர்.

## பஞ்சதீர்த்த யாத்திரை

காசியிலுள்ள 64 தீர்த்த கட்டங்களிலும் நீராடுவது கடினம். ஆதலினால் அடியிற்கண்ட ஐந்து தீர்த்தகட்டங்களில் ஒரேநாளில் முழுகுவது பஞ்ச தீர்த்த யாத்திரையாகும். ஓடத்தில் சென்று முழுகுவது எளிது.

1. **அஸிசங்கம கட்டம்**

எல்லாக் கட்டங்களுக்குந் தெற்கேயுள்ள அஸி என்ற சிறு ஆறு கங்கையுடன் கலக்கும் இடம். இங்கு நீராடி கரையில் உள்ள **அஸிசங்கமேஸ்வரர்** என்ற சிவமூர்த்தியைத் தெரிசிக்கவேண்டும்.

2. **தசாசுவமேத கட்டம்**

இங்கு நான்முகக் கடவுள் பத்து அசுவமேத யாகம் புரிந்தனர். அதனால் தசாசுவமேத கட்டம் எனப் பேர் பெற்றது. இங்கு நீராடி கரையிலுள்ள **சூலடங்கேஸ்வரர்** என்ற சிவமூர்த்தியைத் தெரிசிக்கவேண்டும்.

3. **வருண சங்கம கட்டம்**

எல்லாக் கட்டங்களுக்கும் வடக்கே வருணை என்ற ஆறு கங்கா நதியுடன் கலக்கும் இடத்தில் உள்ளது.

அங்கு நீராடி கரையில் உள்ள ஆதிகேஸ்வரரையும், வருணேஸ்வரரையும் தெரிசிக்கவேண்டும்.

4. பஞ்ச கங்கா கட்டம்

இங்கு கங்கையுடன் யமுனே, சரஸ்வதி, சிரணு, தூதபாய் என்ற நதிகள் அந்தர்முகமாக வந்து கூடுவதனல் இதற்குப் பஞ்ச கங்கா கட்டம் என்று பேர். இங்கு நீராடி கரையிலுள்ள **விந்துமாதவரையும்** அவர் அருகிலுள்ள **பஞ்சகங்கேஸ்வரரையும்** தெரிசிக்க வேண்டும்.

5. மணிகர்ணிகா கட்டம்

இது மேலே கூறிய மணிகர்ணிகைஎன்ற திருக்குளத்திற்கு நேரேயுள்ள கங்கை நதியின் துறை. இங்கு நீராடி கரையிலுள்ள மணிகர்ணிகேச்வரரையும் மற்றொருபுறம் உள்ள தேவியாலயத்தையும் சேவிக்கவேண்டும். இந்த ஐந்து இடங்களில் நீராடியபின் நேரே விசுவநாதர் ஆலயஞ் சென்று விசுவேசரைத் தெரிசிக்கவேண்டும்.

அஸி கட்டத்திலிருந்து வருணசங்கம கட்டம்வரை சுமார் 6 கல் தொலே. ஓடத்தில் சென்று ஐந்து இடங்களிலும் நீராடி வர சுமார் 5 மணி நேரம் செல்லும். ஆதலால் கூடுமானவரை காலேயிலேயேசெல்லுவது நலம்.

## உத்தர யாத்திரை

விசுவநாதர் திருக்கோயிலுக்கு வடக்கேயுள்ள கோயில்களேத் தெரிசிப்பது உத்தர யாத்திரையாகும்.

விசுவநாதர் கோயிலுக்கு வடக்கே கங்கைக் கரையில் **மணிகர்ணிகை** என்ற தீர்த்தக்கரையில் மணிகர்ணிகேச்சுரர் கோயிலும், ஒரு துர்க்கையாலயமும் இருக்கின்றன. அத்துர்க்காதேவி கோயிலின் நான்கு திசைகளிலும் நான்கு சிறு சிவாலயங்கள் இருக்கின்றன.

அதற்கு அருகில் மகாமயானம் உளது. இது அரிச்சந்திரனே விலேக்கு வாங்கிய வீரபாகுவின் மரபினர்க்கு

உரிமையானது. இங்கு எப்பொழுதும் பிணங்கள் வெந்த வண்ணமாகவே யிருக்கின்றன. சிறிதுகூட நாறுவ தில்லை. காசியில் பூவும் பிணமும் நாறுவதில்லை என்று பழமொழி.

அதற்கு அருகில் தாரகேசுரர் கோயில். காசியில் பாண்டவர் காதில் சிவபெருமான் தாரகம் என்ற ஓங்கார மந்திரத்தை உபதேசிக்கின்றனர். அப் பரம்பொருளு டைய கோயில் இது என அறிக.

**சாரநாத்**

காசியின் வடகிழக்கே 6 கல் தொலையில் **சாரநாதம்.** இங்கு கௌதம புத்தர் இருந்து தவஞ்செய்து பலருக்கு உபதேசித்து தமது மதத்தைப் பரப்பினர். பழமையான சின்னங்கள் பல இங்குள்ளன. அவைகள் சரித்திரக் கண் கொண்டு பார்க்கத்தக்கவை.

**மார்க்கண்டேயம்**

அங்கிருந்து 10 கல் தொலையில் மார்க்கண்டேயம் என்ற சிவாலயம் விளங்குகின்றது.

விசுவநாதர் கோயிலுக்கு வடக்கே கங்கைக்கரையில் நேபாள மன்னர் லலிதா கட்டத்தில் நிறுவிய **பசுபதீச்சுரர் கோயில்;** அதற்கு அருகில் உள்ள சாதுக்கள் மடத்தில் **ராஜராஜேஸ்வரி;** அங்குள்ள **பஞ்சமுகலிங்கம்;** அங்கிருந்து சிறிது தூரத்தில் ராமகட்டத்தில் சிம்ம வாகனத்தில் **சங்கடாதேவி;** அதற்கு அருகில் **நீலகண்டமகாதேவர்; தண்டபாணி; காலபைரவர்:** விந்துமாதவர்; **வந்தேகாசி; மிருத்யஞ்ஜயநாதர்;** அதன் அருகில் உள்ள ஞானகூபம்;

வடமேற்கில் **நாககுண்டதீர்த்தம்** உளது. அதன் நீர் சகல விஷயங்களையும் அகற்றும் வன்மையுடையது. அரிச் சந்திரனுடைய புதல்வன் லோகிதாஸனை இங்குதான் அரவந் தீண்டியது. அதனால் அத் தீர்த்தத்தில் முழுகு வோர்க்கு விஷபயம் ஏற்படாது. இது இன்றும் கண்கூடு.

## தட்சிண யாத்திரை

### திலபாண்டீச்சுரர்

விசுவநாதர் கோயிலுக்குத் தெற்கேயுள்ள கோயில்களை வணங்குவது தெட்சிண யாத்திரையாகும். விசுவநாதர் கோயிலுக்குத் தெற்கே சுமார் ஒரு கல் தொலையில் **திலபாண்டீச்சுரர்** என்ற மூர்த்தியுண்டு. பெரிய சிவலிங்கம். திலம் - எள். அது நாள்தோறும் எள்ளத்தனை வளர்வதனால் இப்பேர் உண்டாகியது என்கின்றார்கள். அக்கோயிலுக்குள் **பாதாளேச்சுரர்** என்ற இலிங்கமும் மிக்க பள்ளத்தில் உள்ளது. அங்கேயே ஐயப்பனாலயமும் உளது.

### சிந்தாமணி விநாயகர்

அங்கிருந்து சிறிது தூரத்தில் **சிந்தாமணி விநாயகர்** கோயில் உள்ளது. மூர்த்தி அழகாக அமைந்துளது. வியாசர் கங்கைக்குக் கிழக்காகப் புதியதாக இயற்றிய நகருக்கு இடர் விளைவித்தவர்.

### கேதாரநாதர்

கங்கைக்கரையில் கேதார கட்டத்தின் அருகில் மிக அழகாக உள்ள கோயில். தென்னாட்டுக் கோயில் போல் இது அமைந்துளது. சுவாமி சுயம்பு. காசி மடத்துத் தலைவர்களுடைய கோயில். வழிபாடுகள் அனைத்தும் நன்றாக நடைபெற்று வருகின்றன. ஆதி குமர குருபரர் திருமடம் இதன் அருகில் உள்ளது; இப்போதுள்ள தலைவர் ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் இதனை நன்கு பரிபாலித்துப் பற்பல அறங்கள் செய்கின்றனர். இம்மடத்தில் மார்கழி மாதம் முப்பதுநாட்களிலும், மாசி மாதம் முப்பது நாட்களிலும் ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கும் அடியவர்களுக்கும் அன்னதானம் வழங்குகின்றனர். தமிழ் மறை யோதி சௌராதி சண்டாந்தமாக பூஜை நடக்கின்றது.

உத்சவ மூர்த்திகளும் இங்குள்ளன. பல விழாக்களும் நடைபெறுகின்றன.

**அநுமகாட்**

அதன் அருகில் அநுமார் வந்து சிவலிங்கம் எடுத்த இடமாகிய அநுமகாட் உளது. அதன் அருகில் அநுமார் கோயிலும் உளது.

**அரிச்சந்திரகாட்**

அரிச்சந்திரன் சத்தியத்தின் பொருட்டு வீரபாகு என்ற புலையனுக்கு அடிமையாகி கங்கையில் இருந்த மயானம் இது. இன்றும் இங்கு நாள்தோறும் பல பிணங்கள் எரிகின்றன. அங்கு உயர்ந்த ஒரு மேடைமீது சிவலிங்கம் உளது.

**வராகியம்மை**

விசாலாட்சி கட்டத்திற்கு அருகில் ஒரு சிறு சந்தில் **வராகியம்மை** கோயில் உளது. இதில் விடியற்காலை 4 மணி முதல் 6 மணிவரை பூசை நடைபெறுகின்றது. பொழுது விடிவதற்குள் பூட்டி விடுகின்றார்கள். பிறகு மறுநாள் விடியற்காலையில்தான் பூசை. விடியற்காலை நீராடி மிக்க தூய்மையுடன் சென்று தெரிசிக்கவேண்டும். மூர்த்திகரம் மிக்க இடம்.

**துர்க்காதேவி**

சுமார் 1½ கல் தொலையில் இத் **துர்க்காதேவி** ஆலயம் இருக்கின்றது. வரதமானதேவி. கோயிலுக்கு அருகில் திருக்குளமும் உண்டு.

**கௌடியம்மை**

துர்க்காதேவி கோயிலுக்கு அருகில் கௌடியம்மை கோயில் உளது. சிறு கோயில். இங்கு செல்வோர் கௌடி (பலகறை) வாங்கி அம்பிகைக்கு முன் போட்டு

"காசிக்கு வந்த பலன் எனக்கு; கௌடி உனக்கு" என்று கூறி வணங்குவர்.

இத்தேவி ஒரு காலத்தில் கண்ணுதற் கடவுளைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தனள். கரைமிடற்றண்ணல் அவள் முன் தோன்றி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டனர். அவள், "சுவாமி! காசியில் வந்து தேவரீரைச் சேவித்தோர்கள் அடையும் நற்பயன் அனைத்தும் எனக்கு வரவேண்டும்" என்று கேட்டாள். இறைவன் "அது முறையன்று. காசிக்கு வந்தோர் உன்னைக் காணாது போவாராயின் அவர்களுடைய புண்ணியம் உனக்கு வரட்டும். கௌடி வாங்கி உன்னைச் சேவித்தோர் முழுப்பயனையும் பெறுவாராக" என்று வரமளித்தனர்.

## சங்கடவிமோசனர்

கௌடியம்மை கோயிலுக்கு அருகில் **சங்கடவிமோசனர்** என்ற அநுமந்தர் கோயில் உளது. அதில் ராம லக்ஷ்மணர் சீதை திருவுருவங்களும் உள்ளன.

சங்கரர்மடம்; சிருங்ககிரிமடம், கண்ணப்பசுவாமி மடம் என்ற திருவாவடுதுறை மடம், சங்கமபாவாமடம் என்ற வீர சைவமடம் முதலிய மடாலயங்கள் இருக்கின்றன. எங்குள்ள வீர சைவர்களும் 5 ரூபாய் முதல், 100 ரூபாய் வரை தங்கள் ஆற்றலுக்கு ஏற்றவாறு அனுப்பினால் இறந்தவர் பேரால் ஒரு லிங்கம் நிறுவிப் பூசிக்கின்றனர். சிவராத்திரி வழிபாடுசிறப்பாக இங்கு நடைபெறுகின்றது.

**நகரத்தார்கள் மடம்** விசாலமாக உளது. எல்லா வசதிகளும் இருக்கின்றன. மடத்துக்குள் சிறு கோயிலும் உளது. மூர்த்திகள் யாவும் அழகாக அமைந்துள்ளன.

## சர்வகலாசாலை

பண்டிதமாளவ்யா அவர்களின் நன்முயற்சியால் தோற்றுவித்த பல்கலைக்கழகம் மிகப் பரந்த இடத்தில்

பெருஞ்சிறப்புடன் 8000-ம் மாணவர்கள் படிக்கின்ற வகையில் விளங்குகின்றது.

இன்னும் பல கலைக் கோயில்களும், கபீர்தாசர், துளசிதாசர் முதலிய ஆன்ரேூர்களின் மடாலயங்களும், பலப்பல ஆலயங்களும், தருமசாலைகளும் இருக்கின்றன. எண்ணில்லாத சிவலிங்கங்கள் எங்கும் காணப்படுகின்றன. அதனுல் '**காசி வாசமோ ஊசிவாசமோ**' என்ற முதுமொழி ஏற்பட்டது. இங்கு வசிப்போர் மிக்க பயபக்தியுடன் இருக்க வேண்டும். எங்கும் சிவலிங்கங்கள் நிறைந்த சிவராஜதானியாதலால் அறிந்தும் அறியாமலும் ஏதாவது பாவங்கள் நிகழக்கூடும்; ஆதலினுல், யாத்ரீகர்களும், காசியில் வசிப்போர்களும் ஆண்டுக்கு ஒரு முறை **பஞ்சக்ரோச யாத்திரை புரிய வேண்டும்.**

## 64 கட்டங்கள் (கங்கைநதியின் துறைகள்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அஸிசங்கம | காட் | 17 | க்ஷேமேசுவர | காட் |
| 2 | லோலார்க | ,, | 18 | மானஸரோவர | ,, |
| 3 | துளசிதாஸ | ,, | 19 | நாரத | ,, |
| 4 | ஜானகி | ,, | 20 | அன்னபூரணு | ,, |
| 5 | பார்சுவநாத | ,, | 21 | பாண்டேய | ,, |
| 6 | சிவாலய | ,, | 22 | சதுர்சஷ்டி | ,, |
| 7 | நிரஞ்சன | ,, | 23 | தண்டி | ,, |
| 8 | பிரமேந்திர | ,, | 24 | ராணுமஹால் | ,, |
| 9 | ஹநுமந்த | ,, | 25 | முன்ஷி | ,, |
| 10 | ஹரிச்சந்திர | ,, | 26 | அஹல்யாபாய் | ,, |
| 11 | லல்லி | ,, | 27 | சீதளா | ,, |
| 12 | சிந்தாமணி | ,, | 28 | பிரயாக | ,, |
| 13 | ராணி | ,, | 29 | தசாசுவமேத | ,, |
| 14 | கேதார | ,, | 30 | அசுவ | ,, |
| 15 | சௌகி | ,, | 31 | கிடிகீ | ,, |
| 16 | ருக்மாங்கத | ,, | 32 | மான்மந்திர | ,, |

33 திரிபுரசுந்தரி காட்
34 விசாலாட்சி ,,
35 ஜராசந்தேசுவர ,,
36 லலிதா ,,
37 கங்காகேசவ ,,
38 பிரம்மநாள் ,,
39 மஹாமயான ,,
40 சித்திவிநாயக ,,
41 மணிகர்ணிகா ,,
42 தத்தாத்ரேய ,,
43 சேந்திய ,,
44 சங்கடாதேவி ,,
45 யமேசுவர ,,
46 கங்காமஹால் ,,
47 அக்னீச்வர ,,
48 ராமா ,,
49 லட்சுமணபாலா காட்
50 மங்களாகௌரி ,,
51 பஞ்சகங்கா ,,
52 பிந்துமாதவ ,,
53 துர்க்கா ,,
54 பிரம்ம ,,
55 சத்திர ,,
56 ராஜமந்திர ,,
57 லால் ,,
58 கௌ ,,
59 நாராயண ,,
60 திரிலோசனேசுர ,,
61 பிரஹலாத ,,
62 ராஜ ,,
63 கட்கவிநாயக ,,
64 வருணசங்கம ,,

---

**ராம்நகர்**

காசி நகரின் தென்புறத்தில் அஸிசங்கம கட்டத்திற்கு எதிரில் 1 கல் தெற்கில் கங்கா நதிக்குக் கீழ்க்கரையில் **ராம்நகர்** இருக்கின்றது. இங்கு போக வேண்டியவர்கள் ஓடத்தில் சுகமாகப் போகலாம். இங்கே காசிமன்னர் கோட்டையும் அரண்மனையும் இருக்கின்றன. அரண்மனையின் அருகில் கங்கைக்கரையில் வியாசர் பூசித்த சிவலிங்கம் உளது. அதன் அருகில் சுகமுனிவர் பூசித்த சிவலிங்கமும் உளது. அதற்கு அருகில் ராமலிங்கம் இருக்கின்றது.

**வியாசகாசி**

ராம் நகருக்குக் கிழக்கே, (காசிக்கு எதிர் கரையில்) 2 கல் தொலையில் வியாசகாசி இருக்கின்றது.

வியாசமுனிவர் முன் ஒரு சமயத்தில் கங்கைக்குக் கீழ்க்கரையிலே காசிக்கு எதிராகக் காசியைப் போல் ஒரு நகரை உண்டு பண்ணினர். காசி நகருக்குப் போலி ஒன்று இருக்கக் கூடாது. எது காசி என்று அறியாமல் மக்கள் இடர்ப்படுவர் என்று வருந்திய தேவர்கள் சிந்தாமணி விநாயகரை வேண்டினர்கள். சிந்தாமணி விநாயகர் மறையவர் சிறுவனைப்போல் வடிவெடுத்து வியாசரிடம் போய் புதிய காசியின் பெருமையை வினவலாயினர். வினவிய வினக்களுக்கெல்லாம் வியாசர் விடை கூறி வந்தார். முடிவில் ஒரு விஷயத்தைப்பற்றியே பலமுறை கேட்டார். வியாசருக்கு வெகுளி வந்தது. அச் சமயத்தில் "ஸ்வாமி! காசியில் இறந்தால் முத்தி யென்கிறீர்களே; இப் புதிய காசியில் இறந்தால் என்ன வரும்?" என்றார். வியாசர் வெகுளியால் விழுங்கப்பட்டிருந்தபடியால் "கழுதை; பிறப்பு வரும்" என்றார். உடனே விநாயகர் மறைந்து விட்டார்.

வியாசர் பெரிதும் வருந்தி விசுவநாதரைப் பூசித்து, "சுவாமி! நான் ஏற்படுத்திய காசிக்கு ஒரு பெருமையும் இல்லையே" என்றனர். விசுவநாதர் வியாசரைத் தேற்றி, "காசியில் வந்து என்னைச்சேவித்தவர்கள் யாவரும் வியாச காசிக்கு வந்து அங்கு நீ பூசித்த மூர்த்தியைச் சேவிக்கட்டும். அங்ஙனம் சேவித்தோர் காசிக்கு வந்த முழுப்பயன் பெறுவர்" என்று வரமளித்தனர். அதனால் வியாசகாசி சென்று வணங்குவது அவசியமாகும்.

காசிமாநகர் 5, 6 கல் நீளமுள்ளதாகவும் பெரிய பெரிய கட்டிடங்களுடையதாகவும் திகழ்கின்றது. அரிச்சந்திரன் மனைவியை ஏலமிட்ட இடத்திற்கு அரிச்சந்திரன் கடை வீதி என்பர். சந்திரமதியை ஏலத்திலிருந்து வாங்கிய காலகண்டையருடைய சந்ததியாருடைய மாளிகையும் அங்குளது.

## கருடனும் பல்லியும்

காசியில் பல்லிகள் ஒலிப்பதில்லை; காசிநகரைச் சுற்றி 45 கல் எல்லைவரை கருடன் பறப்பதில்லை. காரணம்வருமாறு:

இராமர் இராவணவதஞ் செய்தபின் சேதுவில் சிவபூஜை செய்வதற்காக அநுமனைக் காசியிற் சென்று சிவலிங்கம் கொணருமாறு ஏவினர். அநுமார் காசியை யடைந்து பார்த்தார். எங்கும் லிங்கங்கள்; எது சுயம்புலிங்கம் என்று தோன்ருது விழித்தார். அப்பொழுது ஒரு லிங்கத்திற்கு நேரே கருடன் வட்டமிட்டனன். பல்லியும் நல்லுரை கூறியது. இந்த இரு குறிப்புக்களினால் அது சுயம்புலிங்க மென்றறிந்த அநுமார் அச் சிவலிங்கத்தைப் பேர்த்து எடுத்துப் புறப்பட்டார். காசியின் காவலராகிய கால வைரவர் அதுகண்டு முனிந்தார். "என் அனுமதி பெருமல் எப்படி நீ சிவலிங்கத்தை எடுக்கலாம்" என்றுகூறித் தடுத்தார். வைரவருக்கும் அநுமாருக்கும் கடும்போர் நடந்தது. அப்போது அமரர்கள் வந்து வைரவரை வணங்கி 'உலக நன்மைக்காக இச் சிவலிங்கம் தென்னடு போக அநுமதிக்க வேண்டும்' என்று வேண்டினர்கள். வைரவர் சாந்தியடைந்து சிவலிங்கத்தைக் கொடுத்தனுப் பினர். தன் அநுமதி பெருது இலிங்கத்தை எடுக்க முயன்ற அநுமாருக்குத் துணைபுரிந்த கருடன் காசிநகர எல்லைக்குள் பறக்கக்கூடாது என்றும், பல்லிகள் காசியில் இருந்தாலும் ஒலிக்கக்கூடாது எனறும் சாபமிட்டனர். அச் சாபத்தின்படி இன்றும் கருடன் பறப்பதில்லை; பல்லி சொல்லுவதில்லை.

காசி வாசம் மிகவும் இனிமையாக இருக்கும். கங்கை ஸ்னனமும், விசுவநாதர் தியானமும் மிக்க மகிழ்ச்சியையும் சித்த சாந்தியையுந் தரும். பால் தயிர் நயமாக விற்கின் றன. காய்கறிகள் மிக மலிவாகக் கிடைக்கின்றன. சுருக்க மான செலவில் இங்கு வசிக்கலாம்.

பிரமசாரி, வானப்பிரஸ்தர், சந்யாசி முதலியவர்கள் இத்தலத்தில் துன்பமின்றி இன்பமாக வாழலாம். எங்கும் அன்னதானங்கள் நடைபெறுகின்றன. தங்குவதற்கு பல மடாலயங்கள் உள்ளன. பிர்லா முதலிய பிரபுக்கள் போர்வைகள் ஆடைகள் முதலியன ஆயிரக்கணக்காக வழங்குகின்றனர். எனவே உடல்நலம் உயிர்நலம் உணர்வு நலம் ஆகிய எல்லா நலங்களையும் காசியில் எளிதிற் பெறலாம்.

காசியின் பெருமை எண்ணுக்கும் எழுத்துக்கும் சொல்லுக்கும் அடங்காதது. காசி காண்டம், காசிரகசியம் முதலிய நூல்கள் மூலம் சிறிது அறியலாம். மிகச் சுருங்கிய அளவில் சிறிது எழுதினேன். அருணகிரிநாதர் காசியைப்பற்றிப் பாடிய மூன்று திருப்புகழ்ப் பாடல்கள் இருக்கின்றன.

## காசித் திருப்புகழ்

தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னாய்மன
சாத னைக்கள வாணி யாயுறு மதிமோக
தாப மிக்குள வீண னாய்பொரு
வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாமு யச்செயு மேது தேடிய நினைவாகிப்
பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்புணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு வினையேனைப்
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞானமாகிய
போத கத்தினை யேயு மாறருள் புரிவாயே
வார ணத்தினை யேக ராவுமு
னேவ ளைத்திடு போது மேவிய
மாய வற்கித மாக வீறிய மருகோனே

வாழு முப்புர வீற தானது
நீறெ ழப்புகை யாக வேசெய்த
மாம திப்பிறை வேணி யாரருள் புதல்வோனே
கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு ணகவேநெறி
காவி யச்சிவ நூலை யோதிய கதிர்வேலா
கான கக்குற மாதை மேவிய
ஞான சொற்கும ராப ராபர
காசி யிற்பிர தாப மாயுறை பெருமாளே.

மங்கைக் கணவனும் வாழ்சிவ னுமயல்
பங்கப் படமிசை யேபனி போல்மதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவ னருள்மேவி
வண்டுத் தடிகைபொ லாகியெ நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலும வழியாலே
திங்கட் பதுசெல வேதலை கீழுற
வந்துப் புவிதனி லேமத லாயென
சிந்தைக் குழவியெ னவனை தாதையு மருள்கூரச்
செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல
சிங்கிப் பெருவிழி யாரவ மாயதி லழிவேனோ
அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுவரி யாயிரண் யாசுர னுடல்பீறி
அண்டர்க் கருள்பெரு மான்முகி ராவணி
சங்குத் திகிரிக ரோனரி நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன் மருகோனே
கங்கைச் சடைமுடி யோனிட மேவிய
தங்கப் பவளொளி பால்மதி போல்முக
கங்குற் றரிகுழ லாள்பர மேஸ்வரி யருள்பாலா
கந்துப் பரிமயில் வாகன மீதிரு
கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்
கங்கைப் பதிநதி காசியில் மேவிய பெருமாளே.

வேழ முண்ட விளாகனி யதுபோல
மேனி கொண்டு வியாபக மயலூறி
நாளு மிண்டர்கள் போல்மிக அயர்வாகி
நானு நைந்து விடாதருள் புரிவாயே
மாள அன்றம ணீசர்கள் கழுவேற
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா
காள கண்ட னுமாபதி தருபாலா
காசி கங்கையில் மேவிய பெருமாளே.

இனி நாங்கள் காசியில் தங்கிய விவரம் வருமாறு:

ஜய - கார்த்திகை 27 (12—12—54)

காலை 10-50 மணிக்கு எங்கள் வண்டி காசி நகரை யடைந்தது. நாங்கள் வண்டியிலேயே நீராடி நித்திய வழிபாட்டை முடித்துக்கொண்டோம். காசி வந்தவுடன் எங்கள் மனதில் மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது. உயர்திரு. ராமகுமார்ஜீ அவர்களது பௌத்திரர் உயர்திரு. கங்காதர சாஸ்திரி யவர்கள் மாலையிட்டு வரவேற்று உபசரித்தனர்.

வண்டியை விட்டிறங்கி 3, 4 கார்களில் எங்கள் பெட்டி படுக்கை முதலியவைகளை அனுப்பிவிட்டோம். நாங்கள் திருப்புகழ்ப் பாராயணஞ் செய்துகொண்டு நேரே கங்கைக் கரையை யடைந்தோம். 3 கல் தொலை இருக்கும். நடந்த சிரமம் தோன்றவில்லை.

கங்கையில் சென்று இனிது முழுகினோம். முனிவர்களும் சித்தர்களும் மன்னர்களும் முழுகித் தத்தம் பாவங்களைப் போக்கிக்கொண்ட கங்கைநதியில் நாங்களும் முழுகிப் பாவநீக்கம் பெற்றுத் தூயவர்கள் ஆனோம். மணிகர்ணிகையில் முழுகிய பிறகு விசுவநாதரைச் சேவிப்பது முறையாதலின் நாங்கள் அன்று விசுவநாதர் கோயிலுக்குப் போகவில்லை. கங்கா ஸ்னானத்துடன் ஆறுதலடைந்தோம்.

கங்கைக் கரையிலேயே ஸ்ரீ ராமகுமார்ஜீ அவர்களுடைய தருமசாலையில் தங்கினோம். அது தங்குவதற்குப் பரம சுகமாக இருந்தது. மின்சார விளக்கு முதலிய எல்லா வசதிகளுடன் கூடியது. திரு. கங்காதர சாஸ்திரியார் அவர்கள் அடிக்கடி வந்து எங்களுக்கு வேண்டிய உதவிகள் புரிந்தனர். அவருடைய அன்பு என்றும் மறக்க முடியாதது. மிகவும் பெருந்தன்மையுடைய அவருடைய பண்பு பாராட்டுதற்குரியது.

ஜய—கார்த்திகை 28 (13—12—54)

காலையில் கங்கையில் முழுகி நித்திய வழிபாடு செய்தோம். பின்னர் மணிகர்ணிகைக் கட்டத்திற்குச் சென்று சங்கல்பம் பிராயசித்தம் முதலிய நியதிகள் செய்து, நாராயண மூர்த்தியின் சக்கரத்தினால் உண்டாகிய பெரும் புனிதந் தங்கிய மணிகர்ணிகைத் தடாகத்தில் முழுகினோம். அது சமயம் மதுரையில் காசி யாத்திரைக்காகப் பாராட்டுரை வழங்கி வழிவிட்டவரும், உடல் பொருள் யாவும் உலக நலத்திற்காகத் தியாகஞ் செய்தவரும், "தென்னாட்டுப் போஸ்" என்ற புகழ் பெற்றவரும், எனது உயிரினும் இனிய நண்பரும், பெரும் சொல்லாற்றல் படைத்தவருமாகிய உயர்திரு பசும்பொன் முத்து ராமலிங்க தேவர் அவர்கள் தற்செயலாக அங்கு வந்து என்னுடன் கலந்துகொண்டனர். எனக்கு அதுபெரும் மகிழ்ச்சியைத் தந்தது. அவருடன் மணிகர்ணிகையில் நீராடியபின், மணிகர்ணிகா கட்டத்திலும் இறங்கிக் கங்கையில் முழுகினோம்.

திருப்புகழ்ப் பாராயணஞ் செய்துகொண்டே நேரே விசுவநாதர் திருக்கோயிலுக்குச் சென்றோம். ஞானவாவி, முத்தி மண்டபம், திருநந்திதேவர் இவைகளைத் தெரிசித்துக் கொண்டே கோயிலுக்குள் நுழைந்து, விசுவநாதரைக் கண்ணாரக் கண்டோம். கையாரக் கும்பிட்டோம்; வாயார வாழ்த்தினோம்; மும்முறை வலம் வந்தோம்.

உ
சிவமயம்



ஸ்ரீ காசி விசுவநாதர் (நாகாபரண அலங்காரக் காட்சி)

பின்னர் அன்னபூரணி யம்மையையும், துண்டிராஜ கணபதியையும், அட்சய வடத்தையும், விசாலாட்சி யம்மையாரையும் முறையே வணங்கினேம். காசியில் உள்ள குறுகிய தெருக்களில் நாங்கள் பஜனை செய்து கொண்டு போனபோது மோட்ச உலகின் வாசலில் நுழைந்து போவதுபோல் இருந்தது.

மாலை, **வந்தேகாசி, குகைக்கோயில், ஆதிகங்கை, காலபைரவர், தண்டபாணி** முதலிய ஆலயங்களுக்குச் சென்று வணங்கினேம். அரிச்சந்திரன் கடை வீதி, காலகண்டையர் மாளிகை இவைகளையும் பார்த்தோம்.

ஜய—கார்த்திகை 29 (14—12—54)

காலையில் கங்கையில் முழுகி, நித்திய வழிபாடு செய்தோம். மாலை தோணியில் சென்று கேதார கட்டம் போய், கேதாரநாதரையும் கௌரியம்மையாரையும் இனிது வணங்கினேம். காசிமடம் (ஸ்ரீ குமரகுருபரருடைய திரு மடம்) சென்று அங்கு மடாதிபதியாக எழுந்தளியுள்ள ஸ்ரீலஸ்ரீ **அருணந்தித் தம்பிரான் சுவாமியவர்களைச்** சந்தித்து மகிழ்ந்தோம். அவர்கள் மிக அன்புடன் எங்களை உபசரித்து, அவர்கள் திருக்கேதாரம் சென்ற **கேதார யாத்திரை** என்ற நூலும், பெரிய புராண வசனம் முதலிய நூல்களையும் அடியேனுக்கும், உடன்வந்த அடியார்கட்கும் வழங்கி ஆசி கூறினர்கள். அவர்களுடைய அரிய பெரிய அறச் செயல்களும் சீலமும் என்றென்றும் தமிழகம் பாராட்டி நினைவு கூரும் கடப்பாடுடையது. இரவு விசுவநாதர் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடு புரிந்தோம். விசாலாட்சி யம்மை கோயிலுக்கும் சென்று வணங்கினேம்.

ஜய—கார்த்திகை 30 (15—12—54)

காலையில் கங்கையில் நீராடி நித்திய வழிபாடு புரிந்தோம்.

மாலை **பண்டித மதன்மோகன மாளவ்யாஜீ** அவர்கள் நிறுவிய சர்வ கலாசாலையில்; குலபதி. உயர்திரு சர். சி. பி. ராம சுவாமி ஐயர் அவர்கள் தலைமையில், காசி தமிழ்ச் சங்கத் தாருடைய வேண்டுகோளின்படி '**முருகன் பெருமை**' என்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன். ஆசிரியர்கள் பலரும் மாணவர்களும் மற்றையோரும் கேட்டு இன்புற்றூர்கள்.

ஜய—மார்கழி 1 (16—12—54)

மார்கழி மாதம் ஆதலின் விடியற்காலை 4 மணிக்கே எழுந்து கங்கையில் நீராடினோம். திருவெம்பாவை திருப் பள்ளியெழுச்சி பாராயணம் புரிந்து வழிபாடு செய்தோம்.

காலை 8 மணிக்கு எல்லோரும் தோணியில் ஏறி **பஞ்ச தீர்த்த யாத்திரை** செய்தோம். அதாவது அஸிசங்கம கட்டம், தசாசுவமேத கட்டம், வருணசங்கம கட்டம், பஞ்சகங்கா கட்டம், மணிகர்ணிகா கட்டம் என்ற ஐந்து இடங்களிலும் கங்கையில் முழுகி, அவ்வவ்விடங்களிலுள்ள மூர்த்தி களைத் தெரிசித்தோம். பகல் 1½ மணிக்கு முடிவு பெற் றது. எங்கள் திருக்கூட்டத்தில் சேர்ந்த அன்பர் திரு. சீதாராம ரெட்டியார் குடும்ப அலுவலாகப் புறப்பட் டுத் தனது ஊருக்குச் சென்றனர்.

ஜய—மார்கழி 2 (17—12—54)

வைகறை யெழுந்து கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம். விடியற்காலை 5-30 மணிக்கு அருகிலுள்ள **வராகியம்மை** திருக்கோயிலுக்குப் போய் அதிக மகிமையுள்ள அந்த அம்பிகையைச் சேவித்தோம். பின்னர் விசுவநாதர், அன்னபூரணி, துண்டிராஜ கணபதி, விசாலாட்சி, தருமேச்வரர் முதலிய மூர்த்திகளை முறையே தெரிசனம் செய்தோம்.

பகல் 1 மணிக்குப் புறப்பட்டு சர்வகலாசாலைக்குச் சென்றோம். அன்று அங்கு தேர்ச்சி பெற்ற மாணவர்

களுக்குப் பட்டம் வழங்கும் பெருவிழா நிகழ்ந்தது. பல்லாயிரம் மக்கள் குழுமியிருந்தனர். இந்திர சபைபோல் விளங்கிய அம் மாபெரும் அரங்கில் உயர்திரு சர். ஸி. பி. ராமசாமி ஐயர் அவர்கள் பட்டத்திற்குரிய சின்னங்களை வழங்கினர்.

நாங்கள் சர்வகலாசாலையை முடிந்தவரை பார்த்து விட்டு அங்கிருந்து **சங்கடவிமோசன அனுமார், துர்க்காதேவி, கௌடியம்மை, அனுமந்தேச்வரர், அரிச்சந்திரேஸ்வரர், கேதாரேச்வரர், சிந்தாமணி விநாயகர், திலபாண்டியேச்வரர்** முதலிய மூர்த்திகளை வழிபாடு புரிந்தோம். இவற்றுள் கேதாரேச்வரர் கோயிலில் ஆராதனை தென்னாட்டில் நடைபெறுவதுபோல் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

ஜய—மார்கழி 3 (18—12—54)

வைகறையில் கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

கடைவீதி சென்று உருத்திராக்க மணிகள், கமண்டலங்கள், தர்ப்பாசனங்கள், முதலிய பூசைக்குரிய சாதனங்களை வாங்கினேம்.

இரவு 8–30 மணிக்கு விசுவநாதர் கோயிலுக்குச் சென்று அர்த்தசாம பூசையைக் கண் குளிரக் கண்டு களித்தோம்; அக் காட்சி என்றும் மறக்க முடியாதது.

ஜய—மார்கழி 4 (19—12—54)

வைகறையில் கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

லலிதா கட்டத்திலுள்ள **பசுபதிநாதர், ராஜராஜேஸ்வரி, பஞ்சமுகேச்வரர், துர்க்காதேவி, சங்கடாதேவி, நீலகண்டமகாதேவர்** இன்னும் பல மூர்த்திகளைத் தெரிசித்தோம்.

மாலை 5 மணிக்கு சர்வகலாசாலை, தனராஜகிரி ஹாஸ்டல் சென்று உயர்திரு கோபால ஐயர் அவர்கள் வேண்டு

கோளின்படி "உனைத்தினந்தொழுதிலன்" என்ற திருப்புகழுக்கு விரிவுரை செய்தேன். திரு. கோபால ஐயர் அவர்கள் மிக்க அன்புடன் உபசரித்தனர்.

ஜய—மார்கழி 5 (20—12—54)

வைகறையில் கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம். விசுவநாதருக்கு அபிஷேகமும், ஏழைகளுக்கு அன்னதானமும் செய்தோம்.

மாலை திருக்கோயில் சென்று விசுவநாதரையும், மற்ற மூர்த்திகளையும் தெரிசித்தோம்.

ஜய—மார்கழி 6 (21—12—54)

வைகறையில் கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

காலை 8 மணிக்குத் தோணியிலேறி **ராம்நகர்** சென்று **வியாசலிங்கம், சுகலிங்கம், இராமலிங்கம்** முதலிய மூர்த்திகளை வணங்கி வழிபட்டோம். கங்காதேவியையும் தெரிசித்தோம். காசி மன்னருடைய கோட்டை அரண்மனை முதலியவற்றைப் பார்த்தோம்.

ஜய—மார்கழி 7 (22—12—44)

வைகறையில் கங்கையில் முழுகி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

காலை 8 மணிக்குப் புறப்பட்டு காலபைரவர் கோயிலுக்குப் போய் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு தண்டபாணியைத் தெரிசித்து விசுவநாதர் கோயிலுக்கு வந்து அப் பரம கருணாநிதியைக் கண்ணாரக் கண்டு வணங்கி பிரியா விடை பெற்றுக்கொண்டு, அன்னபூரணி, துண்டிராஜ கணபதி, விசாலாட்சி முதலிய மூர்த்திகளையும் தொழுதோம். மாலை 3 மணிக்கு பனாரஸ் புகைவண்டி நிலயத்தை அடைந்தோம்.



ஆசிரியர் திருமுருக **கிருபானந்தவாரி** அவர்கள் தம் திருப்புகழ் குழுவுடன் 20—12—54ல் காசி விஜயத்தின்போது கங்கைக் கரையில் அமர்ந்துள்ள காட்சி.

புகைவண்டி நிலையத்திற்கு ஸ்ரீ ராமகுமார்ஜீ பௌத்திரர் கங்காதர சாஸ்திரிகள் வந்து மிகுந்த அன்புடன் மாலையிட்டு உபசரித்து புகைப்படம் எடுத்துக்கொண்டு உள்ளம் உருக வழியனுப்பினார்கள்.

காசியில் ஒரு கர்ப்பவாசம் (10 மாதம்) தங்கவேண்டும் என்பது விதி. முடியாதவர்கள் 10 இரவு தங்க வேண்டும். நாங்கள் அதுபடி காசி வாசம் கங்கைக்கரையில் 10 இரவு தங்கினோம். அதைவிட்டுப் புறப்படுகின்ற பொழுது தாயைவிட்டுப் பிரிகின்ற சேயைப்போல் உள்ளம் உலைந்தது. கங்கைக்குக் கற்பூர ஆராதனைக் காட்டி வணக்கம் புரிந்து வந்தோம்.

காசியில் நாங்கள் தங்கிய 10 நாட்களிலும்ராமகுமார்ஜீ அவர்களுடைய பரிஜனங்கள் எங்களுக்கு வழிகாட்டி எல்லாக் கோயில்களுக்கும் அழைத்துக் கொண்டுபோய் உதவி புரிந்தார்கள். காசி மிகவும் நெருக்கமான பட்டினம்; சுருக்கமான தெருவுகள். பலகாலம் பயின்றவர்கள் வழி காட்டினாலன்றி எளிதில் சென்று வர முடியாது. ஆதலின் ராமகுமார்ஜீ அவர்களுடைய பரிஜனங்கள் செய்த உதவி மிகவும் பாராட்டுதற்குரியது. **தமிழ்நாட்டிலிருந்து செல்லும் அன்பர்கள், ராமகுமார்ஜீ தருமசாலையில் சென்று தங்கினால் காசிவாசம் எளிதாக இருக்கும்.** அவர்கள் விலாசம் இங்கு குறித்திருக்கிறேன்.

**K. கங்காதர சாஸ்திரிகள்,**
ராமகுமார்ஜீ,
ராமபவனம்,
விசாலாட்சிகாட், பனாரஸ், (காசி).

காசியில் நாங்கள் தங்கியிருந்தபோது கேதாரேச்வரர் கோயில் பணியாளர் வேலூர், திரு. **S. ஆறுமுக முதலியார்** அவர்கள், நாள் தவறாமல் காலையும் மாலையும் வந்து

அதிலுள்ள அன்பர்கள் தமிழ்ப் பற்றும் தெய்வபக்தியும் உள்ளவர்களாக இருக்கின்றார்கள்.

## தாரகேச்சுரம்

ஜய—மார்கழி 13 (28—12—54)

வைகறை மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம். காலை 7-15 மணிக்குப் புகைவண்டியில் புறப்பட்டு 9-30 மணிக்குத் தாரகேச்சுரம் சென்றோம்.

இது ஒரு அரிய சிவதலம். கல்கத்தா பெரிய நகரம். 3 நாள் அங்கு தங்கியிருந்தோம். எனினும் சித்தசாந்தி யேற்படவில்லை. அதன் பயன் தாரகேச்சுர தரிசனந் தான். புகைவண்டி நிலையத்திற்கு அருகிலேயே கோயில் உளது. தருமசாலைகளும் உண்டு. கோயில் சிறியது தான். ஆனால், மகிமையில் பெரியது. பலர் வந்து இங்கு தங்கித் தவம் புரிகின்றார்கள். மெய்மையான அன்புடைய வர்கள் கனவில் இறைவர் தோன்றி அருள்புரிகின்றார்.

சிவலிங்கத்தின் முற்பகுதியில் வட்டமான ஒரு பள்ளமும், பின்புறம் ஒரு பள்ளமும் உள்ளன. கோயிலுக்கு அருகில் தீர்த்தக் குளம் உள்ளது. சேவைக்குப் போகும் அன்பர்களே நீரும் பூவும் இட்டு வணங்கலாம். கோயிலுக்கு வலப்புறத்தில் சிறிய சிறிய கோயில்களில் சிவலிங்கங்கள் இருக்கின்றன. பற்பல அன்பர்கள் நெருக்கமாக வந்து அன்புடன் வழிபடுகின்றார்கள். அங்கு நாங்கள் சென்று ஆராத அன்புடன் வழிபாடு புரிந்து இன்புற்றோம்.

காலை 11-30 மணிக்குப் புறப்பட்டு பகல் 2-15 மணிக்கு மீண்டும் ஹௌரா வந்து சேர்ந்தோம்,

ஜய—மார்கழி 14 (29—12—54)

வைகறை மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம். காலை கல்கத்தாவில் உள்ள தமிழ் அன்பர்கள் பலர் வந்து

கயையில் பிண்டந்தான் பிரதானம். காசியிலிருந்து 139 கல் தூரம் கயா.

கயாசுரன் என்பவன் சிறந்த நாராயண பக்தன். அவன் இருந்து தவஞ் செய்து நற்கதி பெற்றதனால் இத் தலம் தூய்மை பெற்றது. அதனால் கயா என்று அவன் பேரைப் பெற்றது. இதற்கு அருகில் **கோலாகலகிரி, நககூடக் குன்று, பஸ்மகூடக்குன்று, பிரமயோகினிக்குன்று, ராமசிலைக்குன்று, பிரேதசிலைக்குன்று** என்ற குன்றுகள் கயையைச் சூழ்ந்திருக்கின்றன. **பல்குனி நதி** ஓடுகின்றது. வடக்கு நோக்கி ஓடும் இந்நதியில் அதிக நீர் இராது. எல்லாத் தீர்த்தங்களும் எல்லாத் தலங்களும் இக் கயாவில் அடங்குகின்றன என்பதை அடியிற் கண்ட திருவாக்காலறிக.

'கயாதீர்த்தம் சர்வதேசே தீர்த்தேப்யோப்யதிகப்ருணு'

ஸ்ரீராமர், தருமநந்தனர் முதலிய ஆன்றோர்களும் கயைக்கு வந்து பிதிர்க்காரியம் புரிந்திருக்கின்றார்கள்.

பல்குனி நதிக்கரையில் **விஷ்ணுபாதம்** என்ற திருக்கோயில் உளது. அங்கு விஷ்ணு பாதம் உளது. அப்பாதத்திற்கு மேலிருந்து நீர்த்துளி அவ்வப்போது சொட்டுகின்றது. அது எங்கிருந்து எப்படி சொட்டுகின்றதென்று அறிய முடியவில்லை. கீழே விழுந்த துளி உலர்ந்ததும் மற்றொரு துளி விழுகின்றது. இது இங்குள்ள அதிசயம். மிகப் புனிதமான இடம். இப் பாதத்தில் பிதிர்ப்பிண்டம் இடவேண்டும். அதனால் பிதிர்களுக்கு நற்கதி யுண்டாகின்றது.

பல்குனிநதி, விஷ்ணுபாதம், அட்சயவடம் என்ற மூன்று இடங்களிலும் பிதிர்களுக்குப் பிண்டம் போட வேண்டும்.

விஷ்ணுபாதக் கோயிலுக்கு 1 கல் தொலையில் **அட்சய வடம்** என்ற பழமைமிக்க ஆலவிருட்சம் உளது. அதன்

கீழ் பல மூர்த்திகளும் இருக்கின்றன. அதன் கீழ் நம் மிடம் உள்ள தீமைகளில் சிலவற்றைத் தள்ளிவிட வேண் டும். இந்த வழக்கத்திற்குப் பதிலாக இப்போது இலை, காய், கனிகள், இவைகளில் ஒன்றைவிட்டுவிடுகின்றார்கள்.

கயாவாசிகள் மூலம் பிதிர்க்காரியங்கள் செய்து அவர் களிடம் சுபலம் பெறுகின்றார்கள்.

புகைவண்டி நிலையத்திலிருந்து விஷ்ணுபாதம் என்ற கோயில் 2 கல் தொலை. தருமசாலைகள் பல உள. பெரிய நகரம். யாத்ரீகர்கள் எப்பொழுதும் நிரம்ப வந்து கொண்டே யிருக்கின்றார்கள்.

## தர்மாரண்யம்—புத்தகயை

கயாவிலிருந்து 6 கல் தொலையில் தருமபுத்திரர் தவஞ்செய்த தர்மாரண்யம் உளது. அங்கு தருமருடைய உருவம் பீமனுடைய உருவம் உள்ளன. அங்கிருந்து 1 கல் தொலையில் புத்த கயை யுளது. இங்குள்ள அரசமரத் தின் கீழ் புத்தர் இருந்து தவஞ் செய்து சித்தி பெற்றனர். அந்த இடத்தில் அசோக சக்ரவர்த்தி பெரிய கோயிலைக் கட்டியுள்ளார். அதில் புத்தருடைய உருவம் இருக்கின் றது. அதை யடுத்து ஒரு அரசமரத்தின்கீழ் இந்துக் களுடைய மூர்த்திகள் இருக்கின்றன. அதன்கீழும் இந் துக்கள் பிதிர்க்காரியங்கள் புரிகின்றனர்.

அதற்கு மேற்கே புத்தர்களுடைய மடம்; அதிலும் புத்தர் உருவம் முதலியன இருக்கின்றன. சீன, இலங்கை, ஜப்பான், பர்மா முதலிய பல பகுதிகளிலிருந்து புத்த மதத்தினர்கள் வந்து இங்கு கூடி வழிபடுகின்றார்கள்.

இதன் அருகில் சிறிய சிறிய சிவாலயங்கள் இரண்டு இருக்கின்றன. சங்கராச்சாரியாருடைய மடம் ஒன்றும் இருக்கின்றது.

இந்தப் புத்த கயாவும் பல்குனி நதிக்கரையில்தான் மிக்க மேன்மையுடன் திகழ்கின்றது. கயாவிலிருந்து புத்தகயாவுக்குப் போக பஸ், குதிரை வண்டி முதலிய வசதிகள் உண்டு.

ஜய—மார்கழி 8 (23—12—54)

காலை புகைவண்டி நிலையத்திலிருந்து 2 கல் தொலையில் உள்ள பல்குனி நதி சென்று சங்கல்பம் புரிந்து நீராடி, விஷ்ணுபாதம், அட்சயவடம், சூரிய மூர்த்தி கோயில் முதலியவற்றைத் தெரிசித்தோம்.

ஜய—மார்கழி 9 (24—12—54)

வைகறையில் மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம். பின்னர், குதிரை வண்டிகள் வைத்துக்கொண்டு 7 கல் தொலையிலுள்ள தர்மாரண்யம், புத்த கயாவுக்குச் சென்று திரும்பினோம். பகல் 3-40 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. மாலை 6.42 மணிக்கு பீஹார் மாகாணத்தின் தலைநகராகிய பாட்னவை யடைந்தோம். இரவு 8 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு ஜஸித் சந்திப்பு வழியாக இரவு 1-45 மணிக்கு வைத்தியநாதஞ் சென்றோம்.

## வைத்தியநாதம்

ஜய—மார்கழி 10 (25—12—54)

வைகறையில் மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தபின் காலை ஊருக்குள் சென்றோம். விசாலமான நகரம். புகைவண்டி நிலையமும் ஊரும் ஒன்றுதான். கோயிலுக்கு அருகில் உள்ள சிவகங்கையில் முழுகிக் கோயிலுக்குச் சென்றோம். பழமையான கோயில்.

சுவாமியின் பெயர் — **இராவண வைத்தியநாதேச்சுரர்**

அம்பிகையின் பெயர் — **கௌரி திரிபுரசுந்தரி**

இராவணன் திருக்கயிலாயமலை சென்று சிவபெருமானிடமிருந்து ஆத்மார்த்தமாக வைத்துப் பூசிக்கும்

பொருட்டு ஒரு சிவலிங்கம் பெற்றுக்கொண்டு வந்தனன். அதை இங்கு வைத்து வழிபட்டு வேண்டிய வரங்களைப் பெற்றனன். அன்றியும் ஸ்ரீராமர், அநுமார், நாரதர் முதலியோரும் இம் மூர்த்தியை வழிபட்டார்கள். இவ் வைத்தியநாதப் பெருமானை மனமொழி மெய்களால் வழி பட்டோர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுவர்.

சுவாமி உள்ளங்கை அகலமும் ஒரு அங்குல உயரமு மாக இருக்கின்றார். அவரைச் சுற்றி ஆவுடையார் ஒரு பக்கம் சாய்ந்த வண்ணமாக அச் சிவலிங்கம் உளது.

சுவாமி கோயிலைச் சுற்றி பல சிறு கோயில்கள் உள் ளன. அவற்றில் விநாயகர், முருகர், காயத்திரி, ஸ்ரீராமர், காளி, வைரவர் முதலிய மூர்த்திகள் இருக்கின்றனர்.

சுவாமியை நாமே பூவும் நீரும் இட்டு வழிபடலாம். கங்கா நீரால் வழிபடுவது மிகவும் சிறப்பு. அங்ஙனம் வழிபடுவோர் எல்லா நலன்களையும் பெறுவர். பலர் அங்ஙனம் வழிபடுகின்றனர்.

நாங்களும் கங்காநீரும் வில்வமும் இட்டு வைத்திய நாதப் பெருமானை அன்புடன் வழிபட்டோம்.

அன்று மாலை 6-30 மணிக்கு அங்கிருந்து எங்கள் வண்டி புறப்பட்டது.

## கல்கத்தா

ஜய—மார்கழி 11 (26—12—54)

அதிகாலை 5-30 மணிக்கு ஹௌரா-கல்கத்தாவை யடைந்தோம். அடைவதற்குள்ளாகவே வண்டியில் நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம். மிகப்பெரிய புகை வண்டி நிலையம். அதற்கு அருகில் கங்காநதி மிக்க ஆழத் துடன் ஓடுகின்றது. பலப்பல கப்பல்களும் ஓடங்களும் செல்லுகின்றன. பாலம் பார்க்கத்தக்கது. கங்கா நதிக்கு மேற்கேயுள்ள பகுதி **ஹௌரா**; கிழக்கேயுள்ள பகுதி **கல்கத்தா.**

பகல் 1 மணிக்குப் புறப்பட்டு **பேலூர் ராமகிருஷ்ணர்** திரு மடத்திற்குச் சென்றோம். அன்று தூய அன்னை **சாரதாமணி யார்** நூற்றாண்டு விழா அங்கு நிகழ்ந்துகொண்டிருந்தது. **பரமஹம்ஸருடைய** ஆலயம், **விவேகானந்தர்** ஆலயம், அன்னை **சாரதாமணியார்** ஆலயம் இவைகளைத் தெரிசித்தோம். அங் கிருந்து ஓடத்தில் ஏறி **தட்சிணேச்வரம்** சென்றோம். அங்கு ராமகிருஷ்ணர் பூசித்த காளிதேவியும், அருகில் சிறுசிறு கோயிலில் பன்னிரு சிவலிங்கங்களும் இருக்கின்றன. இவைகளைத் தெரிசித்தோம். அம்பிகையின் அருள்பெற்ற ராமகிருஷ்ணர் வாழ்ந்த அப் புனிதமான இடத்தைக் காணும் பேறு இன்று கிடைத்தது.

இரவு 7 மணிக்கு ஹௌரா திருவள்ளுவர் கலை மன் றத்தினர் அழைப்புக்கு இணங்கி அங்கு சென்று '**மணிவாச கர்**' என்பது பற்றி ஒரு விரிவுரை புரிந்தேன். மன்ற அன் பர்கள் மிக்க அன்புடன் உபசரித்தார்கள். அவர்களது பண்பும் ஊக்கமும் பாராட்டுதற்குரியன.

ஜய—மார்கழி 12 (27—12—54)

வைகறை மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம். காலை 8 மணிக்குப் புறப்பட்டு குதிரை வண்டிகள் அமைத்துக் கொண்டு, **பரசுநாதர் மந்திர்** (சைனர் கோயில்), **மியூசியம்**, விக் டோரியா மெமோரியம், காளிமந்திர் **பூங்கா**, விலங்குகள் பறவைகள் உள்ள காட்சிச்சாலை, கடைவீதிகள் முதலிய வற்றைக் கண்டோம்.

இரவு 7–30 மணிக்கு கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத் தினர் வேண்டுகோளின்படி **திருவெம்பாவை** என்பது பற்றி விரிவுரை நிகழ்த்தினேன். தமிழ் வழங்காத பகுதியில் வாழ்கின்ற தமிழ் நாட்டு நண்பர்களுக்கு அது செவி விருந்தாக இருந்தது. சிந்தை மகிழ்ந்து உபசரித்தார்கள். பாரதி தமிழ்ச் சங்கம் நன்றாகத் தமிழ்ப்பணி புரிகின்றது.

அதிலுள்ள அன்பர்கள் தமிழ்ப் பற்றும் தெய்வபக்தியும் உள்ளவர்களாக இருக்கின்றார்கள்.

## தாரகேச்சுரம்

ஜய—மார்கழி 13 (28—12—54)

வைகறை மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம். காலை 7-15 மணிக்குப் புகைவண்டியில் புறப்பட்டு 9-30 மணிக்குத் தாரகேச்சுரம் சென்றோம்.

இது ஒரு அரிய சிவதலம். கல்கத்தா பெரிய நகரம். 3 நாள் அங்கு தங்கியிருந்தோம். எனினும் சித்தசாந்தி யேற்படவில்லை. அதன் பயன் தாரகேச்சுர தரிசனந் தான். புகைவண்டி நிலையத்திற்கு அருகிலேயே கோயில் உளது. தருமசாலைகளும் உண்டு. கோயில் சிறியது தான். ஆனால், மகிமையில் பெரியது. பலர் வந்து இங்கு தங்கித் தவம் புரிகின்றார்கள். மெய்மையான அன்புடைய வர்கள் கனவில் இறைவர் தோன்றி அருள்புரிகின்றார்.

சிவலிங்கத்தின் முற்பகுதியில் வட்டமான ஒரு பள்ளமும், பின்புறம் ஒரு பள்ளமும் உள்ளன. கோயி லுக்கு அருகில் தீர்த்தக் குளம் உள்ளது. சேவைக்குப் போகும் அன்பர்களே நீரும் பூவும் இட்டு வணங்கலாம். கோயிலுக்கு வலப்புறத்தில் சிறிய சிறிய கோயில்களில் சிவலிங்கங்கள் இருக்கின்றன. பற்பல அன்பர்கள் நெருக்கமாக வந்து அன்புடன் வழிபடுகின்றார்கள். அங்கு நாங்கள் சென்று ஆராத அன்புடன் வழிபாடு புரிந்து இன்புற்றோம்.

காலை 11-30 மணிக்குப் புறப்பட்டு பகல் 2-15 மணிக்கு மீண்டும் ஹௌரா வந்து சேர்ந்தோம்,

ஜய—மார்கழி 14 (29—12—54)

வைகறை மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம். காலை கல்கத்தாவில் உள்ள தமிழ் அன்பர்கள் பலர் வந்து

கண்டு களித்தார்கள். பிற்பகல் புது மார்கெட் சென்று பார்த்தோம்.

இரவு 9.55 மணிக்கு ஹௌராவிலிருந்து எங்கள் வண்டி புறப்பட்டது.

ஜய-மார்கழி 15 (30—12—54)

## புவனேஸ்வரம்

காலை கட்டக் என்ற சந்திப்பை அடைந்தோம். அது ஓரிஸா மாகாணத்தின் தலைநகரம். அங்கிருந்து ½ கல் தொலையில் மஹாநதி ஓடுகின்றது. 2 கல் அகலம் உள்ள அந்த நதியில் கங்கா நதிக்கு அடுத்தபடியாகத் தூய தண்ணீர் ஓடுகின்றது. மஹா நதி என்ற பேர் அதற்குப் பொருத்தமானதாகும். மஹாநதியில் முழுகி வழிபாடு புரிந்தோம்.

பகல் 12-30 மணிக்குப் புறப்பட்டு 2 மணிக்கு புவனேச்வரம் சேர்ந்தோம். அப் புகை வண்டி நிலையத்திலிருந்து 1½ கல் தொலையில் கோயிலும் ஊரும் இருக்கின்றன. மிகப் பழமையான திருத்தலம். விஷ்ணுவினுடைய சக்ராயுதம் வழிபட்ட சிவாலயம். அழகான கோயில்; உயர்ந்த தூபி. 180 அடி உயரம்.

இத் தலத்தில் முற்காலத்தில் 7000-ம் கோயில்கள் இருந்தனவாம். இப்போது அத்தனையும் சிதைந்து 500 கோயில்கள் இருக்கின்றன. விந்துசரோவரம் என்ற பெரிய ஏரிபோன்ற திருக்குளம் உளது. அதற்கு நடுவில் சிறு கோயிலும் உளது.

## பஞ்சதீர்த்தம்

கேதார தீர்த்தம், கௌரி தீர்த்தம், க்ஷீர தீர்த்தம் (கிணறு), சித்திரதீர்த்தம், ராமகுண்டம்.

இந்த ஐந்து தீர்த்தங்கள் உள்ள இடத்தில், விநாயகர், கௌரி, கேதாரேச்வரர், சித்தேச்வரர், முக்தேச்வரர், பாதாளேச்வரர், சிவ

**தாண்டவர், பாணலிங்கம்** முதலிய கோயில்கள் இருக்கின்றன. இதில் சித்தேச்வரர் கோயிலின் சிற்பங்கள் மிகவும் உயர்ந்தவை; பார்க்கத்தக்கவை; இலிங்கங்கள் சுயம்பு. தீர்த்தங்கள் மிகவும் புனிதமாகவும் தெளிவாகவும் இருக்கின்றன.

கிசோரி வம்சத்தில், சக்ரவர்த்தி, லலாதிந்தகேச்வரன், ஜதாதிந்துகேச்வரன் என்ற இருவர்களால் 2000-ம் ஆண்டுகளுக்கு முன் செய்த திருப்பணி இக் கோயில். ஏகாம்பரக்ஷேத்திரம் என்றும் இதற்கு ஒரு பேருண்டு. புவனேச்வரலிங்கம் ஒரு பகுதி விஷ்ணு அம்சமாகவும், ஒரு பகுதி சிவாம்சமாகவும் இருக்கின்றது.

கோயிலைச் சூழ்ந்து சிறு சிறு கோயில்களாகப் பல இருக்கின்றன. அவற்றுள் தனித்தனியே சிவலிங்கங்கள் இருக்கின்றன. விநாயகர் நர்த்தன வடிவாக அழகாக இருக்கின்றார். திருநந்திதேவர் சற்று விலகியிருக்கின்றார்.

மிக மகிமை வாய்ந்த இக்கோயிலில் சென்று வழிபட்டோர் இகபர நலன்கள் பெறுவர்.

நாங்கள் இம் மூர்த்திகளை யெல்லாம் தெரிசித்தோம். பின்னர் புகைவண்டி நிலையம் வந்து வண்டியில் ஏறினோம். இரவு 12-15 மணிக்குப் **பூரி ஜகந்நாதம்** சேர்ந்தோம்.

ஜய-மார்கழி 16 (31—12—54)

வைகறையில் மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம். பின்னர் **மஹாசமுத்திரத்தில்** நீராடினோம்; **மார்க்கண்டேய** தீர்த்தத்தில் முழுகினோம். தீர்த்தக்கரையில் **மார்க்கண்டேச்சுரர்** என்ற சுயம்பு மூர்த்தியைத் தெரிசித்து மலரிட்டு, வணங்கினோம்.

ஜெகந்நாதர் ஆலயம் போனோம். பெரிய கோயில். கோயிலைப் புதுக்கினவன் அருவருப்பும் ஆபாசமும் மிக்க

உருவங்களை அமைத்துள்ளான்; அது அருவருக்கத்தக்கது. கோயிலிலுள்ளவர் மனிதப் பேய்கள்; பிடுங்கித் தின்கின்றூர்கள். பலபத்ரர், சுபத்திரை, கிருஷ்ணர், இந்த மூவர்களுடைய உருவம் மரத்தால் செய்து அரைகுறையாகப் பூதாகாரமாக உள்ளன. இவற்றைப் பார்த்து விட்டுத் திரும்பினோம்.

வட திசையில் பாதாளேஸ்வரர், என்ற மூர்த்தியும் அதற்கு அருகில் வேறு சுயம்பு மூர்த்தியாகிய சிவலிங்கமும் இருக்கின்றன, அவைகளை வணங்கிவிட்டுப் புறப்பட்டோம்.

மாலை கூட்டு வழிபாடு செய்தோம்.

ஜய—மார்கழி 17 (1—1—55)

காலையில் மார்கழிச்சிறப்பு வழிபாடு புரிந்தோம். பகல் 12-30 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது.

வண்டி போய்க்கொண்டிருக்கும்போதே மாலை கூட்டு வழிபாடு செய்தோம்.

## சிம்மாசலம்

ஜய—மார்கழி 18 (2—1—55)

அதிகாலை 5 மணிக்கு எங்கள் வண்டி **வால்டேர்** சந்திப்பை யடைந்தது. நாங்கள் அதற்கு முன்னரேயே எழுந்து நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

காலை 9 மணிக்கு பஸ்ஸில் ஏறி வால்டேர் புகைவண்டி நிலையத்திற்கு 8 கல் தொலையில் உள்ள **சிம்மாசலம்** என்ற தலத்தை யடைந்தோம். பஸ் கட்டணம் ஆள் 1-க்கு 0-8-0.

சுமார் 6 பர்லாங்கு தூரம் மலைமீது ஏறினோம். நல்ல படிகள். வளமையான மலை. மா, பலா, கமுகு, தென்னை முதலிய மரங்கள் அடர்ந்து, குளிர்ந்த காற்று வீசி மிக்க இனிமையும் தனிமையும் உடையதாக விளங்கும் அம்மலை மீது ஏறினோம். 1000 படிகள்.

அங்கு சிறு அருவி விழுகின்றது. அதில் முழுகினோம். இனிமையான தண்ணீர். ஒருபுறத்தில் சிவாலயம் உளது. சுவாமியின் பெயர் **திரிபுராந்தகர்.** அம்பிகையின் பெயர் **திரிபுரசுந்தரி.** அருமையான சிவலிங்கம். அங்கு உள்ளம் உவந்து தெரிசித்தோம்.

அருகில் நரசிம்ம சுவாமியின் கோயில் அழகாகவும் விசாலமாகவும் இருக்கின்றது. உயர்ந்த சித்திரக் கலை நிரம்பியுள்ளது. அவ் வழகிய உருவங்கள் உடைபட்டுள்ளன. அதனைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கின்றது.

உக்கிரமுள்ள நரசிம்ம மூர்த்தி யென்று சுவாமியை நிரம்பவும் சந்தனம் போட்டு மறைத்து சிவலிங்க உருவில் வைத்துள்ளனர். சந்தனத்தை ஆண்டுக்கு ஒருமுறை எடுத்து வேறு சந்தனக் காப்பு செய்வார்களாம். அந்த விவரம் அறியாதவர் சந்தனத்தால் அமைத்த சிவலிங்கம் என்றுதான் எண்ணுவார்கள்.

நாங்கள் சிவலிங்க வடிவில் உள்ள அம் மூர்த்தியை இனிது தெரிசித்தோம். உற்சவ மூர்த்தி நவமணிகள் இழைத்த திருவாபரணங்களுடன் வெகு சுந்தரமாகக் காட்சி யளிக்கின்றார். கோயிலில் இனிய பிரசாதங்கள் கிடைக்கின்றன. கோயிலுக்கு உள் சென்று சுவாமியின் அருகில் சேவிக்க 0-2-0 கட்டணம்.

## விசாகப்பட்டினம்

விசாகன்—முருகன். முருகன் பேரால் உள்ள இந்நகரம் வால்டேர் சந்திப்புக்கு அருகில் விசாலமாக இருக்கின்றது. கப்பல் கட்டுந் துறைமுகம் அழகியது. கடைவீதிகள் முதலியவற்றை என்னுடன் வந்த அன்பர்கள் சுற்றிப் பார்த்தார்கள்.

மாலை 7 மணிக்கு வால்டேரிலிருந்து எங்கள் வண்டி புறப்பட்டது. நாங்கள் வண்டியிலேயே வழக்கம்போல் கூட்டு வழிபாடு புரிந்தோம்.

## இராஜமகேந்திரம்

ஜய—மார்கழி 19 (3—1—55)

விடியற்காலை 5 மணிக்கு எங்கள் வண்டி **இராஜமகேந்திரத்தை** யடைந்தது. வீரவாகுதேவர் வீரமகேந்திரத்திற்குத் தூது சென்றார். நாங்கள் இன்று ராஜ மகேந்திரத்தை யடைந்தோம்.

வைகறை நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாட்டை முடித்துக்கொண்டோம்.

குதிரை வண்டிகள் அமைத்துக்கொண்டு 2 கல் தொலையில் உள்ள கோதாவரி நதி சென்று மனிதரை ஈடேற்றும் புனிதமுடைய அப் புண்ணிய நதியில் முழுகினோம். திரியம்பகத்திற்கு அருகில் உள்ள மலை மீது ஏறி கோதாவரி உற்பத்தியை நாங்கள் முன்னே பார்த்து முழுகினோம். அது சிறு நந்தி வாயிலிருந்து ஒரு சுண்டு விரல் கனத்தில் அங்கே விழுகின்றது. இங்கே சற்று ஏறக்குறைய 2 கல் அகலமுள்ளதாய், வள்ளல்களின் உள்ளம்போல் பரந்ததாய், பற்பல தோணிகள் போய் வரக்கூடியதாய் விளங்குகின்றது. மனிதனுடைய வாழ்வும் தொடக்கத்தில் சிறியதாய் தொடங்கி முடிவில் பெரியதாய் விரிவடைகின்றதை இந் நதி எங்களுக்குக் குறிப்பித்தது.

அதன் கரையில் உள்ள **கோடிலிங்கேச்சுரரை** வணங்கி வழிபட்டோம்.

அங்கிருந்து ½ கல் தொலையில் கோதாவரி நதிக்கரையில் உள்ள **மார்க்கண்டேச்சுரர்** என்ற சிவாலயத்தையுந் தெரிசித்தோம்.

அங்கிருந்து 5 கல் தொலையில் உள்ள தவளேச்சுரம் போய் கோதாவரி அணையைப் பார்த்தோம். திரும்பி வரும் வழியில் **அகத்தீச்சுரரையும்**, **ஜனார்த்தனப் பெருமானையும்** சேவித்தோம். **அகத்தீசர்** சுயம்புலிங்கம்.

கோதாவரி தெற்கு நோக்கி ஓடுகின்றது. தண்ணீர் சான்றோர் கவியெனத் தெளிந்திருக்கின்றது. "புவியினுக் கணியாய்" என்ற கம்பர் கவியை நினைவு கூர்ந்தோம். அது முற்றிலும் இங்குப் பொருந்தும். கோதாவரிநதி பாய் வதனால் இப்பக்கம் நல்ல வளப்பத்துடன் கூடித் திகழ் கின்றது. விளைபொருள்கள் மலிவாகக் கிடைக்கின்றன. காகிதஞ் செய்யும் தொழிற்சாலை உளது. மொழிவிளங்காத வடநாட்டில் 3 மாத காலமாகச் சுற்றித் திரிந்த எங்களுக் குச் சகோதர மொழியாகிய ஆந்திரம் பேசும் இந்நாட்டிற்கு வந்தவுடன் மகிழ்ச்சி ஏற்பட்டது.

மாலை கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 12-12 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது.

## **விஜயவாடா** (கிருஷ்ணநதி)

ஜய—மார்கழி 20 (4—1—55)

காலையில் விஜயவாடா சந்திப்பை அடைந்தோம். வண்டியை விட்டிறங்கி ஒரு கல் தொலையிலுள்ள **கிருஷ்ண** நதிக்குச் சென்றோம். கிருஷ்ண நதியின் அணைக்கட்டும் அங்கே இருக்கின்றது.

நதி சுமார் ஒரு கல் விசாலம் உளது. தண்ணீர் ஆன்றோர்களின் உள்ளம்போல் தெளிவாக ஓடிக்கொண் டிருக்கின்றது. பல பகுதிகளில் அன்று ஏகாதசியானதி னால் ஆயிரக் கணக்கான மக்கள் குளித்துக்கொண்டிருந் தார்கள். நாங்கள் சென்று குளிப்பதற்கிடமின்றி திகைத்து நின்று, பின்னர் ஒருவாறு நெருக்கத்துக்குள் சென்று அம் மாநதியில் நீராடினோம் நதி மேற்கேயிருந்து கிழக்கு நோக்கி ஓடுகின்றது.

அருகில் சிறு மலை மீதுள்ள **கனகதுர்க்கா** என்ற அம்பி கையின் கோயிலுக்குச் சென்று தெரிசித்தோம். அம்பிகை மிகுந்த அழகு. அக் கோயிலுக்கருகிலுள்ள சிவாலயம்

சென்று சிவமூர்த்தியைத் தெரிசித்தோம், சுவாமி பேர் **விஜயேச்சுரர்.**

ஊருக்குள் சிவமூர்த்தி, ஸ்ரீராமர், திருமால் என்ற மூன்று மூர்த்திகள் உள்ள கோயிலுக்குச் சென்று தெரிசித்தோம். பின்னர் நித்திய வழிபாடு செய்தோம்.

விஜயவாடா பெரிய நகரம். அழகிய கடை வீதிகள். மாலை கடை வீதிகளையெல்லாம் பார்த்தோம். மாலை கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 10 மணிக்கு எங்கள் வண்டி பத்ராசலத்தை நோக்கிப் புறப்பட்டது.

## பத்ராசலம்

ஜய—மார்கழி 21 (5—1—55)

விஜயவாடாவிலிருந்து எங்கள் வண்டி தோரனக்கல் வழியாக விடியற்காலை 5 மணிக்கு **பத்ராசலம் ரோடு** என்ற புகைவண்டி நிலையத்தை யடைந்தது. அதற்கு முன்னரேயே நாங்கள் வண்டியில் நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

காலையில் துவாதசி பாரணம் செய்துகொண்டு 11-மணிக்கு பஸ் ஏறி பத்ராசலத்தை அடைந்தோம். பஸ் கட்டணம் ஆள் 1-க்கு 1-1-3. பத்ராசலம் ரோடிலிருந்து பத்ராசலம் 20கல் தொலை.

பஸ்ஸை விட்டிறங்கி **கோதாவரி** நதியைத் தோணியில் கடந்தோம். தோணிக் கட்டணம் ஆள் 1க்கு 0-4-0. நதிக் கரையில் சிறிய குன்றும் குன்றைச் சார்ந்த மேட்டில் கோயிலும் மிக அழகாக இருக்கின்றன.

பரம பக்த சிகாமணியாகிய **ஸ்ரீ ராமதாஸர்** (கோபன்ன) புதுக்கிய கோயிலும், கோபுரமும், மண்டபங்களும், தங்க முலாமிட்ட சிகரமும் அவருடைய அன்புச் சின்னமாக அங்கு காட்சி அளிக்கின்றன.

கோதாவரி நதி வடக்கிலிருந்து தெற்கு நோக்கித் தெளிவாக ஓடுகின்றது. நதிக்கு மேற்கேயுள்ள பகுதி **நைஜாம்** அரசாங்கத்தைச் சேர்ந்தது. நதிக்குக் கிழக்கேயுள்ள பகுதி **ஆந்திர** மாகாணத்தைச் சேர்ந்தது.

1654 முதல் 1687 வரை **ஹைதராபாத்தில் அப்துல் உசேன் தானீஷா** என்பவர் அரசாண்டு கொண்டிருந்தார். **நல்ல கொண்டபல்ல** என்ற ஊரில் அவதரித்த **கோபன்ன** என்ற **ராம தாசர்** தானீஷாவிடம் தாசில் வேலையிலமர்ந்திருந்தார். அவருடைய தாய் மாமன் **அக்கன்ன** என்பவனால் அவ்வேலை அவருக்குக் கிடைத்தது. **கோல்கொண்டா** என்ற ஊரிலிருந்து அவர் அந்த வேலையைப் பார்த்து வந்தார்.

மன்னவனுக்குச் சேர்ப்பிக்கும் வரி வசூல் பணம் ஆறுலட்சம் ரூபாயைச் செலவழித்து **பத்ராசலம்** என்ற இத் தலத்தில் பழுதுபட்டுக் கிடந்த **ஸ்ரீராமர்** கோயிலைப் புதுக்கி கோபுரம், மண்டபம், வெள்ளி வாகனங்கள், திருவாபரணங்கள், நித்திய பூஜைக்குரிய நிபந்தங்கள் இவைகளை அமைத்தனர். அதனால் வெகுண்ட மன்னன் இவரை 12 ஆண்டு சிறையிலடைத்ததும், ஸ்ரீராமரும் லட்சுமணரும் நள்ளிரவில் சென்று தானீஷா மன்னனிடம் ஆறுலட்சம் ரூபாயும் கொடுத்து பற்றுச் சீட்டு வாங்கி வந்து மயங்கியிருந்த கோபன்னவிடம் சேர்த்ததும் உலகமறிந்த பெரு வழக்கு.

தலைமுறை தலைமுறையாக எத்தனையோ பேர்கள் தாசில் வேலை பார்த்து மடிந்து மண்ணாகிப் போனார்கள். கோபன்ன என்பவர் தாசில் வேலை பார்த்து நெருப்புக்கும் நெருப்பாக இருந்த தானீஷா மன்னனுடைய கோப தாபத்தைப் பொருட்படுத்தாமல், ராமபக்தி ஒன்றே பரம சுகம் என்று கருதி திருப்பணி செய்ததனால், அவர் இன்றும் பொன்றாப் புகழுடன் விளங்குகின்றார். தானீஷா மன்னனும் புகழுடம்பு பெற்றனன்.

இவ் வரலாறு நிஜாம் மன்னருடைய சரித்திர வரிசையில் இன்றும் நிலைத்து நிற்கின்றது. இதற்குச் சான்றாக இன்றும் நைஜாம் அரசாங்கத்திலிருந்து ஆண்டுதோறும் இருபதினாயிரம் ரூபாய் இக் கோயிலுக்கு வழங்கப் பெறுகிறது. இக் கோயில் நிருவாகக் குழுவிற்கு முகம்மதிய அன்பரே தலைவராக இருக்கின்றார். ஸ்ரீராமதாசர் செய்து வைத்த திருவாபரணங்களை அரசாங்கத்தார் நன்கு பாதுகாத்து வருகின்றார்கள்.

நாங்கள் தோணியை விட்டிறங்கி நேரே கோயிலுக்குச் சென்றோம். அந்த அழகிய கோயிலையும், தங்க விமானத்தையும் கண்டு களித்தோம். ராமரும் சீதையும் அமர்ந்த வண்ணமாகவும், அருகில் இலட்சுமணர் நின்ற வண்ணமாகவும் இருக்கின்றார்கள். கோயிலைச் சுற்றி 12 ஆழ்வார்களுடைய சிறு கோயில்களும் இராமர் சந்நிதிக்கு நேரே இராமதாசருடைய சிறிய கோயிலும் இருக்கின்றன. இராமதாசர் திருவுருவம் கையில் தம்பூரா வைத்துக் கொண்டு ஸ்ரீராமரைப் பாடுவதுபோல் இருக்கின்றது.

**பத்ரன்** என்ற முனிவருக்கு ஸ்ரீராமர் அருள் செய்தபடியால் **பத்ராசலம்** என்ற பேர் இம் மலைக்கு ஏற்பட்டது. இக் கோயிலுக்கருகில் சற்று மலைமீது ஏறினால் **குஷ்ணஹரநாதர்** என்ற புராதனமான **சிவாலயமும்** அதற்கருகில் இராமதாசர் நிறுவிய சிறிய சிவாலயமும் இருக்கின்றன. அங்கிருந்து சிறிது மலைமீது ஏறினால் இராமதாசருக்கு முத்தி கிடைத்த இடமும், அதற்குச் சிறிது தூரத்தில் ஒரு சிறிய பள்ளிகொண்ட மூர்த்தியின் கோயிலும் இருக்கின்றன.

இராமதாசர் செய்து வைத்த வெள்ளி அனுமவாகனம், வெள்ளி கருடவாகனம், வேறுபல வாகனங்களும் இருக்கின்றன. பத்ராசலம் சிறிய ஊர். அருகில் கோதாவரி நதி ஓடுவதனாலும், சிறிய மலையும், மரங்களும்

அடர்ந்து இருப்பதனாலும் இயற்கைக் காட்சி இனிமை யாகத் திகழ்கின்றது.

மாலையில் கோதாவரியில் நீராடி வழிபாடு செய்தோம். இரவிலும் கோயிலுக்குச் சென்று தெரிசித்தோம்.

ஜய—மார்கழி 22 (6—1—55)

காலையில் கோதாவரியில் முழுகி நதிக்கரையிலேயே நித்திய வழிபாடு செய்தோம். காஞ்சிபுரத்திலிருந்து எனது நண்பர் திரு தி.அ. சண்முகம் செட்டியார் அவர்கள் வந்து சேர்ந்தனர். மீளவும் கோயிலுக்குச் சென்று சுவாமி தெரிசனம் செய்து திரும்பினோம். தோணி ஏறி ஆற்றைக் கடந்து பஸ் ஏறி பத்ராசலம் ரோடு புகை வண்டி நிலயத்திற்கு பகல் 1 மணிக்கு வந்து சேர்ந்தோம். மாலையில் கூட்டு வழிபாடு செய்தோம்.

## மங்களகிரி

ஜய—மார்கழி 23 (7—1—55)

அதிகாலை 5 மணிக்கு எங்கள் வண்டி விஜயவாடாவை அடைந்தது. நாங்கள் அதிகாலையிலேயே நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாடு செய்தோம்.

காலை 8-30 மணிக்குப்புறப்பட்டு வேறு சிறிய புகை வண்டியில் ஏறி 7 கல் தொலையுள்ள (0-3-0 டிக்கட்டு) **மங்களகிரி** என்ற தலத்தையடைந்தோம். புகைவண்டி நிலயத்திற்கு ½ கல் தொலையில் இத்தலம் அமைந்துளது. மலையின் நடுப்பகுதியில் **பானக நரசிம்ம சுவாமி** கோயில் உளது. 409 படிகள். சுலபமாக ஏறலாம். மலை மீது ஏறி சுவாமி தெரிசனை செய்தோம். மலையை ஒட்டி அம் மூர்த்தியுளது. வாய் பிளந்த வண்ணம் உளது. அதில் பானகம் நிரம்ப விடுகின்றார்கள். அது மூர்த்திக்குள் உள்ள பள்ளத்தில் செல்லுகின்றது, சுவாமி குடிப்பதாக ஜனங்கள் நம்புகின்றனர்.

அதற்குமேல் தாயார் சந்நிதியுளது. அதற்கு அருகில் பள்ளிகொண்ட சுவாமி கோயில் உளது.

அடிவாரத்தில் மல்லிகார்ச்சுன சுவாமி கோயில் உளது. இது சிவாலயம். அம்பிகை பிரமராம்பிகை.

ஊருக்குள் லட்சுமிநரசிம்ம சுவாமி கோயில். அருகில் தாயார் மகாலட்சுமி சந்நிதி. இவைகளை எல்லாம் தெரிசித்தோம். எங்கள் யாத்திரைக்கு இது கடைசித் தலம். தணிகையில் எங்கள் யாத்திரை தொடங்கியது. மங்களகிரியில் மங்களமாக முடிவு பெற்றது. நாங்கள் மங்களகிரி மல்லிகார்ச்சுனர் திருமுன், "வான்முகில் வழாது பெய்க" என்ற பாடலை ஓதி, "மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்" என்று மும்முறை உரத்த குரலில் ஓதினோம்.

மனம் அப்போது மகிழ்ச்சியுற்றது. "உலகிலேயுள்ள உயிர்கள் யாவும் குறைவு இன்றி நிறைவுடன் இன்புற்று வாழ்க" என்று வேண்டுவார் வேண்டுவதே தருகின்ற விமலன் பால் வேண்டினோம். மாலை 3-30 மணிக்கு மீண்டும் விஜயவாடா வந்தோம்.

மாலை 6–5 மணிக்கு எங்கள் வண்டி புறப்பட்டது. வண்டியில் கூட்டு வழிபாடு செய்தோம்.

## நெல்லூர்

ஜய—மார்கழி 24 (8—1—55)

இரவு 5 மணிக்கு எங்கள் வண்டி நெல்லூர் என்ற நகரை யடைந்தது.

வழக்கம்போல் வைகறையில் நீராடி மார்கழிச் சிறப்பு வழிபாடு புரிந்தோம்.

காலை வடபெண்ணை நதியில் முழுகி, நதிக்கரையில் உள்ள அழகிய ஸ்ரீரங்கநாதர் திருக்கோயில் சென்று

சுவாமி தெரிசனை செய்தோம். சுவாமி மிக்க அழகு. கோயிலும் கோபுரமும் வனப்பு மிக்கவை.

வடபெண்ணையாறு இந்த மாவட்டத்தை வளப்படுத்துகின்றது.

மூலப்பேட்டை யென்ற இடத்தில் மூலத்தானேச்சுரர் கோயிலும் உண்டு. அதற்கெதிரில் 27 அடி உயரமுள்ள பெரிய விநாயகர் உண்டு. அம்பிகை பேர் **புவனேச்வரி.**

மாலை கூட்டு வழிபாடு செய்தோம். இரவு 10 மணிக்கு எங்கள் வண்டி சென்னையை நோக்கிப் புறப்பட்டது.

ஜய—மார்கழி 25 (9—1—55)

விடியற்காலை 4-40 மணிக்கு சென்னை வரவேண்டிய எங்கள் வண்டி காலை 7-15 மணிக்கு அன்னையினும் சிறந்த **சென்னைமாநகரம்** அடைந்தது.

சென்னையில் எங்களை வரவேற்கும் பொருட்டு மிக்க அன்புடன் அடியிற் கண்ட அன்பர்கள் வந்திருந்தார்கள். மிகுந்த அன்புடனும், ஆர்வத்துடனும் வரவேற்ற அக் காட்சி மாட்சியாக இருந்தது.

உயர்திரு. நவாப்பு. T. S. ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள், நம்பியூர். சுப்ரமணியஞ் செட்டியார் அவர்கள், வேலூர். B. ஷண்முக முதலியார் அவர்கள், வேலூர். V. வரதாரெட்டியார் அவர்கள், சைதை ஆடலரசு, முத்துக் குமாரசாமி செட்டியார், சுப்ரமண்ய ராவ், C. S. தாமோதர முதலியார், வள்ளியம்மாள், உ. ப. ரத்தினவேல் முதலியார், கருப்பண முதலியார் ஸ்டோர்ஸ் மாரிமுத்து முதலியார், ஈரோடு. K. V. சுப்ரமண்ய முதலியார், பண்ருட்டி, R. K. முருகேச நாயுடு, யாழ்ப்பாணம் அரு. வேங்கடாசலம், சென்னை ஸ்ரீ அருணகிரிநாத பக்த ஜன சபை கோஷ்டியினர், வாலாஜாபாத் இந்துமத பாடசாலை

மாசிலாமணி முதலியார், பொன்னை. வையாபுரி முதலியார், வேலூர் R. அப்பாதுரை பண்டிதர், சிந்தாதிரிப்பேட்டை அமராவதி காவலன் திருப்புகழ் பக்த ஜன சபையார், சென்னை திருவருள் தவநெறி மன்றத்தார்(கிளை), கியூடன் பிளாக் கம்பெனி வ. ஆ. முருகேசன், காங்கேயநல்லூர் திருவருள் தவநெறி மன்றத்தார் (கிளை), படப்பை திரு வருள் தவநெறிமன்றத்தார் (கிளை), மேல் சாணுங்குப்பம். S.குப்புசாமிமுதலியார் மற்றும் பலருடன் சென்ட்ரல் புகை வண்டி நிலையத்திலிருந்து, திருப்புகழ் பாராயணத்துடன் புறப்பட்டு, சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பூங்காவில் உள்ள இடர் தீர்த்த விநாயகர் கோயிலுக்குச் சென்று வழிபட்டு யாத்திரையைப் பூர்த்தி செய்தோம்.

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந் நாட்டவர்க்கும் இறைவா போற்றி"
திருச்சிற்றம்பலம்.

## முடிவுரை

முருகப்பெருமானுடைய முழுமுதற் கருணையினால் பன்னெடுங்காலம் திட்டமிட்டிருந்த இந்த வடநாட்டு யாத்திரை இவ்வாறு இனிது முற்றுப்பெற்றது. 90 நாட்கள் இடையறாது புகைவண்டியில் பிரயாணம் புரிந்தத னாலும், பனி, காற்று, குளிர்ந்த நீர், இடமாற்றம் முத லிய பிரதிகூலங்களாலும் உடன் வந்த அன்பர்கட்கு யாதொரு இடருமின்றி அருளாய கவசம் அரண்புரிந்தது.

யாத்திரையின் தொடக்கத்தில் கிட்கிந்தையில் நாங்கள் பெருமழையில் நனைந்து எட்டுவகை ஸ்நானத்தில் ஒன்றாகிய **வாருணஸ்நானம்** செய்தோம். அது நாங்கள் பின்னே செய்ய இருந்த தீர்த்தாடனம், க்ஷேத்திராடனங் களுக்குத் தூய்மையடையும்பொருட்டு இறைவன் தன் கருணை மழையில் எங்களை நனைவித்தது போன்ற திரு வருட் குறிப்புச் சிந்தனைக்குரியது.

இந்த யாத்திரையால் பலப்பல அனுபவங்களைப் பெற்றேன். உடன் வந்தார்கள் ஒருவருடன் ஒருவர் பழகிய விதங்களும், சிலருடைய இதங்களும் நினைவில் பதிவு பெற்றன. யாத்திரை புரிவோருக்குப் பொறுமையும், அமைதியும் அணிகலன்களாக இருக்கவேண்டுமென்பதை நான் எப்போதும் இடையருது சிந்தித்த வண்ணமாகவே இருந்தேன்.

என்னுடன் வந்து யாத்திரை செய்த அன்பர்கள் ஒன்பது மாவட்டத்தினர்கள்.

நாங்கள் தட்சிண ரெயில்வே, மத்திய ரெயில்வே, மேற்கு ரெயில்வே, வடக்கு ரெயில்வே, கிழக்கு ரெயில்வே ஆகிய ஐந்து ரெயில்வேக்களில் 16 மாகாணங்களைச் சுற்றி சுமார் 7600 மைல்கள் பிரயாணம் செய்து 61 திருத்தலங்களைத் தெரிசித்தோம்.

தோன்றாத் துணையாக இருந்து ஒவ்வொரு கணமும் அருள்புரிந்த கருணைக் கடலாகிய கந்தவேளுக்கும், இந்த யாத்திரையை முன்னின்று எந்த வகையினாலும் குறைவின்றி நடாத்திக் கொடுத்த சென்னை பாரத் டிராவல் சர்வீஸ் உரிமையாளர்களாகிய திரு T. V. சுப்பாராவ் அவர்கள், திரு R. சுப்ரமணிய ராவ் அவர்கள், திரு S. M. கேசவலு அவர்கள் ஆகிய மூவருக்கும் உளங்கலந்த நன்றி.

---

## பாராட்டு விழா

9—1—55 ஞாயிறு மாலை 6 மணிக்கு ஸ்ரீ அருணகிரி நாத பக்தஜன சபையாரால் சென்னை பூக்கடை மல்லீஸ்வரர் கோயில் அநுபூதி மண்டபத்தில் ஓர் பாராட்டு கூட்டம் கூட்டப்பெற்றது.

திருஞானசம்பந்தர் ஆதீன இளவரசு திருப்பெருந் திரு. திருவருள் தவயோக சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகளிடமிருந்தும், ஸ்ரீ அருணகிரிநாத பக்தஜன சபை, இறைபணிக்கழகம், சிவனடியார் திருக்கூட்டம், சத்சங்கம், சென்னை, திருவருள் தவநெறிமன்றம்(கிளை) திருவள்ளுவர் செந்தமிழ்ச் சிவநெறிக் கழகம், மாம்பாக்கம் குருகுலத்தார் முதலிய சபைகளிலிருந்தும் வந்த வாழ்த்தை வாசித்தளிக்கப்பட்டது.

இவ் விழாவிற்கு திரு O. P. இராமசாமி ரெட்டியார், தலைமை தாங்கினர். புருஷோத்தம முதலியார் M. L. C., இளவழகனர், தருமபுர ஆதீன வித்வான் சோமசுந்தரத் தம்பிரான், சே. த. இராமலிங்கம் முதலியோர் பேசினர்கள். பெருந்திரளான மக்கள் குழுமியிருந்தனர். மிகச் சிறந்த முறையில் பாராட்டினர்கள்.

10—1—55 திங்கள் மாலை 5 மணிக்குக் குயப்பேட்டை கந்தசாமி கோயில் சார்பாக வரவேற்பு நடைபெற்றது. கோயில் பூரண கும்பத்தோடும்-வாத்திய விருதுகளோடும் வரவேற்று ஊர்வலமாக அழைத்து வந்து விழா துவக்கப்பட்டது.

கோயில் சார்பாக வரவேற்புரை வாசித்தளிக்கப் பட்டது. தருமை ஆதீன வித்வான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமை தாங்கினர். கி. வா. ஜகந்நாதன் அவர்கள் 'மூர்த்தி தலம் தீர்த்தம்' என்பதைப்பற்றிப் பேசினர். பிறகு, கிருபானந்தவாரியார் 'காசி யாத்திரை' என்பதுபற்றிப் பேசினர். ஆயிரக்கணக்கான மக்கள் கேட்டு இன்புற்றனர்.

௨
முருகா

# நான் பெற்ற பேறு

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்ற திருவாக்கிற்கிணங்க அடியேனுக்கு இளம் பருவம் முதல் திருத்தலங்களில் சென்று தெய்வ தெரிசனம் செய்வதிலும், பெரியவர்களுக்குத் தொண்டு செய்வதிலும் ஆர்வம் நிரம்ப இருந்து வந்தது; அத்துடன் **காசி யாத்திரை** செய்ய வேண்டுமென்ற காதலும் கனிந்திருந்தது.

*1933*. டிசம்பர் மாதம் அடியேனும் எனது நண்பர் **S. முத்துசாமி பட்டர்** அவர்களும் காசியாத்திரை செய்ய வேண்டுமென்ற கருத்துடன் புறப்பட்டு கன்னியாகுமரி, திருவனந்தபுரம், திருக்குற்றாலம், இவைகளைத் தெரிசித்துக் கொண்டு திருவில்லிப்புத்தூர் வந்தோம். அங்குள்ள நண்பர் **T. S. செல்லையா ஐயர்** அவர்கள் திருவண்ணாமலையைத் தெரிசிக்க விரும்பி எங்களுடன் புறப்பட்டார்.

இருவரும் மூவராகி திருச்சிராப்பள்ளி சென்றோம். அங்கு எங்கள் நண்பர் K. V. தியாகராஜ ஐயர் அவர்கள் எங்களுடன் வருவதற்கு விழைந்து புறப்பட்டனர்.

மூவரும் நால்வராகி தஞ்சை, திருவையாறு, அருகிலுள்ள திருக்கண்டியூர் முதலிய சப்த ஸ்தலங்கள், திருமழபாடி, திருமுதுகுன்றம், முதலிய தலங்களைத் தெரிசித்துக் கொண்டு திருவண்ணாமலை சேர்ந்தோம்.

அருணை மேவிய கருணை நாயகனைத் தெரிசித்தோம். T. S. செல்லையா ஐயர் அவர்கள் அங்கிருந்து திரும்பிச் சென்றனர். நாங்கள் மூவரும், காட்பாடி வழியாக திருவேங்கடம் சென்று ஏழுமலையேறி ஏழு பிறப்பறும் பொருட்டு சுவாமி தெரிசனம் செய்தோம்.

பின்னர் திருக்காளத்தி, திருத்தணி, திருக்கச்சி, திருவாலங்காடு, முதலிய திருத்தலங்களைத் தெரிசித்துக் கொண்டு சென்னைமா நகரம் சேர்ந்தோம்.

எங்கள் கையிலிருந்த பணம் குறைந்துவிட்டது. காசிக்குச் சென்று திரும்ப இயலாதெனத் தெரிந்து பணம் அனுப்புமாறு நெல்லைக்கு எழுதினேன்.

"தூத்துக்குடி பெரியப்பா பே. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் வைகாசி மாதம் காசிக்குப் போக இருப்ப தால் அப்பொழுது நீ போகலாம்; இப்பொழுது நேரே நெல்லைக்கு வந்துவிடு" என்று என் தாயார் கடிதம் எழுதி யிருந்தனர். தாய் சொல்லைத் தட்டமாட்டாமல், K. V. தியாகராஜ ஐயர் அவர்கள் சென்னையில் தங்க விரும்பிய படியால் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, S. முத்து சாமி பட்டர் அவர்களும் அடியேனும் சிதம்பரம், மதுரை, முதலிய தலங்களைத் தெரிசித்துக் கொண்டு நெல்லை வந்து சேர்ந்தோம்.

இந்த முதல் முறையில் எங்கள் முயற்சி முற்றுப் பெறவில்லை. ஆனால் குருநாதர் பிறப்பிடமாகிய காங்கேய நல்லூரைச் சுற்றி வரும் பேறு கிடைத்தது.

1935 டிசம்பரில் அடியேனும் நண்பர் T. S. செல்லையா ஐயரும் மீளவும் புறப்பட்டு, திருவதிகை, திருக்கோவிலூர் சென்று தெரிசித்து சென்னை சேர்ந்தோம்.

அப்போது சென்னையைச் சார்ந்துள்ள திருவான் மியூரில் அத்தியாச்சிரமி சுத்தாத்வைத ஞானபாநு ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுக்குப் பரம கருணாநிதியாகிய முருகப் பெருமான் காட்சி கொடுத்த நல்விழாவாகிய மயூரவாகன சேவன விழா நிகழ்வதாக அறிந்து, திருவான்மியூர் சென்றோம்.

மயூரவாகன சேவன விழா இரவில் இறைவனுடைய விருதுகளுடன் சகல உபசாரங்களுடன் நிகழ்ந்தது.

அப்போது குருநாதர் திருப்புகழ் கோஷ்டி செய்து வந்தனர். அச்சமயம் நாங்கள் சந்திக்கவில்லை. விடியற் காலை கோஷ்டி முடியும் சமயம் "நிருதரார்க்கொரு காலா" என்ற திருப்புகழைப் பாடி அதற்கு விரிவுரை செய்யும் பொழுது நாங்கள் கண்டும் கேட்டும் களித்தோம். 'இவர்கள் செய்யும் விரிவுரை மதுரை திருப்புகழ் சுவாமி அவர்கள் செய்யும் விரிவுரைபோல் இருக்கிறது. இரவில் இதைக் கேட்கும் பேறு கிட்டவில்லையே' என்று வருந்தினோம்; முடிவிலாவது சிறிது கேட்கும் பேறு கிடைத்ததே என்று திருப்தியும் அடைந்தோம்.

மறுநாள் பகலில் அங்கு சமாராதனை நிகழ்ந்தது. எங்களுக்கு எதிர் வரிசையிலிருந்து குருநாதர் அவர்கள் உணவு அருந்தினார்கள். நாங்கள் நெல்லையில் புத்தகக் கடையில் இருந்தபோது 'கிருபானந்தவாரி அவர்கள் வெளியிட்ட திருப்புகழ் புத்தகம் இருக்கிறதா?' என்று பலர் கேட்டார்களே? அவர்கள் இவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று உறுதி செய்தோம். அப்பொழுது அவர்களிடம் உரையாடும் தைரியம் இல்லை. மறுநாள் மயிலையிலிருந்து நண்பர் K. V. தியாகராஜ ஐயர் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு திரும்பி நெல்லையம்பதி வந்தோம்.

இந்த இரண்டாவது முறையில் குருநாதரைத் தெரிசிக்கத்தான் முடிந்தது.

1936 டிசம்பரில் குருநாதர் தூத்துக்குடிக்கு விரிவுரை செய்ய வந்திருந்தார்கள். எங்கள் திருப்புகழ் சபையின் சார்பாக வீ. ர. கி. மகாதேவ ஐயர் அவர்களைத் தூத்துக்குடிக்கு அனுப்பி குருநாதரை நெல்லைக்கு அழைத்து வந்தோம். அப்பொழுதுதான் அவர்களுடன் உரையாடி உவக்கும் வாய்ப்பு கிடைத்தது.

பன்முறையும் நன்முறையாகச் சிந்தித்தும், செவ்வேளை எவ்வேளையும் வந்தித்தும் காசியாத்திரை விஷயமாகக் குருநாதர் அவர்களிடம் வேண்டியும் வந்தேன்.

1954-ல் குருநாதருடன் சென்று மூன்று மாதகாலம், மூவேடணை நீங்கும் பொருட்டும், மாவேழ் பிறப்பு மாயும் பொருட்டும் காசி யாத்திரை புரிந்தேன்.

1933-ல் தொடங்கிய யாத்திரை 1954-ல் முற்றுப் பெற்றது. மூவேழ் சுற்றம் இருபத்தொன்றும் ஈடேற இருபத்தொரு வருடங்களுக்குப் பின் விசுவநாதரின் திருவருளாலும், குருவருளாலும் நிறைவேறியது.

ஆகவே செல்வ வலிமையினாலும், துணை வலிமையினாலும், உடல் வலிமையினாலும் காசி யாத்திரையும், கங்கா ஸ்நானமும் கிடைக்கமாட்டா. திருவருள் கூட்டி வைத்த பொழுதே கிடைக்கும்.

இப் பெரும் புனித யாத்திரையாகிய பெரும்பேறு கிடைக்க அருந்துணையாய் நின்ற குருநாதர் அவர்களுக்கு வணக்கமும் நன்றியும் செலுத்தி என்றும் அவர்களுக்கு கடமைப்பட்டுள்ளேன் என்பதை அன்புடன் அறிவித்துக் கொள்ளுகின்றேன்

அடியேன்

**வீ. சங்கரன் பிள்ளை** என்ற

**வீ. சங்கர நாராயண பிள்ளை**

திருப்புகழ் சபை, திருநெல்வேலி.

## சில ஹிந்துஸ்தானி வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| அரிசி | ... | ச்சாவல் |
| கோதுமை மாவு | ... | கேஹுக்கா ஆட்டா |
| துவரம் பருப்பு | ... | அர்ஹர்க்கா தால் |
| பைத்தம்பருப்பு | ... | மூங்குக்கா தால் |
| உளுத்தம்பருப்பு | ... | உருதீக்காத் தால் |
| நெய் | ... | க்கீ |
| கடுகு | ... | ருயீ |
| உப்பு | ... | நிமக் |
| புளி | ... | இம்லீ |
| மிளகாய் | ... | மிர்ச்சா |
| மிளகு | ... | காலீமிர்ச் |
| வெந்தயம் | ... | மேத்தீ |
| ஜீரகம் | ... | ஜீரு |
| பெருங்காயம் | ... | ஹீங் |
| சீனி | ... | ச்சீனீ |
| ரவை | ... | ரவா, ஸூஜீ |
| ஜவ்வரிசி | ... | ஸாபூதாணு |
| இலை | ... | பத்ரீ |
| வெத்திலை | ... | பர்ன் |
| பாக்கு | ... | ஸுபாரீ |
| நல்லெண்ணெய் | ... | தில்க்கா தேல் |
| தேங்காயெண்ணெய் | ... | நரியல்க்கா தேல் |
| வெல்லம் | ... | குடு |
| தீப்பெட்டி | ... | தியாஸலாஇ |
| தேயிலை | ... | ச்சாய் |
| பால் | ... | தூத் |
| தயிர் | ... | தஹீ |
| காய்கறி | ... | தர்க்காரீ |
| விறகு | ... | லக்டி |

| | | |
|---|---|---|
| வா | ... | ஆவ் |
| போ | ... | ஜாவ் |
| நீ | ... | தும் |
| நான் | ... | ஹம் |
| அவன் | ... | வஹ் |
| எங்கே | ... | கஹாங் |
| அங்கே | ... | வஹாங் |
| ஸரி | ... | அச்சா |
| அப்புறம் | ... | ப்பிர் |
| இருக்கிறது | ... | ஹை |
| இல்லை | ... | நஹீ |
| ஆமாம் | ... | ஹாங் |
| உன் பெயர் என்ன? | ... | துமாரா நாம் கியாஹை |
| இந்த ஊர்பெயர் என்ன | ... | யஹ் ஷகர்க்காநாம் கியாஹை |
| இவ்விடத்திலிருந்து ஸ்டேஷன் எவ்வளவு தூரம்? | ... | யஹாஸே ஸ்டேஷன் கித்ந தூர்ஹை |
| வண்டிக்கு சார்ஜ் என்ன? | ... | காடிகா கியா கிராயாஹை |
| சீக்கிரம் போ | ... | ஜல்தீ ஜாவ் |
| பாக்கி பைசா கொடு | ... | பாக்கீ பைசா தேவ் |
| எனக்கு தெரியாது | ... | ஹம்கோ மாலும் நஹீ |
| நீயார்? | ... | தும் கோன் ஹை |
| இது என் சாமான் | ... | யஹ் ஹமார ஸாமன் ஹை |
| ஒன்று | ... | ஏக் |
| இரண்டு | ... | தோ |
| மூன்று | ... | த்தீன் |
| நாலு | ... | ச்சார் |
| ஐந்து | ... | பாஞ்ச் |
| ஆறு | ... | ச்சே |
| ஏழு | ... | ஸாத் |
| எட்டு | ... | ஆட் |
| ஒன்பது | ... | நௌ |
| பத்து | ... | தஸ் |
| கால் அணு | ... | ஏக் பைஸா |
| ஒண்ணேகால் அணு | ... | ஸவா அணு |
| இரண்டரை அணு | ... | அடாயீ அணு |
| மூன்றரை அணு | ... | ஸாடேதீன் அணு |

| | | |
|---|---|---|
| கால் சேர் | ... | பாவ் சேர் |
| அரை சேர் | ... | ஆதா சேர் |
| முக்கால் சேர் | ... | தீன்பாவ் சேர் |

## மருந்து ஸாமான்களின் பெயர்

| | | |
|---|---|---|
| சுக்கு | ... | ஸோண்ட் |
| மிளகு | ... | காலீமிர்ச் |
| திப்பிலி | ... | பிப்பல் |
| நருக்குமூலம் | ... | பிப்பலாமூல் |
| சித்தரத்தை | ... | குலின்ஜன் |
| அக்கருகாரம் | ... | அகர்கரு |
| வசம்பு | ... | பச் |
| கடுகுரோகினி | ... | குட்கீ |
| சதகுப்பை | ... | ஸொவாக்காதாரு |
| திராக்ஷா | ... | முனக்கா |
| ஓமம் | ... | அஜவாஇன் |
| வால்மிளகு | ... | ஸீதல்சீனி |
| பெரண்டை | ... | ஹர்ஜொட் |
| சீந்தில்கொடி | ... | குர்ச் |
| நிலவேம்பு | ... | சிருயதா |
| கடுக்காய் | ... | ஹர்ரு |
| தாணிக்காய் | ... | பஹர்ரு |
| நெல்லிக்காய் | ... | ஔரு |
| வாயுவிளங்கம் | ... | பாய்பிரங்கு |
| மூங்கில் உப்பு | ... | பன்சலொசன் |
| கண்டங்கத்திரி | ... | பட்க்கடையா |
| ஆடாதொடை | ... | அடூஸா |
| அமுக்கிராங் கிழங்கு | ... | அஸகந்த் |
| மணத்தக்காளி | ... | மகொய்யா |
| இஞ்சி | ... | அதரக் |
| தேன் | ... | சஹத் |
| லவங்கம்பட்டை | ... | தால்ச்சீனி |
| ஜாதிக்காய் | ... | ஜாய்ப்பல் |
| ஜாதிபத்திரி | ... | ஜாய்ப்பத்திரீ |
| ஏலக்காய் | ... | இலாயசீ |



ENQUIRE "WHO AM I"! KNOW THE SELF !! AND BE FREE !!!

# The Yoga Vedanta Forest University

ANANDA KUTIR, RISHIKESH, INDIA. HIMALAYAS.

Tat Twam Asi

WHEREAS, by the Grace of God, the Fountain of Eternal Bliss, and by The Will of the Almighty, it has been recognised that Sri Thirumuruga Kripananda Variar madras is worthy of being awarded The sacred title of Thiruppugazh Jyoti in appreciation of Meritorious services rendered in the field of Spiritual Awakening and A firm devotion to Truth, Love and Purity I hereby make this award In token of such recognition, with my best wishes and devout prayers To the Lord to bless the recipient hereof with health, long life, peace, prosperity Eternal Bliss, success in all undertakings, Vidya, Tushti, Pushti and Divine Aiswarya

This 4th day of December 1954.

Swami Sivananda

Chancellor

ரிஷிகேசம் ஆனந்த குடீர் ஆசிரமம் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்களால் ஆசிரியர் திருமுருக. கிருபானந்தவாரி அவர்கட்கு (4—12—54ல் விஜயம் செய்தபோது) "திருப்புகழ் ஜோதி" என வாழ்த்தியளித்த நல்லுரை.